# ABRIDGMENT

OF

# THE NAN-NUL;

WITH

THE ORIGINAL TEXT,

EXPLANATIONS, EXAMPLES AND NOTES.

G. P. SAVUNDRANAYAGAM PILLAI,

VERNACULAR TRAINING MASTER, GOVERNMENT NORMAL SCHOOL, MADRAS;
FORMERLY HEAD MASTER, NORMAL SCHOOL CHEYUR, KOAMBUTUR



MADRAS.

PRINTED AT THE PRESS OF THE SOCIETY FOR PROMOTING CHRISTIAN
KNOWLEDGE, CHURCH STREET, VEPERY.

1861.

# நன்னூற் சுருக்கம்:

## உரை பாடம்.

---

முன்பு கோயம்புத்தூர் ஜில்லாவைச்சேர்ந்த சேலூர் நார்மல்
ஸ்கூல் தலைமை உபாத்தியாயர் ஆயும்

இப்போது

சென்னபட்டணத்துக் கவர்ன்மென்ற் நார்மல் ஸ்கூலில்
சுதேச பாஷாபோதனை முறையிற்றும்
உபாத்தியாயரும் ஆகிய

க. பே. சவுந்தரநாயகபிள்ளை

அவர்களால்

நன்னூலில்

சிறுவர்களுக்குப் பயன்படும்படி

எடுத்த இன்றி அமையாச்சூத்திரங்களும்,
அவற்றிற்குச்செய்தவெள்ளுரையும்,

---

இஃது
சென்னபட்டணம்
கிறிஸ்துமார்க்க அறிவை விருத்திசெய்யுஞ் சங்கத்தாருடைய
அச்சுக்கூடத்தில் பதிக்கப்பட்டது.

௲௮௱௬௧௵.

# ADVERTISEMENT.

The Nannúl being too large a work to be gone through in even two or three years by a class which has other subjects besides Tamil to read, I have invariably found it necessary, in teaching the book, to select for study the most important sútrams only.

This selection has been gradually enlarged, with the view of enabling students to acquire a knowledge of as many as possible of the most necessary and useful sútrams, without, at the same time, suffering materially from ignorance of those not brought before them. It is now given to the public in the shape of an Abridgment, with Explanations, Examples and Notes:—I may add that to bring the subject within the comprehension of all has been the object steadily kept in view throughout.

G. P. S.

Govt. Normal School,
Madras, *June*, 1861.

# CONTENTS.

## இயல் அடக்கம்.



# சிறப்புப்பாயிரம்.

---

சென்னபட்டணத்துக்

கவர்ன்மென்ற் நார்மல் ஸ்கூலில்

தமிழ்ப்பண்டிதராகிய

கா. இராசகோபாலபிள்ளை

அவர்கள் பாடிய

நிலைமண்டிலவாசிரியப்பா.

---

பொன்மலி குவட்டுப் பொதியிலி னமர்ந்து
கொன்மலி பதினெண் கூற்று மொழிகளுள்
தனக்கொப் பிகந்த தண்டமிழ்க் கடறரு
துன்னிய சீர்த்திசேர் தொன்மைமா தவத்தோன்
இருளற வுணர்த்திய வியன்முழு துணர்ந்த
இருமூன் றிரட்டி யிரும்புல வோர்களில்
தலைமை நனிபெறூஉம் புலமை யவனியம்
பொல்காப் புகழ்புனை தொல்காப் பியவழி
யாப்புறு நன்னூற் காப்பிய மாண்பொருள்
சிறுஅ ருளங்கொளப் பெருமொன லாயதால்
தொகுத்துச் சூத்திரம் வகுத்தவற் றுட்பொருள்
தெற்றெனக் காட்டொடு தெரித்துச் சுருக்கெனுங்
கற்றனர் பன்முறை கழறின ராக
இன்னூ லொக்கும் தொன்னூ லுளதென
றலொக்க நன்னூற் சுருக்கமொன் றியற்றினன்

கமஞ்சூற் சங்கங் கடிநறுஞ் செங்கேழ்
இமஞ்சால் கமல மிவர்ந்தீன் றாளம்
வெண்ணிலா வெறித்தல் வியன்பொலி சற்பக
டுண்ணிலா வளநிதி னாங்கில தெனவசி
கொள்வது நிகர்க்குங் குண்டுநீர் மடுக்களும்
தெள்விளித் திவவியாழ்த் திறத்துறை வளநயில்
ஆங்கு மடநலா ரமிர்தரு குதலைக்
கேட்குபு மாழ்கி யெரிபுகல் கடுப்பச்
சந்தக் கருங்குயி லுயின் றுறைதரு
செந்தளிர் கஞலிய தேமாப் பொதும்பரும்
இருசுடர்க் குடைந்தவல் லிருள்பல வுருக்கொளீஇ
உருகுகா தலியரை யுலக்குதல் சிவணச்
சாராப் பொதுளிய தண்ணரிய தேமலர்
காராக் கறிக்குங் கண்ணகன் பழனமும்
இன்னன பிறவு மன்னிவாள செல்வம்
சுற்றுமெண் ணான்கு தொகைவிரி யாலயப்
பற்றுடைத் தாகிப் பரன்சுத னாவியாம்
மும்மையு மொருமையா முழுமுத லருணிறை
செம்மைவே தாகமஞ் செப்புறா கடைப்பிடி,
தத்தக வொழுகா வகம்புற மொருப்படும்
வித்தகர் வதிய விளங்கியாழ்ப் பாணத்
தொண்ணகர் வண்ணையி னண்ணரிய செல்வன்
கண்ணெனப் படுவன கற்றோருங் கறிந்த
அண்ண லளவைநூ லறிஞ னடாநெறி
தபுதயா சீலனுங் கபிரியேன் மன்னன்
செய்தவப் பயனெலாஞ் சிறந்தமா னிடனு
வெய்திய வென்றுல கேத்துபுத் திரமணி
நவந்தரு மங்கிலோ நலங்கிளர் கல்விதேர்
சவுந்தர நாயகத் தமிழ்ப்பா வலனே.

ம.ள.ள. ஸ்ரீ. கா. பச்சையப்பமுதலியாரது
சென்னைக்கல்விச்சாலையில்
தமிழ்த்தலைமைப் புலமைநடாத்தும் வித்வான்
ஆ. சுப்பராயபிள்ளை
அவர்கள் செய்த
எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காவலர் நறுந்தேன் றெவிட்டிவண் சுரும்பர்
காமரா முரலும்யாழ்ப் பாணப்
பூவலர் வண்ணைச் சவுந்தர நாய
கப்பெரும் புலவனெம் புனிதன்
நாவலர் பூவா நாவல ரோத்த
நயமுணர் சிறுவர்க டெளியத்
தூவலர் நன்னூற் சுருக்கமென் றுருநூ
றுருத்துநன் கச்சியற் றினனால்.

கோயம்புத்தூர் ஜில்லாவைச்சேர்ந்த
சேயூர் நார்மல் ஸ்கூல்
தலைமை உபாத்தியாயர் ஆகிய
சி. வேலுப்பிள்ளை
அவர்கள் பாடிய
நிலைமண்டிலவாசிரியப்பா.

திருவருள் சிறக்குமெய்த் தெய்வநன் னூலின்
பொருள்தக வாய்ந்து பொறையுட னோர்ந்து
பாலகர் பருகிப் பயன்பெற வெண்ணி
ஞாலம் புகழ்மெய்ஞ் ஞானச் செயுள்சமைத்

தாயின பின்ன ரருந்தமிழக் கடலுட்
போயின ரெவரும் புகழ்க்கரை நண்ணத்
தானே முதலாய்த் தனிநா வாயே
மான நூலை மலைவற வகுக்கவும்
அலகில் விதியுள் அங்கிலோ பாடை
இலகி நசைதரு மிகலில் கணிதமாம்
அங்கம் வீச மருந்திரி கோணம்
பொங்கு குகோளம் பொருவில் ககோளம்
அஃகி மனத்தை அகற்று நூலாம்
வெஃகிக் கற்க விருப்பு மிகத்தருஞ்
சலமொளி காற்று சகமுலாம் பொருளின்
பலவா றுய்விரி பன்னரு நூற்பொரு
ளாயதரு தருமனை யாயிக மானத
மேயவிஞ் ஞைசகள்மலி யிரசா யனமாம்
பலகலை வித்தை பயிலுமா ணாக்கர்
சிலகா லத்திற் செழுந்தமி ழிலக்கணம்
வழுவற வோதநேர் வழிமுன் னிலையாற்
பழுதற வொன்று பயந்திட வெண்ணியும்
எண்மைய பொருளைத் திண்மைய மொழியா
னண்ணிய விதிகெழீஇ நயலிற் புகழ்மிக
வோங்கிப் பெருகுமென் றன்னிய மூதோர்
தாங்கிய வழிபெருந் தவறென் றெண்ணியே
யிலக்கிய மாந்திட் டிலக்கண மீந்த
நலத்தகு கலைப்பல வைந்திநன் னூலின்
மரக்கல மூர்வழி மலைசுழி புணையுநற்
றரக்கனி செறியுமுற் றனைமுட் போது
மரும்விதி யனைத்து மாய்ந்தவை களைந்து
தரும்வழி யதனற் றகைத்தொட ராமலுஞ்
சுருங்கிய வாற்றுற் சுதமயக் கிலாமலும்
பெரும்பய னுடாப் பெட்புறப் பொழிப்புரை
கலமலி சீர்சால் நன்னூற் சுருக்கமென்

## சிறப்புப்பாயிரம்.

றலமலி பெயர்புனைந் தச்சியற் றினனால்
பன்னரு முறையாற் பயின்று நிரம்பிய
தன்னகத் துயர்நிச தனமா மறிவினாற்
றன்னகத் துறுநிசி தாரப்பி வீட்டலா
லென்னரு சசியொளி இகல்நிறை அறிஞன்
மன்னிய நனித்துணர் வகைமையிற் குசைநுனி
துன்னிய வச்சிரத் துகளறு கூர்மைய
னெண்ணில் வனங்களு மியல்புட னமைந்து
மண்ணி லுதித்தநன் மதியெனத் தோன்றி
யிலகொளி மல்கிடு மிலங்கைத் தீவிற்
பலவளம் பெற்றுமெய்ப் பயன்பிறர்க் காகக்
கலையுணர் வளித்தசற் கபிரியே லிறைபர
னிலைவழி மருவி நினைந்தது யகத்தின்
றவந்தவ ருமற் றந்தநன் மகலையாஞ்
சவுந்தர நாயகத் தமிழ்நூல் வலனே.

சென்னபட்டணத்து
மதிறஸ்ஸா-இ-ஆசம் என்னும் பாடசாலையில்
உதவி உபாத்தியாயர் ஆகிய
கோயம்புத்தூர் ஜில்லாவைச்சேர்ந்த
நல்லூர் ஸ்ரீ. சிதம்பரமுதலியார்
பாடிய
நிலைமண்டிலவாசிரியப்பா.

———

சகம்புடை வளைகட லகங்கையின் முகந்தற
றுகர்ந்துவி ணிகந்ததென் னகந்தனை யுகந்துவாழ்
பெருந்தவப் புயறா வருந்தமிழ்ப் பரவையி
னரும்பொருட் டுறைசெல பொருநிய மரக்கல

சிறப்புப்பாயிரம்.

னத்தரு மிலக்கண மனைத்துநீண் முதல்வழி
த்துறு சார்பெனத் தனித்தனி வகைதொகை
ழுக்கிசைந் திருப்பினு மிழுக்கலி லிலக்கிய
த்திறத் தினர்க்கல தெழுத்துமோர் வரிதெனுங்
த்தையுற் றெண்ணிலர் தணத்தலி னெவருமோர்ந்
ளர்ச்சிபெற் றிடத்தொகுத் திணக்கியோர் நூற்குறை
ளிப்படை பெறவருந் தளிப்பது நலனென
த்தம திசைபரி மளித்திடப் புவிமிசை
ன்னூ லெனத்திக ழெந்நூ லினுமிக
னூல் வழங்கலி னந்நூ லினுட்பல
க்கணத் தவிர்மதி கடுத்திரு வழக்கினு
த்தருந் திரம்பல வெடுத்தகங் கையினுளா
கமா மெனப்பொரு ளிலகவோ துநர்மருள்
லகவீ தமைந்ததென் றுலகமுள் ளுவப்புறச்
நக்கநன் னூற்பெய ரிருத்தியவ் வாறுறை
தரித்துதா ரணங்களும் பொருத்தியச் சியற்றினர்
நாட்டலர்ந் தண்டலை மாட்டளி றுதைந்திசை
ட்டியாழ்ப் பாணநன் னாட்டில்வண் ணையம்பதி
றுவிய கபிரியேல் வலம்புரி யுதவுமெய்
ருவளர் புகழொளி பெருகுதண் ணித்திலஞ்
சந்தமிழ்க் கலையெலாஞ் சேர்ந்தபூ ரணமதி
ந்துமாங் கிலப்பெருஞ் சிந்துவுக் கோர்புணை
சன்னையிற் போதனைத் திறங்கிளர் சாலையின்
ன்னுதூண் டெல்பெரு மாமணித் தீவிகை
மெனக் கற்றநுண் ணறிவினர் தமதுசெந்
மதித் தெடுத்தசொன் னன்னலத் தோடியர்
வர்ந்தசீர் படைத்தநன் னெறிவழு வாவியற்
வுந்தா நாயகத் தகைமைநா வலோ.

# ABRIDGMENT

OF

# THE NANNÛL.

# நன்னூற் சுருக்கம்.

## எழுத்ததிகாரம்.—ORTHOGRAPHY

### I-வது: எழுத்தியல்.—OF LETTERS.

1. எழுத்திலக்கணத்தின் பிரிவு.—DIVISIONS OF ORTHOGRAPHY.

எண்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை
முதல்ஈ றிடைநிலை போலி என்று
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.
[எழு.சூ.2.

[மேற்கூறியபன்னிரண்டு பகுதிகளையும் உடையது அவ்வெழுத்திலக்கணம்.]

எண்.

2. எழுத்து இப்படிப்பட்டதென்பதும் அதன்வகையும்.
DEFINITION AND DISTRIBUTION OF LETTERS.

மொழிமுதற் காரணம் ஆம்அணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனஇரு வகைத்தே.
[எழு.சூ.3.

[மொழிக்கு முதற்காரணமாகிய, அணுக்கூட்டத்தால் ஆன ஒலியே எழுத்து; அது முதலெழுத்து, சார்பெழுத்து, என இரண்டுவகைப்படும்.]

---

3. முதலெழுத்தின்விரி.—KINDS OF PRIMARY ...TERS.

உயிரும் உடம்புமாம் முப்பதும் முதலே.

[எழு.சூ.4

[உயிர் எழுத்தும் மெய் எழுத்தும் ஆகியமுப்பது எழுத்துகளும் முதல் எழுத்தெனப்படும்.]

---

4. சார்பெழுத்தின்வகை.—KINDS OF SECONDARY LETTERS.

உயிர்மெய் ஆய்தம் உயிரள வொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும். [எழு சூ.5

[உயிர்மெய் முதலிய மேற்கூறியபத்தும் சார்பெழுத்தாம்.]

---

## பெயர்.

5. பெயரின் பொதுஇலக்கணம்.—DEFINITION OF NOUN.

இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

[எழு.சூ.7

[இடுகுறிப்பெயரும், காரணப்பெயரும் ஆகிய இரண்டும் பலபொருளுக்கும் பொதுப்பெயராகியும் ஒருபொருளுக்குச் சிறப்புப்பெயராகியும் வருவனவாம்.]

(உ-ம்.) மரம் . . . . . . . . . . . . . . . [இடுகுறிப் பொதுப்பெயர்.]
பனை. . . . . . . . . . . . . . . . . .[இடுகுறிச் சிறப்புப்பெயர்.]
அணி=ஆபரணம்...[காரணப் பொதுப்பெயர்.]
முடி. . . . . . . . . . . . . . . . . . .[காரணச் சிறப்புப்பெயர்.]
அந்தணன். . . . . . . . . . .[காரண இடுகுறிப்பெயர்.]

### 6. உயிர் மெய் ஆகிய இவற்றின்பெயர்.—VOWELS AND CONSONANTS.

அம்முதல் ஈராறு ஆவி கம்முதல்
மெய்ம்மூவாறென விளம்பினர் புலவர். [எழு.சூ.8.

[அ முதலாகிய பன்னிரண்டையும் உயிர் என்றும், க முதலாகிய பதினெட்டையும் மெய்யென்றும் அறிவுடையோர் சொன்னார்.]

### 7. குற்றெழுத்து.—SHORT VOWELS.

அவற்றுள், அ இ உ எ ஒக்குறில் ஐந்தே. [எழு.சூ.9.

[உயிர், மெய் என்றவற்றுள் மேற்கூறிய ஐந்தும் குற்றெழுத்தாம்.]

### 8. நெட்டெழுத்து.—LONG VOWELS.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். [எழு.சூ.10.]

[ஆ முதலிய ஏழும் நெட்டெழுத்தாம்.]

### 9. சுட்டெழுத்து.—DEMONSTRATIVE LETTERS.

அ இ உம்முதல் தனிவரின் சுட்டே. [எழு.சூ.11.

[அ, இ, உ என்கிறமூன்றும் சொல்லுக்குமுதலில் புறத்தும், அகத்தும், சுட்டுப்பொருளைக் குறிக்கவந்தால் சுட்டெழுத்தாம்.]

(உ-ம்.) அவ்வணி, இவ்வணி, உவ்வணி...... [புறத்துவந்தன.]
* அவன், இவன், உவன்........... [அகத்துவந்தன.]

* அவன் என்பதில் இருக்கிற அ, மலையன் என்பதிலுள்ள மலையாகிய பகுதிபோல, வேறுநின்று சுட்டுப்பொருளைத் தருகின்றது ஆதலால் "தனிவரின்" என்றார்: இது வினாவுக்கும் பொருந்தும்.

## 10. வினா எழுத்து.—INTERROGATIVE LETTERS.

எ யா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ இரு வழியும் வினாவா கும்மே. [எழு.சூ.12.]

[எ, யா ஆகிய இரண்டும் மொழிக்குமுதலிலும்; ஆ, ஓ, ஆகிய இரண்டும் மொழிக்கு இறுதியிலும்; ஏ இருவழியிலும் தனித்தனி வினாப்பொருளைக்காட்டவந்தால் வினா எழுத்தாம்.]

☞ இவையும் புறத்தும் அகத்தும்வரும்.

(உ-ம்.) எம்மனிதன்? யாங்ஙனம்? } முதலில் புறத்துவந்தன.
எவன்? யாவன்? } முதலில் *அகத்துவந்தன.

கொற்றனா? கொற்றனோ?...[ஈற்றில் புறத்துவந்தன.]
ஏவன்? கொற்றனே?..........[அகத்தும் புறத்தும்வந்தது.]

## 11. வல்லினம்.—HARD CONSONANTS OR PECTORALS.

வல்லினம் க ச ட த ப ற என ஆறே. [எழு.சூ.13.

[இவ்வாறும் வல்லினமாம்.]



## 12. மெல்லினம்.—SOFT CONSONANTS OR NASALS.

மெல்லினம் ங ஞ ண ந ம ன என ஆறே.
[எழு.சூ.14.]

[இவ்வாறும் மெல்லினமாம்.]

## 13. இடையினம்.—MEDIAL CONSONANTS OR GUTTURALS.

இடைஇனம் ய ர ல வ ழ ள என ஆறே.
[எழு.சூ.15.

[இவ்வாறும் இடைஇனமாம்.]

## 14. இனவெழுத்து.—KINDRED LETTERS.

ஐ ஔ இஉச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரினம் ஆய்வரல் முறையே.

[எழு.சூ.16

[இனம் இல்லாத ஐ, ஔ என்பவை ஈ, ஊ க்களுக்கு இ
மாகிய இ உ க்களைத் தமக்கினமாகப்பொருந்த முதலெழு
துகள் இரண்டிரண்டு ஓரினமாய்வருதல் முறைஆதலால்
வை இன எழுத்தெனப்படும்.]

(உ-ம்.) அ, ஆ ; இ, ஈ ; உ, ஊ ; எ ஏ ; ஐ, இ ; ஒ, ஓ ; ஔ, உ
க, ங ; ச, ஞ ; ட, ண ; த, ந ; ப, ம ; ற, ன.
ய, ர ; ல, வ ; ழ, ள ; [இவ்வாறும் ஓரினம்ஆம்.]

## 15. உயிர்மெய் வரும் விதம்.—VOWEL CONSONANTS.

புள்ளிவிட் டவ்வொடு முன்உரு ஆகியும்
ஏனை உயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாய்அதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய

[எழு.சூ.34.

[மெய்புள்ளியைவிட்டு, உயிராகிய அகரத்தோடுகூடுங்கா
த்தில் முன்னின்ற உருவே உருவமாகியும்,அகரம் அல்லாதம
றை உயிர்களோடுகூடும்போது உருவம்வேறுபட்டும், உயிரி
மாத்திரையே தனக்குமாத்திரையாகக்கொண்டு, உயிரின்வ
வடிவைநீக்கி, உயிர், மெய் ஆகிய இரண்டிடத்தும் பிறந்த "உ
யிர்மெய்" என்னும்பெயருடன், ஒலித்தலில்ஒற்று முன்னாயு
உயிர்பின்னாயும் உயிர்மெய்வரும்.]

(உ-ம்.) க்+அ=க ; க்+ஆ=கா ; க்+இ=கி ; க்+ஈ=கீ

### 16. முற்றாய்தம் வரும்விதம்.—WHEN PERFECT AIDAMS OCCUR.

குறியதன் *முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

[எழு.சூ.35.]

[புள்ளிவடிவையுடையதாகிய ஆய்தம் குற்றெழுத்தின்பின்ன உயிரோடுகூடிய வல்லெழுத்தின்மேலதாய்வரும்.]

(உ-ம்.) எஃகு, கஃசு, இருபஃது ..[வல்லினத்தின்மேல்வந்தது.]
அஃகடிய..................[புணர்ச்சிவிகாரத்தால் வந்தது.]
அஃகான்.......... ......[செய்யுள்விகாரத்தால் வந்தது.]

முற்றாய்தத்தின் தொகை எட்டு.



### 17. உயிரளபெடை.—VOWEL PROLONGATION.

இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே.

[எழு.சூ.36]

[பாட்டில் ஓசைகுறைந்தால், மொழிமுதலில், நடுவில், இறுதியில்நின்ற நெட்டெழுத்து ஏழும் அவ்வோசையை நிறைக்கத் தத்தம் மாத்திரையில்மிகுந்து ஒலிக்கும்; அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அவற்றின்பின் அவற்றிற்கினமாகிய குற்றெழுத்துகள் வரிவடிவில் அறிகுறியாய்வரும்.]

(உ-ம்.) (1.) "ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர்." [குறள். 66. 3.]
[மொழிமுதலில் அளபெடுத்தன.]

---

* இதில் "முன்" என்றது இடமுன்; உரையில் "பின்" என்றது காலப்பின்; இதுவே வழக்கத்தில் வழங்குவது; ஆதலால் பின்வரும் சூத்திரங்களிலும் "முன்" என்றதற்குப் "பின்" என்று அர்த்தம் சொல்லப்படும்.

(2.) "கடாஅயினுஞ் சான்றவர் சொல்லார்."
[நாலடி. 26. 5.]

[மொழிஇடையில் அளபெடுத்தது.]

(3) "பொருள்மேற்
படாஅ விடுபாக் கறிந்து." [நாலடி. 26.5.]

[மொழிக்கடையில் அளபெடுத்தது.]

ஔ மொழிக்கு நடுவிலும் இறுதியிலும் வராது; வரும் அளபெடை பதிதொன்பது.

மேலும், இன்னிசை அளபெடை, சொல்லிசை அளபெடை என இரண்டுண்டு.

(உ-ம்.)

(1.) "கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉங்
குற்றம் தமதே." [நீதிநெறி. 25.]

[இன்னிசையாக அளபெடுத்தது]

(2.) "எழுறப் புனல்படீஇ வித்தொ டின்பொருள்
தாழுற வழங்கி." [இராமாயணம். 1. 6. 111.]

[சொல்லிசையாக அளபெடுத்தது.]

ஆக உயிர் அளபெடை இருபத்தொன்று.

---

## 18. ஒற்றளபெடை—CONSONANT PROLONGATION.

ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாம் குறில்இணை குறிற்கீழ் இடைகடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே. [எழு.சூ.37.]

[பாட்டில் ஓசை குறைந்தால், குறில் இணைக்கீழும், குறிற்கீழும், மொழிக்கு நடுவிலும், இறுதியிலும் நிற்கும் ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள், ஃ ஆகிய இவ்வெழுத்துகள் தம் மாத்திரையில் மிகுந்தொலிக்கும்; அவ்வளபெடையை அறியும்படி அவற்றின்பின் அவ்வெழுத்துகளே வரிவடிவில் அறிகுறியாய் வரும்.]

(உ-ம்.) (1.) "கலங்ங்கு நெஞ்சமிலை காண்!"

[குறிலிணைக்கீழ மொழிக்கிடையில் அளபெடுத்தது.]

(2.) "எங்ங் கிறைவ னுளனென்பாய்!"

[குறிற்கீழ் மொழிக்கிடையில் அளபெடுத்தது.]

(3.) "மடங்ங் கலந்த மனனே!"

[குறில் இணைக்கீழ்மொழி இறுதியில் அளபெடுத்தது.]

(4.) "நங்ங் களங் கறுப்பா நாம்."

[குறிற்கீழ் மொழி இறுதியில் அளபெடுத்தது.]

(5) "எஃஃ கிலங்கிய கையராய்."

[ஆய்தம் அளபெடுத்தது.]

ஆய்தம் மொழிஇறுதியில் வராது; ஆதலால் ஒற்றளபெடை



## 19. குற்றியல் உகரம்.—SHORTENED உ.

நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலி இடை
தொடர்மொழி இறுதி வன்மைஊர் உகரம்
அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே.

[எழு. சூ.39.]

[தனிநெடில் ஏழுடனே ஆய்தம் ஒன்றும், உயிர் பதினொன்றும்,* வன்கணமும், மென்கணமும், இடையெழுத்து ஐந்தும்† ஆகிய முப்பத்தாறு எழுத்துகளுள் ஒன்று அயலாய்த்தொடர அதன்பின் வல்லெழுத்துகளுள் ஒன்றைஊர்ந்த உ குறுகும்; தனிநெடில் ஒழிந்தவற்றிற்குமேலே வேறெழுத்துகள்தொடரவும்பெறும்.]

(உ·ம்.) நாகு, கஃசு, குருகு, நந்து, கொம்பு, தெள்கு.

[இடைத்தொடரில் குற்றியல் உ ஐந்து; மற்றைத்தொடர்களில் தொகைமுப்பது; ஆகவே, குற்றியல் உ முப்பத்தைந்து; ஆயினும்பொதுவில் முப்பத்தாறென்னப்பட்டது.‡]

---

* உயிருள் மொழியின் நடுவிலும் இறுதியிலும் வராத ஔ ஒழியவே, பதினொன்றும்.

† இடை எழுத்துகளுள் வல்லெழுத்துகளோடு வராத வகரம் ஒழிய, வருவன ஐந்தாம்.

‡ நெடிலில் ஔ தொடர்ந்தகுற்றியல் உ இல்லை.

## 20. குற்றியல் இகரம்.—SHORTENED இ.

யகரம் வரக்குறள் உத்திரி இகரமும்
அசைச்சொல் மியாவின் இகரமுங் குறிய.

[எழு.சூ.38.]

[யகரத்தைமுதலிலே உடையசொல்வரக்குற்றியல் உ திரி
ந்த இகரமும், அசைச்சொல்லாகிய "மியா" என்பதில்உள்ள
இகரமும்குறியவை.]

(உ-ம்.) (1.) "வேண்டுதல்வேண்டாமை இலானடிசேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை இல." [குறள். 1. 4.]

(2.) கேண்மியா.

[குற்றியல் உகரம் முப்பத்தாறினும் ஆகும் குற்றியலிகரம்
முப்பத்தாறு, இவற்றோடு "மியா" விலுள்ள குற்றியலிகரமுஞ்
சேர்ந்துகுற்றியலிகரத்தின்தொகை முப்பத்தேழு ஆகின்றது.]



## 21. ஐ, ஔ இவைகளின்குறுக்கம்—SHORTENED ஐ AND ஔ.

தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ஔவும் முதல் அற்றாகும். [எழு.சூ.40.]

[ஐ தன்னைச்சுட்டித்தன்பெயர்சொல்லுமிடத்தில் ஒழியமற்
றைச் சொல்லின் முதல், இடை, கடை ஆகியமூன்றிடத்தி
லும், தன்மாத்திரையிற்குறுகும்; ஔ சொல்லுக்குமுதலில்
அப்படியேகுறுகும்.]

(உ-ம்.) (1.) ஐயம், (2.) நனைவு, (3.) மலை; ஔவியம்.



## 22. மகரகுறுக்கம்—SHORTENED ம்.

ணனமுன் னும்ம் வஃகான் மிசையும்மக் குறுகும்.

[எழு.சூ.41]

[ண், ன் இவைகளின்பின்னும் வவ்வின்முன்னும் வரும்மவ்
வானது தன்மாத்திரையிற் குறுகும்.]

(உ-ம்.) மருண்ம், போன்ம், திலம்வலிது.

### 23. ஆய்தக்குறுக்கம்—SHORTENED AIDAM.

லளவீற் றியைபினும் ஆய்தம் அஃகும்.

எழு.சூ.42.]

[ல, ள ஆகிய எழுத்துகளினுடைய ஈற்றுப்புணர்ச்சியினால் ஆகும் ஆய்தம்தன்மாத்திரையிற்குறுகும்.]

(உ-ம்). அஃறிணை, முஃடீது.

மாத்திரை

### 24. எழுத்துகளின் மாத்திரை.—QUANTITY.

மூன்றுயிர் அளபிரண் டாம்நெடில் ஒன்றே
குறிலோ டைஔக் குறுக்கம் ஒற்றள
பளையொற் றிஉக் குறுக்கம் ஆய்தம்
கால்குறள் மஃகான் ஆய்தம் மாத்திரை.

[எழு.சூ.41 ]

[ஒலிக்கும் அளவு உயிர் அளபெடைக்கு மூன்றும் ; நெடிலுக்கு இரண்டாகும் ; குற்றெழுத்து, ஐயின்குறுக்கம், ஔவின் குறுக்கம், ஒற்றளபெடை ஆகிய இவைகளிற்குத் தனித்தனி ஒன்றும் ; மெய்யெழுத்திற்கும், குறுகிய இகரத்திற்கும், உகரத்திற்கும், ஆய்தத்திற்கும் தனித்தனி அரைமாத்திரையும் ; மவ்வின் குறுக்கத்துக்கும், ஆய்தக்குறுக்கத்திற்கும் தனித்தனி கால்மாத்திரையும் ஆகும்.]

### 25. மாத்திரை இன்னதென்பது.—DEFINITION OF QUANTITY.

இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை.

[எழு.சூ.45.

[மனிதரிடத்தில் இயற்கையாய் உண்டாகின்றகண் இமைப்பொழுதும் கைந்நொடிப்பொழுதுமே மாத்திரையின் அளவாம்.]

## முதல், ஈறு, இடை நிலை.

## 26. மொழிக்கு முதலில்வரும் எழுத்துகள்.—INITIAL LETTERS.

பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞங வீ ரைந்துயிர் மெய்யும் மொழிமுதல். [எழு.சூ.47.]

[பன்னிரண்டு உயிர் எழுத்துகளும், முதலாகிய பத்து உயிர் ஏறியமெய் எழுத்துகளும்சொல்லுக்கு முதலில்வரும்.]

(உ-ம்.) (1.) அணி, ஆணி, இலை, ஈடு, உளி, ஊன், எறி, ஏறு, ஐப்பசி, ஒலி, ஓடு, ஔவியம்.

[மொழிக்குமுதலில் பன்னீருயிரும் வந்தன.]

(2) கரி, சலி, தடை, நரி, பசு, மணி, வழி, யவனர், ஞமலி, அங்ஙனம்.

[முதலாகியபத்து உயிர்மெய்களும்மொழிக்குமுதலில்வந்தன.]

## 27. மொழிக்கு இறுதியில்வரும் எழுத்துகள்.—FINAL LETTERS.

ஆவிஞ ணநமன் யரலவ ழளமெய்
சாயும் உகரம்நா லாறும் ஈறே. [எழு.சூ.52.]

[தனித்தும் மெய்யோடுகூடியும் வரும்பன்னிரண்டு உயிர்களும், ஞ முதலாகிய மேற்கூறிய பதினொருமெய்களும், குற்றியல் உகரமும் ஆகிய இருபத்துநான்குஎழுத்தும்மொழி இறுதியில்வரும்.]

(உ-ம்.) (1.) விள, நிலா, கனி, ஈ, வீடு, பூ, சேள, தே, பை, நொ, போ, கௌ.

[ஆவிமொழி இறுதியில்வந்தன.]

(2.) உரிஞ், மண், பொருந், மரம், பொன், சேய், நீர்,
கால், தெவ், தாழ், வாள், அஃகு.
[ஞ முதலாகிய பதினொரு எழுத்துகளும் மொழிஇறுதியில் வந்தன.]

28. மொழிக்கு இடையில்வரும் எழுத்துகள்.—CONJUNCTION OF LETTERS IN WORDS.

க ச த ப ஒழித்த ஈ[illegible] கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ர ழ வொழித் தீரெட்
டாகும்இவ் விருபான் மயக்கும் மொழிஇடை
மேவும் உயிர்மெய் மயக்கள வின்றே.
[எழு.சூ.55.]

[க, ச, த, ப என்னும் நான்கும் அல்லாத பதினான்கு மெய்களும் வேறுமெய்களோடு கூடுங்கூட்டம் வேற்றுநிலைமெய்ம் மயக்கமாம்; ர, ழ அல்லாத பதினாறுமெய்களும் கூடுங்கூட்டம் உடனிலைமெய்ம்மயக்கமாம்; இவ்விரண்டுவித மயக்கங்களும் மொழிகளின் நடுவில்வரும்; உயிர்மெய் மயங்குவதற்கு அளவில்லை.]

(உ-ம்.) (1.) அங்கம்.................[வேற்றுநிலைமெய்ம்மயக்கு.]
(2.) பக்கம்.................[உடனிலைமெய்ம்மயக்கு.]
(3.) நெல்.................[உயிர்மெய்மயக்கு.]
[மயக்கு=கூட்டம்.]



## போலி.

39. மொழி இறுதிப்போலி.—FINAL SUBSTITUTES.

மகர இறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன உளவே.
[எழு.சூ.67.]

[அஃறிணைப்பெயர்களில்* இறுதியில் நின்ற ம் ஆனது ன் ஓடு ஒத்து நடப்பனவும் உண்டு]
(உ-ம்.) "சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல்."
[மரன்=மரம்.] [நாலடி.3.10.]

☞ இவ்விறுதிப்போலியை முதலிற்சொன்னதினால் பின்வருபவைகளும் அமையும் எனக்கொள்க :—
(உ-ம்.) (1.) சுரும்பு=சுரும்பர்; வண்டு=வண்டர்.
[மென்றொடர்க்குற்றியலுகரம் அர் ஆதல்.]
(2.) பந்தல்=பந்தர்; சாம்பல்=சாம்பர்.
[சில ல் ஈற்றுப்பெயர் இறுதி ஆகிய ல் ஒற்று ர் ஆதல்.]

## 30. மொழி முதற்போலியும் இடைப் போலியும்.—INITIAL [*at the beginning of words*] AND MEDIAL [*in the middle of words*] SUBSTITUTES.

அ ஐ முதலிடை ஒக்கும் ச ஞ ய முன்.
[எழு.சூ.68.]

[அவ்வும், ஐயும் சொல்லுக்கு முதலிலும் இடையிலும் ச ஞ, ய க்களின் முன்வந்தால் ஒத்து நடக்கும்.]
(உ-ம்.) 1. பசல்=பைசல்; மஞ்சு=மைஞ்சு; மயல்=மையல்
2. அமச்சன் = அமைச்சன்; இலஞ்சி = இலைஞ்சி
அரயர்-அரையர்;

## 31. மொழி இடைப்போலி.—MEDIAL SUBSTITUTES.

ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே.
[எழு.சூ.69.]

[ஐ யின் பின்னும், ய் ஒற்றின் பின்னும் இயல்பாய் வரும் ந் ஒற்றோடு சிலவிடங்களில் ஞ் ஒற்று ஒத்து நடக்கும் என்று சொல்வாரும் உண்டு.]
(உ-ம்.) ஐந்நூறு=ஐஞ்ஞூறு; நெய் + நின்ற=நெய்ஞ்ஞின்ற.†

---

* அஃறிணைப்பெயர் என்றது பால்பகா அஃறிணைப்பெயரை.
† மண் + யாத்த=மண்ஞாத்த; பொன் + யாத்த=பொன்ஞாத்த, எனவும்வரும்

# எழுத்ததிகாரம்.

## II-வது : பதவியல்.—OF WORDS.

### பதம்.

32. பதம் இன்னது என்பதும் அதனவகையும்.—WORDS HOW FORMED AND THEIR KINDS.

எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம் அதுபகாப் பதம்பகு பதமென
இருபால் ஆகி இயலும் என்ப. [பத.சூ.1.]

[எழுத்துகள் தனித்தாவது, தொடர்ந்தாவது, அருத்தத்தைத் தந்தால் பதமாம்; அதுபகாப்பதம், பகுபதம் என இரண்டு வகைப்பட்டு நடக்கும் என்பார் அறிவுடையோர்.]

33. பகாப்பதம்.—INDIVISIBLE WORDS.

பகுப்பால் பயனற் றிடுகுறி ஆகி
முன்னே ஒன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர் வினை இடை உரி நான்கும் பகாப்பதம்.
[பத.சூ.4.]

[பிரிக்கப்படுவதினால் பகுதி, விகுதி முதலிய பயன் இல்லாமல் இடுகுறிஆகி முதற்காலந்தொடுத்து ஒன்றாய்முடிந்து நடக்கின்ற பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கும் பகாப்பதமாம்.]

(1.) நிலம், நீ, பால்.........[பெயர்ப்பகாப்பதம்.]

(2.) போ, நில், வா.........[வினைப்பகாப்பதம்.]

(3.) மற்று, ஏ, ஓ, கொல்...[இடைப்பகாப்பதம்.]
(4.) கழி, தனி, உறு........[உரிப்பகாப்பதம்.]



## 34. பகுபதம்.—DIVISIBLE WORDS.

பொருள் இடம் காலம் சினைகுணம் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.
[எழு.சூ.5.]

[பொருள்முதலிய ஆறும் காரணமாய்வரும் பெயர்ச்சொற்களும், காலத்தைக்கொள்ளும் வினைச்சொற்களும் பகுபதங்களாம்.]

(உ-ம்.) (1.) பொன்னன் .........[பொருட்பகுபதம்.]
(2.) அகத்தான்.........[இடப்பகுபதம்.]
(3) ஆதிரையான்.......[காலப்பகுபதம்.]
(4.) கண்ணன்.... ........[‡ சினைப்பகுபதம்.]
(5.) நீலன்.................[குணப்பகுபதம்.]
(6.) ஓதுவான்...........[தொழிற்பகுபதம்.]
} பெயர்.

நடந்தான்.........[தெரிநிலைவினைப்பகுபதம்.]
பெரிது... ............[குறிப்புவினைப்பகுபதம்.]

வினை என்பதனால் தெரிநிலைவினை, குறிப்பு வினை என இரண்டும் அமையும்.

"வினைபகுபதம்" என்றதனால் இருவகைவினையால் அணையும் பெயரும் பகுபதமாம்என விளங்குகின்றது.



## 35. பகுபத உறுப்புகள்.—THE MEMBERS OF DIVISIBLE WORDS.

பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியும்எப் பதங்களும்.
[எழு.சூ.6.]

‡ சினை=உறுப்பு.

[பகுதி முதலிய மேற்கூறிய ஆறு உறுப்பினுள் பொருள் அமைதலுக்குத் தக்கவைகளை நினைத்துச்சேர்த்தால் எவ்வகைப்பதமும் முடியும்.]

உ-ம்). கூனி=கூன்(பகுதி) + இ(விகுதி).

உண்டான்=உண்(பகுதி) + ட்(இடைநிலை) + ஆன்(விகுதி)

மற்றவையுமிப்படியே கண்டுகொள்க.

---

## பகுதி.

36. பகுதி இப்படிப்பட்டது.—THE ROOT DEFINED.

தத்தம், பகாப்ப தங்களே பகுதி ஆகும்.

[பத.சூ.7.]

[பகுபதங்களுள் அவற்றவற்றின் முதலில் நின்ற பகாப்பதங்களே பகுதிகளாம்.]

---

37. "செம்மை" முதலியபண்புப் பகுதிகள் விகாரப்படும் வகை.—THE INFLEXION AND COMBINATION OF INDIVISIBLE WORDS DENOTING QUALITY.

ஈறுபோ தல்இடை உகரம்இய் யாதல்
ஆதிநீ டல்அடி அகரம்ஐ ஆதல்
தன்ஒற் றிரட்டல்முன் நின்றமெய் திரிதல்
இனம்மிகல் இனையவும் பண்பிற் கியல்பே.

[பத.சூ.9.]

[செம்மை, சிறுமை முதலிய வாய்பாடுகளின் இறுதியில் உள்ள மை விகுதி கெடுதலும், நடுவில்நின்ற உ ஆனது இ ஆதலும், முதலில்நின்றகுறில் நெடில் ஆதலும், முதலில்நின்ற அ ஆனது ஐ ஆதலும், தன்மெய்நடுவில் மிகுதலும், முன்நின்றமெய் வேறொரு மெய்யாய்த்திரிதலும், வரும் எழுத்திற்கு இன எழுத்துமிகுதலும், இவைபோன்ற வேறுவகைவிகாரமும் அப்பண்பிற்கு இயல்பாம்.]

(உ-ம்.)

(1.) நல்லன்.........[நன்மையின் மை கெட்டது.]

(2.) கரியன்.........[கருமையின் மை கெட்டு, உ திரிந்தது.]

(3.) பாசி ..........[பசுமையின் மை கெட்டுமுதல் நீண்டது.]

(4.) பைந்தார்......[பசுமையின் மை, சு கெட்டு, ந் மிகுந்து அகரம் ஐ ஆனது.]

(5.) வெற்றிலை.....[வெறுமையின் மை கெட்டு, ற் இரட்டித்தது.]

(6.) சேதாம்பல்...[செம்மையின் மை கெட்டு, முதல்நீண்டு ம் த் ஆனது.]

(7.) பைந்தார்.....[ந் மிகுந்தது; "இனையவும்" என்றதினுல் கெட்டது.]



38. செய்வி, செய்விப்பி, முதலிய ஏவல்.—CAUSAL IMPERATIVES.

செய்என் வினைவழி விப்பி தனிவரின்
செய்விஎன் ஏவல் இணையின் ஈ ரேவல்.

[பத.சூ.11.]

["செய்" என்னும்வாய்பாட்டு வினைப்பகுதிகளின்பின் வி, பி என்பவைகளில் ஒன்றுவந்தால் "செய்வி" என்னும்ஓர் ஏவல்ஆம்; இவ்விகுதிகள் தம்மோடாவது,வேறுவிகுதிகளோடாவது இணைந்துவந்தால் "செய்விப்பி' என்னும்வாய்பாட்டு ஏவல்ஆம்.]

(உ-ம்.) (1.) அணி + வி = அணிவி ; உருள் + து = உருட்டு.

(2.) அணி + வி + பி + அணிவிப்பி.

உருள் + து + வி = உருட்டுவி.



## விகுதி.

39. விகுதிகள் இவை என்பது.—TERMINATIONS.

அன் ஆன் அள்ஆள் அர் ஆர் பம்மார்
அ ஆ குடு து று என் ஏன் அல் அன்

அம் ஆம் எம் ஏம் ஓமொமா டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவும் என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினும் சிலவே.

[பத.சூ.13.]

[மேற்கூறியமுப்பத்தேழும்,இவைபோல்வனபிறவும்வினைப்பகுபதங்களின்விகுதிகளாம்; பெயருக்குஞ் சிலவிகுதிகளாம்.]

| | |
|---|---|
| பெயரின் விகுதிகள்.......... | அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அ, து, இ, மார், மன், மான், கள், வை, தை, கை, பி, முன், ன், ள், ர், வ், முதலானவை. |
| பெயர் எச்ச விகுதிகள்.... | அ, உம். |
| வினை எச்சவிகுதிகள்.......... | உ, பு, ஆ, ஊ, என, அ, இன், இய, இயர், வான், பான், பாக்கு, இ, ய், கு, ஆல், கால், ஏல், ஏனும், உம், மல், மை, மே, து, றி, முதலானவை. |
| தொழிற்பெயர் விகுதிகள். .. | தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து, முதலியன; அடம்என்பதுவழக்கத்தில்வரும். |
| பண்புப்பெயர் விகுதிகள்... | மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர், முதலியன. |
| எதிர்மறைவிகுதிகள்......... | இல், அல், ஆ, அ முதலியன. |
| பிறவினை விகுதிகள்... ..... | வி, பி, கு, சு, டு, து, பு, று. |

பிறவிகுதிகள்; (உ-ம்.)

- இ, ஐ, அம், (உ-ம்):—அலரி, பறவை, எச்சம்......... [வினைமுதற்பொருள்.]
- ஊருணி, தொடை, தொல்காப்பியம்.. [செயப்படுபொருள்.]
- மண்வெட்டி, பார்வை, நோக்கம்...... [கருவிப்பொருள்.]
- விடு, ஒழி, (உ-ம்.) வந்துவிட்டான், படித்தொழிந்தான். [துணிவுப்பொருள்.]
- கொள், (உ-ம்.) நடத்திக்கொண்டான். [தற்செயல்.]
- படு, உண், (உ-ம்.) ஓட்டப்பட்டான், அடியுண்டான்......... [செயப்பாட்டுவினை.]
- மை, (உ-ம்.) ஆண்மை, பெண்மை... [தன்மைப்பொருள்.]

## இடைநிலை.

**40.** பெயரின் இடைநிலை.—MEDIAL PARTICLES OF NOUNS

இலக்கியங் கண்டதற் கிலக்கணம் இயம்பலின்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை எனலே.
[பத.சூ.14

[இலக்கியத்தைப்பார்த்து அதற்கு இலக்கணம் சொல்லுத லால் பகுதியையும் விகுதியையும் பிரித்து நடுவில் நின்றதை வினையால் அணையும்பெயர் அல்லாதபெயர்களுக்கு இடைநிலை என்று சொல்லுக.]

(உ-ம்.) அறிஞன்.................[ஞ் இடைநிலை.]
ஓதுவான்...............[வ் இடைநிலை.]
வலைச்சி...............[ச் இடைநிலை ]
வண்ணத்தி.............[த் இடைநிலை.]



**41.** இறந்தகால இடைநிலை.—MEDIAL PARTICLES DENOTING THE PAST TENSE.

தட றஒற் றின்னே ஐம்பால் மூவிடத்
திறந்த காலம் தருந்தொழில் இடைநிலை.
[பத.சூ.15.

[த்,ட்,ற், இன் ஆகிய இவை ஐந்துபாலிலும், மூன்று இடத் திலும் இறந்த காலத்தைக்குறிக்கும் வினைப்பகு பதங்களினு டைய இடைநிலைகளாம்.]

(உ-ம்.)
(1.) நட + த் + அன் + அன் = நடத்தனன் = நடந்தனன்.
(2.) கொள் + ட் + ஆன் = கொட்டான் = கொண்டான்.
(3.) நில் + ற் + ஆன் = நிற்றான் = நின்றான்.
(4.) ஓடு + இன் + ஆன் = ஓடினான்.

ஆ + கு + இன் + ஆன் = ஆகினன் = ஆனன்.[இ குறைந்தது.]
விஞ்சு + இன் + அ + து = விஞ்சினது = விஞ்சியது.[ன் குறைந்தது.]



42. நிகழ்கால இடைநிலை.—MEDIAL PARTICLES DENOTING THE PRESENT TENSE.

ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை இடைநிலை.
[பத.சூ.16.]

[ஆநின்று, கின்று, கிறு ஆகிய இவை ஐந்துபாலிலும், மூன்று இடத்திலும் நிகழ்காலத்தைக் குறிக்கும் வினைப் பகுபதங்களினுடைய இடைநிலைகளாம்.]

(உ-ம்.) (1.) போகாநின்றான்; (2.) போகின்றான்; (3.) போகிறான்.



43. எதிர்கால இடைநிலை.—MEDIAL PARTICLES DENOTING THE FUTURE TENSE.

பவ்வ மூவிடத் தைம்பால் எதிர்பொழு
திசைவினை இடைநிலை ஆம்இவை சிலஇல.*
[பத.சூ.17.]

[ப், வ் ஆகிய இவை ஐந்துபாலிலும், மூன்று இடத்திலும் எதிர்காலத்தைக் குறிக்கின்ற வினைப்பகுபதங்களினுடைய இடைநிலைகளாம்.]

(உ-ம்.) (1.) உண்பான்; (2.) உண்ணுவான்.



44. காலங்காட்டும் விகுதிகள்.—TERMINATIONS DENOTING TENSE.

றவ்வொடு கரஉம் மைநிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பும் எதிர்வும் டவ்வொடு

* "இவை சில இல" என்றதற்குப்பொருள் பின்சூத்திரத்தில் விளக்கப்பட்டிருக்கின்றது.

கழிவும் கவ்வோ டெதிர்வும்மின் ஏவல்-
வியங்கோள் இம்மார் எதிர்வும் பாந்தம்
செலவொடு வரவும் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே.

[பத.சூ.18.]

[று, றும், து, தும் இவை இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும்; டு, டும் இவை இறந்தகாலத்தையும்; கு, கும் இவை எதிர்காலத்தையும்; மின், ஏவல்விகுதிகள், வியங்கோள்விகுதிகள், இ, மார் இவை எதிர்காலத்தையும்; ப இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும், "செய்யும்" என்னும் முற்றுவிகுதி நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும்; எதிர்மறைவிகுதியாகிய ஆ மூன்றுகாலத்தையும் ஏற்றுவரும்" இவை சில இல" என்றவைகளுள்.†]

(உ-ம்.)

(1.) சென்று, சென்றும் [இறப்பு]; சேறு, சேறும், [எதிர்வு
(2) வந்து, வந்தும் [இறப்பு]; வருது, வருதும், [எதிர்வு.]
(3) உண்டு, உண்டும் [இறப்பு]; உண்கு, உண்கும், [எதிர்வு
(4.) செய்மின், செய்யாய், செய்க, சேறி, செய்ம்மார் [எதிர்வு

செய்ப, [இறப்பு, எதிர்வு.]
செய்யும், [நிகழ்வு, எதிர்வு.]
செய்யா, [இறப்பு, நிகழ்வு, எதிர்வு.]

இவற்றால் அன்றி வேறுவகையா[illegible]காலம்தோன்றும்.
(உ-ம்.) விட்டான், பெற்றான்,

[பகுதிவிகாரத்தால் இறந[redacted]தோன்றியது.]

என்மனார், அறிந்திசினோர், ஆயது.................. { மன், [illegible]ன, ய இறந்தகாலங் காட்டியன.

என்மர்...... ........... .....ம் எதிர்காலங்காட்டியது.

உண்ணுகிடந்தான், உண்ணுவிருந்தான்............... { ஆகிடந்து, ஆவிருந்து நிகழ்காலங்காட்டியன.

வருதி என்பதில் இ நிகழ்காலங்காட்டியது.

† கா[illegible], சந்தி, விகாரம் ஆகிய இம்மூன்றுறுப்பையுமீயலில் விளக்குகிறார்.

# எழுத்ததிகாரம்.

## III-வது: உயிரீற்றுப்புணரியல்.

## OF THE COMBINATION OF VOWEL-FINALS.

### புணர்ச்சி.

15. புணர்ச்சி இன்னதென்பது.—COMBINATION OF LETTERS.

மெய்உயிர் முதலீ றாம்இரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்
பொருளில் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.
[உயிர்.சூ.1.]

[மெய்யே ஆவது உயிரோ ஆவது முதலிலும் இறுதியிலும் உடைய பகாப்பதம் பகுபதம் என்கிற இரண்டுபதங்களும், தன்னோடுதானும், [redacted]பிறிதோடு பிறிதுமாய், அல்வழி, வேற்றுமை என்னு[redacted]டனுள் ஒருபொருளில் பொருந்தும்போது, நிலைமொழியும் வருமொழியும் இயல்பாய் அல்லது விகாரமாய்த்தொடர்வது புணர்ச்சியாம்.]

16. அல்வழி, வேற்றுமை இவை யென்பது.—CASUAL AND INCASUAL COMBINATION.

வேற்றுமை ஐம்முதல் ஆறும் அல்வழி
தொழில்பண் புவமை உம்மை அன்மொழி

எழுவாய் விளிநீ ரெச்சம்முற் றிடைஉரி
தழுவு தொடர்அடுக் கெனஈ ரேழே. [உயிர்.சூ.2.]

[வேற்றுமைப் புணர்ச்சி ஆவது ஐ, ஆல், கு, இன், அது, கண் எனும் ஆறு உருபும் மறைந்தாவது, வெளிப்பட்டாவது வரப் பதங்கள் பொருந்தும் தொடர்ச்சியும்; அல்வழிப்புணர்ச்சி ஆவது வினைத்தொகை முதலிய ஐந்துதொகை நிலையிலும், எழுவாய் முதலிய ஒன்பது தொகாநிலையிலும் பதங்கள் பொருந்தும்தொடர்ச்சி ஆகிய பதினான்காம்.]

[வேற்றுமை.]

| 1. வெற்றுமைத்தொகைநிலை | | 2. வேற்றுமைத்தொகாநிலை |
|---|---|---|
| (உ-ம்.) வீடுகட்டினான் | [ஐ] | வீட்டைக்கட்டினான் |
| கல்எறிந்தான் | [ஆல்] | கல்லால்எறிந்தான் |
| சொற்றன்மகன் | [கு] | கொற்றனுக்குமகன் |
| மலைவீழ் அருவி | [இன்] | மலையின் வீழ்அருவி |
| சாத்தன்கை | [அது] | சாத்தனதுகை |
| மணிஒளி | [கண்] | மணியின் கண் ஒளி. |

[அல்வழி.]

(உ-ம்.)

(1.) கொல்யானை ......... வினைத்தொகை.
(2.) கருங்குதிரை ............ பண்புத்தொகை.
சாரைப்பாம்பு ........ இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
(3.) பிறைநுதல் ........... உவமைத்தொகை.
(4.) இராப்பகல் ........... உம்மைத்தொகை.
(5.) பொற்றொடி ........... அன்மொழித்தொகை.

} ஐந்து தொகைநிலை

(1.) சாத்தன்வந்தான் ...... எழுவாய்த்தொடர்.
(2.) சாத்தாவா ............ விளித்தொடர்.
(3.) வந்தமனிதன் ......... பெயர்எச்சத்தொடர்.
(4.) போய்ச்சென்றான் ...: வினைஎச்சத்தொடர்.
(5.) நின்றான்அவன் ........ தெரிநிலைவினைமுற்றுத் தொடர்.
(6.) பெரியன்அவன் ....... குறிப்புவினைமுற்றுத் தொடர்.
(7.) மற்றுவழி ............ இடைச்சொல்தொடர்.
(8.) நனிஉழைத்தான் ...... உரிச்சொல்தொடர்.
(9.) பாம்புபாம்பு ......... அடுக்குத்தொடர்.

} ஒன்பது தொகாநிலை.

### 47. இயல்புப் புணர்ச்சி.—NATURAL COMBINATION.

விகாரம் அனைத்தும் மேவல தியல்பே.
[உயிர்.சூ.3.]

[பின்வரும் விகாரவகை எல்லாவற்றையும் அடையாதது இயல்புப்புணர்ச்சி ஆம்.]

(உ-ம்.) பொன்மலர்.



## விகாரம்.



### 48. விகாரப் புணர்ச்சி.—MUTATIONAL COMBINATION.

தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும்.
[உயிர்.சூ.4.]

[எழுத்தாவது, சாரியை ஆவது, ஒன்றும் பலவும் தோன்றுதலும், திரிதலும், கெடுதலும் மேற்சொன்ன விகாரம் ஆம். இம் மூவகைவிகாரமும் நிலைமொழி வருமொழிகளுடைய முதல், இடை, கடை என்கின்ற மூன்றுஇடத்திலும் ஏற்றபடிவரும்.]

(உ-ம்.) (1.) மா + கனி = மாங்கனி............[ங் தோன்றியது.]
(2.) அல் + திணை = அஃறிணை..........[மெய்கள் திரிந்தன.]
(3.) நிலம் + வலயம் = நிலவலயம்...[ம் கெட்டது.].



### 49. செய்யுள் விகாரம்.—POETICAL CHANGES.

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும்செய்யுள் வேண்டுழி
[உயிர்.சூ.5.]

[பாட்டில் வேண்டு மிடத்தில் மேற்கூறிய வலித்தல் முதலாகிய ஆறு விகாரங்களும் வரும்.]

(உ-ம்.)

(1.) வலித்தல்..." பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயாள்."
[பிறக்கிட=பிறங்கிட.] [இராமா.1.8.49.

(2.) மெலித்தல்." தண்டையின் இனக்கிளி கடிவோள்."
[தண்டை=தட்டை.]

(3.) நீட்டல்...." ஆளி பொங்கும் அரம்பையர் குழியே."
[ஆளி=அளி=வண்டு.] [இராமா.1.15.62.]

(4.) குறுக்கல்..." கோலாற் கடாஅய்க் குறினும்."
[குறினும்=கூறினும்.] [நாலடி. 26.8.]

(5.) விரித்தல்...." வள்வார் முரசம் மதிர்மாநகர்."
[ம் விரிந்தது.] [இராமா. 1.4.73.]

(6.) தொகுத்தல்." துன்னுத் துறத்தல் தகுவதோ?"
[துன்னு=துன்னுமல்.] [நாலடி. 23.6.]

---

50. OMISSION OF INITIALS, MEDIALS AND FINALS IN WORDS.

ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.
[உயிர்.சூ.6.]

[ஒருசொல்லின்முதல், இடை, கடைஆகிய மூன்றுஇடத்திலும் குறைந்துவருதலும் அச்செய்யுள்விகாரம் ஆம்.]

(உ-ம்.) (1.) " மரைஇதழ்."......[மரை=தாமரை.]
(2.) " ஒதிமுதுபோத்து."[ஒதி=ஒந்தி.]
(3.) "நீல்உண்டுகிலிகை."[நீல்=நீலம்.]
} மூன்றுஇடத்திலும்குறைதல்.

☞ "குறைதலும்" என்ற எச்சஉம்மையால் விதிஇல்லாமல் வருகிற வேறுவிகாரங்களும் உண்டுஎனக்கொள்க.

(உ-ம்.) யாது=யாவது.........[வ தோன்றிற்று.]
மாசி=மாசி...............[சி ஆய்த்திரிந்தது.]
யார்=ஆர்..................[ய் கெட்டது.] [டது.]
முழுகு=மூழ்கு.........[ஆதி நீண்டு முவ்வில் உ கெட்
மிஞிறு=ஞிமிறு......
தசை=சதை.........
வைசாகி=வைகாசி...
} [எழுத்து நிலைமாறின.]

இல்வாய்=வாயில்..... } [சொல் நிலைமாறின.]
நகர்ப்புறம்=புறநகர்.. }



**51. A SINGLE COMBINATION MAY ADMIT OF MORE THAN ONE KIND OF MUTATION.**

ஒருபுணர்க் கிரண்டும் மூன்றும் உறப்பெறும்.

[உயிர்.சூ.7.]

[ஒருபுணர்ச்சியில் தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் மூன்று விகாரங்களுள், ஒன்றுமாத்திரமல்லாமல், இரண்டு மூன்றும் வரப்பெறும்.]

உ-ம்.) நிலம் + பனை = நிலப்பனை. . [இரண்டுவிகாரம்.]
பனை + காய் = பனங்காய் ... ..[மூன்றுவிகாரம்.]



## பொதுப்புணர்ச்சி.

**52. ஞ், ந், ம், ய், வ் இவைகளின் புணர்ச்சி.—THE COMBINATION OF THE INITIALS ஞ், ந், ம், ய், வ் WITH OTHER LETTERS.**

எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரும் ஞ ந ம ய வக்கள் இயல்பும்
குறில்வழி யத்தனி ஐ நொ து முன்மெலி
மிகலும்ஆம் ண ள ன ல வழிநத் திரியும்.

[உயிர்.சூ.8.]

[மொழிக்குக்கடைசியில் வரக்கூடிய இருபத்துநான்கு எழுத்துகளையும் இறுதியில் உடைய சொற்களின் பின்வரும் ஞ், ந், ம், ய், வ், இவை அல்வழியிலும் வேற்றுமையிலும் இயல்பாம்; குற்றெழுத்தின் பின்வரும் ய், ஐ, நொ, து, என்பவற்றிற்குப்பின்வரும் ஞ், ந், ம், (பிறசொற்களுக்குமுன் இயல்பாகிறதன்றி) மிகுந்தும்வரும்: ண், ள், ன், ல், இவற்றிற்குப் பின்வரும் ந், பிற ஈற்றின்முன் இயல்பாதல் அன்றி, திரியும்.]

(உ-ம்)

(1.) விள + ஞான்றது = விளஞான்றது......[இயல்பு.]

(2.) மெய் + நீண்டது = மெய்ந்நீண்டது....
தொ + ஞொள்ளா = தொஞ்ஞொள்ளா.. } [ந் ஞ் மிகுந்தன.]

(3.) து + மாடா = தும்மாடா ........ .......[ம் மிகுந்தது]

(4.) கண் + நலம் = கண்ணலம்.............[ண் முன் ந் திரிந்தது.]



## 53. THE COMBINATION OF THE FINALS OF EPICENE AND HIGH CASTE NOUNS WITH HARD CONSONANTS.

பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்கள் ஈற்று
வலிவரின் இயல்பாம் ஆவி யரமுன் [மெய்
வன்மை மிகாசில விகாரமாம் உயர்திணை.

[உயிர்.சூ.9.

[இருதிணைகளுக்கும் பொதுவான பெயர்களுக்கும், உயர்திணைப்பெயர்களுக்கும் ஈறான மெய்கள் வல்லெழுத்தை முதலில் உள்ளமொழிகள் வந்தால் இயல்பாம். உயிர், ய, ர, என்னும் இவ்விறுதிகளை உடைய இருவகைப்பெயர்களின் பின் வரும் க, ச, த, ப க்கள் மிகாவாம். உயிரீறும் மெய்யீறும் ஆகிய உயர்திணைப்பெயர்களில்சில நாற்கணங்களோடும் புணர்ந்தால் விகாரப்படுவனவும் உண்டு.]

(உ-ம்.)

கொற்றி, தாய் + குறிது, கை, செவி. [இயல்பு.]
அவர் + குறியர், கை......................[இயல்பு.] } [இருவழியிலும்]
நம்பி + குறியன், கை.....................[இயல்பு.]

கபிலன் + பரணர் = கபிலபரணர்.............
அரசன் + வள்ளல் = அரசவள்ளல்............ } [விகாரம்.]



## 54. THE INTERROGATIVES AND VOCATIVES COMBINE NATURALLY WITH HARD CONSONANTS.

ஈறியா வினாவிளிப் பெயர்முன் வலிஇயல்பே.

[உயிர்.சூ.10.

[ஆ, ஏ, ஓ ஆகிய மூன்று ஈற்றுவினையின் பின்னும், யா என்னும் வினாப்பெயரின் பின்னும், விளிப்பெயர்களின் பின்னும் வரும் வல்லினம் இயல்பாம்.]

(உ-ம்) நம்பியாகொண்டான், சென்றான், போனான்; யாகுறியன, சிறியன. } [வினாவின்பின் வல்லினம் இயல்பாதல்.]

நம்பீகொள், செல், தா, போ...... } [விளியின்பின் வலி இயல்பாதல்.]



## 55. THE COMBINATION OF HARD CONSONANTS WITH THE SECOND PERSON OF VERBS AND WITH IMPERRATIVES ENDING IN VOWELS OR IN ய், ர், ழ்.

ஆவி யரழ இறுதிமுன் னிலைவினை
ஏவல்முன் வல்லினம் இயல்பொடு விகற்பே.

[உயிர்.சூ.11.]

[உயிரையும், ய், ர், ழ் ஆகிய இம்மூன்றையும் இறுதியில் உடையமுன்னிலை வினையின்பின்னும் ஏவல் வினையின்பின்னும் வரும் வல்லினம் இயல்பும் விகற்பமும் ஆம்.]

(உ-ம்.)

(1.) உண்டனை + கொற்றா = உண்டனைகொற்றா...
செய்தாய் + சாத்தா = செய்தாய்சாத்தா...
போனீர் + தேவரே = போனீர்தேவரே.........
வாழ் + பூதா = வாழ்பூதா......................... } [இயல்பு.]

(2.) நட + கொற்றா = நடகொற்றா, நடக்கொற்றா..
எய் + கொற்றா = எய்கொற்றா, எய்க்கொற்றா.... } [விகற்பம்.]

☞ ழ் முன்னிலையில் வாராது.

உயிரீற்றுச் [illegible]ப்புணர்ச்சி.

## 56. உயிரின்பின் உயிர்புணரும்வகை.—THE COMBINATION OF VOWELS WITH VOWELS.

இ ஈ ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ் இருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்.

[உயிர்.சூ.12.]

[இ, ஈ, ஐ ஆகிய இவைகளின்பின் யகாரமும்; மற்ற ஏழு உயிர்களின்பின் வகாரமும்; ஏயின்பின் ய, வ இரண்டும், உயிரைமுதலில் உடையமொழிவந்தால், உடம்படுமெய் என்று வரும்.]

(உ-ம்.)

(1.) மணி + அழகு = மணியழகு ........... }
நீ + இருந்தாய் = நீயிருந்தாய்........ } [ய்தோன்றிற்று.]
பனை + ஓலை = பனையோலை ............ }

(2.) பூ + அழகிது = பூவழகிது......................[வ் தோன்றிற்று.]

(3.) சே(=எருது) + ஓடிற்று = சேவோடிற்று } [வ், ய், இரண்டும்
நீயே + அறிவாய் = நீயேயறிவாய்......... } தோன்றிற்று.]

... ... ... ... ... ... ... ...வீரர்"
"கேவெலாம் காட்டுகின்ற." [இரா. 1.17.15.]

[ஏ (=அம்பு) + எலாம் = ஏவெலாம்.]

☞ "ஏனை உயிர்வழிவவ்வும்" என்றுசொல்லியிருந்தாலும் அருமையாய் யகாரஒற்றுத் தோன்றுதலை "இடையுரிவடசொலின்" என்றதனுத்திரத்தினாற்கொள்க.

(உ-ம்.) "மாயிரு ஞாலம் உண்டோன்." [இரா. 1.6.24.

[மா + இரு = மாயிரு;]

"பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயினாரே.

[போ + இன் + ஆர் = போயினார்.] [இரா. 1.8.77.

---

57. THE COMBINATION OF THE INTERROGATIVE எ AND THE DEMONSTRATIVES WITH OTHER LETTERS.

[EXCEPTION TO 56, 52.]

எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கில் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே.

[உயிர். சூ.] 13.

[எ என்னும் வினா இடைச்சொல்லின் பின்னும், அ, இ, உ என்னும் மூன்று சுட்டிடைச்சொல்லின் பின்னும், உயிரும்

வ்வும்வந்தால் வவ்வும்; ய அல்லாதமற்றமெய்கள் வந்தால் அம்மெய்களும்; செய்யுளில் சுட்டு நீண்டுவந்தால் ய வ்வும் மிகுதல் முறை ஆம்.]

(உ-ம்.) (1.) எ + அணி = எவ்வணி; அ + யாழ் = அவ்யாழ்.
(2.) இ + மலை = இம்மலை; உ + குடம் = உக்குடம்.
(3.) ஆ (= அ = அந்த) + இடை (= இடம்) = ஆயிடை.
"ஆயிடைப் பருவம்வந் தடைந்த எல்லையின்" [இரா.1.6.101.]
☞ "நெறி" என்றதனாற் பின்வருவனவும் அமையும் எனக் கொள்க:—

யாங்ஙனம்...... .......... [யா வினாவின்பின் ங் மிகல்.]
ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனம்......... .. .. [நீண்டசுட்டின்பின் ங் மிகல்
ஈது, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, ஆண்டு, ஈண்டு... ...... [சுட்டுப்பெயர் நீளல்.]
"செல்வுழிச்செல்க."...... .. [ல் பின் உடம்படுமெய் அல்லாத வ் தோன்றல்.]

———

58. FINAL உ DROPPED BEFORE VOWELS AND CHANGED INTO இ BEFORE ய. [EXCEPTION TO 56.]

உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரின் இய்யாம் முற்றுமற் றொரோவழி.
[உயிர்.சூ.14.]

[குற்றியல் உ, உயிர்முதலில் உள்ளமொழிவந்தால், தனக்காதாரமாகிய மெய்யைவிட்டுக்கெடும்; யவ்வைமுதலில் உள்ளமொழிவந்தால் இ ஆகத்திரியும்; முற்றியல் உவ்வும் அவ்விரண்டுவிதியையும் சில இடங்களில் பெறும்.]

(உ-ம்.)
1.) நாகு + அருமை = நாகருமை. [குற்றியல் உ கெட்டது.]
கொக்கு + யாது = கொக்கியாது. [குற்றியல் உகரம் இ ஆனது.]
2.) அறிவு + அரிது = அறிவரிது. [முற்றியல் உ கெட்டது.]
அறிவு + யாது = அறிவியாது. [முற்றியல் உகரம் இ ஆனது.]

☞ "அழைப்பதுவே"=அழைப்பது+ஏ; இதில் குற்றியல் கெடாமல் வ் தோன்றியது காண்க.

[கெடும் என்னுமல் "ஒடும்" என்றதால் இது அமையும்.]

---

உயிரீற்றின் முன் வல்லினம் புணர்வ

---

59. க, ச, த, ப இரட்டிப்பது.—THE LETTERS க, ச, த, ப DOUBLED AFTER VOWELS.

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதப மிகும் விதவாதன மன்னே.

[உயிர். சூ.15.]

[இயல்பினாலும் விதியினாலும் இறுதிஆகநின்ற உயிர்களின் பின்வரும் க, ச, த, ப பெரும்பாலும்மிகும் சிறப்புவிதியிற் சொல்லாதவைகள்.]

(உ-ம்.) இந்தப்படம், வரச்சொன்னான், மரப்பலகை.

☞ சிறப்புவிதிகளில் க, ச, த, ப இயல்பாயும் விகற்பம் ஆயும்வரும் எனச்சொன்னவற்றிற்கு உதாரணம்:—

(1.) உண்ணியகொண்டான். [வினைஎச்சத்தின்பின் இயல்பு.]
(2.) வந்தகுதிரை............[பெயர்எச்சத்தின்பின் இயல்பு.]
(3.) வந்தனபறவைகள்......[வினைமுற்றின்பின் இயல்பு.]
(4.) தனதாள்கள்.........[ஆறன் உருபின்பின் இயல்பு.]
(5.) பலசொற்கள்..........[அஃறிணைப்பன்மையின்பின்இயல்பு
(6.) அம்ம! கொற்றா.........[அம்மவின்பின் இயல்பு.]

[உயிர். சூ. 17.]

(7.) பலபல, பற்பல; சிலசில, சிற்சில,
பல+சாலை=பல்சாலை, பலசாலை;
சில+யானை=சில்யானை, சிலயானை,
[பலப்பல, சிலச்சில என்றுமவரும்.]

[உயிர். சூ. 20]

(8) ஆ + குறிது = ஆகுறிது; மா + குறிது = மா குறிது; ............ [சில ஆகாந்தின் பின் இயல்பு.]
(9.) கேண்மியா + கொற்றை = கேண்மியாகொற்றை.

(10.) உண்ணு + குதிரைகள் = உண்ணு குதிரைகள்.................... [எதிர்மறை வினைமுற்று.]

[உயிர். சூ. 21.]

(11) யானை + குறிது = யானைகுறிது....[ஐ யின்பின் இயல்பு.]

(12.) கிளி + குறிது = { கிளிகுறிது.... / கிளிக்குறிது.. } [இ யின்பின் விகற்பம்.]

(13.) தினை + குறிது = { தினைகுறிது... / தினைக்குறிது. } [ஐ யின்பின் விகற்பம்.]

[உயிர். சூ. 26.]

(14.) பீ + குறிது = பீகுறிது......
நீ + குறியை = நீகுறியை.
மீ + கண் = மீகண்..........
[பீ, நீ, மீ யின்பின் இயல்பு.] [மீ = மேல்.]

[உயிர். சூ. 28.]

(15.) அவனொடுபோ....[உ ஈற்று மூன்றும் உருபின்பின் இயல்பு.]
(16.) சாத்தனதுதலை..[உ ஈற்று ஆறும் உருபின்பின் இயல்பு.]
(17.) ஒருகை, இருசெவி.....[எண்களின்பின் இயல்பு.]
(18.) வருபுனல், தருசோறு..[வினைத்தொகையின்பின் இயல்பு.]
(19.) அதுகுறிது... ...... ...[அல்வழியில் சுட்டின்பின் இயல்பு.]
(20) இதுபொறுத்தான்.....[வேற்றுமையில்சுட்டின்பின் இயல்பு.]

[உயிர். சூ. 29.]

(21.) நாகுகடிது.[நெடிற்றொடர்க்குற்றியலுகரத்தின்பின் இயல்பு.] [வன்றொடர் அல்லாத மற்றைத்தொடர்களின் பின்னும் அல்வழியில் மிகாமைகாண்க.]

[உயிர். சூ. 30.]

(22.) நாகின்கடுமை... { ஒற்று இடையில்மிகாத நெடிற்றொடரின்பின் வேற்றுமையில் இயல்பு; இன்சாரியைபெற்றது. }

வரகுகதிர்...[சாரியைபெறுமல் உயிர்த்தொடரில் இயல்பு.]

[ஆய்தம், உயிர் இவைதொடர்ந்தகுற்றியலுகரத்தின் பின் மிகாதனுங்காண்க.]

60. SHORTENED உ IN டு AND று PRECEDED BY LONG OR SHORT VOWELS. [EXCEPTION TO 59.]

நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே
[உயிர். சூ.33.]

[நெடில்தொடர், உயிர்த்தொடர் ஆகியகுற்றியல் உக்களையுடையமொழிகளுள் அந்த உ ஏறிநிற்கும் ட், ற் வேற்றுமையில் பெரும்பாலும் இரட்டிக்கும்.]

(உ-ம்.) ஆடு + கால் = ஆட்டுக்கால் ... .. } [நெடில்தொடரிற்
நீறு + படை = நீற்றுப்படை.. } ட்ற் இரட்டித்தன]
குருடு + கண் = குருட்டுக்கண்.. } [உயிர்த்தொடரிற்
கயிறு + முடி = கயிற்றுமுடி ... } ட்ற் இரட்டித்தன.]

☞ பின்வருபவைகளும் அமையும் :—

(உ-ம்.)

(1.) "காவிரி புரக்கும் நாடுகிழ வோனே."
[வேற்றுமையில் இரட்டாமை.]

(2.) காடு + அரண் = காட்டரண்..... } [அல்வழியில் இரட்
களிறு + யானை = களிற்றுயானை. } டித்தன.

(3.) வெருகு + கண் = வெருக்குக்கண். } [இருவழியிலும் வேறு
எருது + மாடு = எருத்துமாடு..... } ஒற்று இரட்டித்தன.]

# எழுத்ததிகாரம்.

## IV-வது: மெய் ஈற்றுப்புணரியல்.

## OF THE COMBINATION OF CONSONANT-FINALS.

### மெய் ஈற்றுச்சிறப்புப்புணர்ச்சி.

61. THE COMBINATION OF VOWELS WITH CONSONANTS.
[GENERAL RULE.]

உடல்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே.

[மெய்.சூ.1.]

[நிலைமொழி இறுதியில் நின்ற மெய்யின்மேல் வருமொழி முதலில்நின்ற உயிர்வந்துசேர்ந்து நடப்பது இயல்புப் புணர்ச்சியாம்.]

(உ-ம்.) அவன் + அழகன் = அவனழகன்.

62. CONSONANTS AFTER SINGLE SHORT LETTERS.
[EXCEPTION TO 61.]

தனிக்குறில் முன்ஒற் றுயிர்வரின் இரட்டும்.

[மெய்.சூ.2

[தனிக் குற்றெழுத்தின்பின்நின்ற ஒற்றுண்டு உயிர்வந்தால் இரட்டிக்கும்.]

(உ-ம்.) பொன் + அழகு = பொன்னழகு...[ன் இரட்டித்தது

63. ண், ன், ஈற்றுப்புணர்ச்சி.—ண் AND ன், NOT OCCURRING AFTER SINGLE SHORT LETTERS, DROPPED BEFORE ந.

குறில்அணை வில்லா ணனக்கள் வந்த
நகரம் திரிந்துழி நண்ணும் கேடே.

[மெய்.சூ.7]

[தனிக்குறில் ஒன்றுதவிர ஒருமொழி, தொடர்மொழிகளைச் சார்ந்த ண், ன் ஆனவை வருமொழிக்கு முதலில்வந்த ந, மயக்க விதிஇல்லாததினால், திரிந்த இடத்தில் கெடும்.]

(உ-ம்.)

தூண் + நன்று = தூணன்று ... ........[நெடிலின்பின்.]

அரசன் + நல்லன் = அரசனல்லன் ....[பலகுறிலின்பின்.]

செம்பொன் + நன்மை = செம்பொனன்மை..... ...... .........[தொடர்மொழியின்பின்.]



64. ம் ஈற்றுப்புணர்ச்சி.—ம் FINALS UNITE WITH ALL INITIALS [GENERAL RULE.]

மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்.

[மெய்.சூ.16

[ம் ஈற்றுச்சொற்கள் இறுதியில் உள்ள மகர ஒற்று கெட உயிர் ஈறுபோல்புணர்வனவும், வல்லினம்வந்தால், கெடாமல் அவற்றிற்கு இனமாகத்திரிவனவும் ஆம்.]

பொதுவாய்ச் சொன்னதனால் வேற்றுமை, அல்வழி இரண்டிற்கும் இவ்விலக்கணம் அமையும்.

(உ-ம்.) (1.) வட்டம் + ஆழி = வட்டவாழி....
வட்டம் + கடல் = வட்டக்கடல்.
வட்டம் + நேமி = வட்டநேமி...
வட்டம் + வாரி = வட்டவாரி....
நாம் + கடியம் = நாங்கடியம்..
[அல்வழி.]

(2.) மரம் + அடி = மரவடி............ } வேற்றுமை வழி.
மரம் + கால் = மரக்கால்........
நம் + கை = நங்கை... ... .. .. ...

ஸ்ரீ "இனமாத்திரிபவும் ஆகும்" என்றதனால்,
நாம் + பெரியம் = நாம்பெரியம் எனப் பவ்வின்முன் திரியாமை கொள்க.



64. ய், ர், ழ் ஈற்றுப்புணர்ச்சி.—THE COMBINATION OF ய், ர், ழ் FINALS WITH க, ச, த, ப.

ய ர ழ முன்னர்க் க ச த ப அல்வழி
இயல்பும் மிகலும் ஆகும் வேற்றுமை
மிகலும் இனத்தோ டுறழ்தலும் விதிமேல்.

[மெய்.௫.21]

[ய், ர், ழ் ஆகிய மூன்று ஈற்றின்பின்னும் க, ச, த, ப க்கள் வந்தால் அல்வழியில் இயல்பாதலும்; மிகுதலும்; வேற்றுமையில் மிகுதலும்; வல்லினமாவது மெல்லினமாவது மிகுதலும் விதிஆம்.]

(உ-ம்.) (1.) வேய் + கடிது = வேய்கடிது.. } [அல்வழியில் இயல்பு.]
வேர் + சிறிது = வேர்சிறிது...
வீழ் + பெரிது = வீழ்பெரிது.

(2.) மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி. } [அல்வழியில் மிகுதல்.]
கார் + பருவம் = கார்ப்பருவம்
பூழ் + பறவை = பூழ்ப்பறவை.

(3.) நாய் + கால் = நாய்க்கால்.... } [வேற்றுமையில் மிகுதல்.]
தேர் + கால் = தேர்க்கால்......
பூழ் + கால் = பூழ்க்கால்......

(4.) வேய் + குழல் = வேய்ங்குழல், } [வேற்றுமையில் ங் க் மிகல்.]
வேய்க்குழல்................
ஆர் + கோடு = ஆர்ங்கோடு,
ஆர்க்கோடு................

## ல், ள் ஈற்றுப்புணர்ச்சி.

65. ல், ள் ஈறு ற், ட் உம் ன், ண் உம் ஆதல்.—ல் AND ள் CHANGED INTO ற் AND ட், ALSO INTO ன் AND ண்.

லள வேற் றுமையில் றட வும் அல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரின் ஆம்மெலி
மேவின் னணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப. [மெய்.சூ.24

[ல், ள் ஆகிய இரண்டு ஈறும் வல்லினம் வந்தால் வேற்றுமையில் முறையே ற் ட் ஆம்; அல்வழியில் ற் ட் ஆகாமையும் ஆதலும்ஆம்; இரண்டுவழியிலும் மெல்லினம்வந்தால் ன், ண் ஆம்; இடை இனம்வந்தால் இயல்பு ஆம் என்று சொல்லுவார் புலவர்.]

(உ-ம்.)

(1.) கல்+குறை=கற்குறை..... [வேற்றுமையில் ற் ஆனது.]
முள்+குறை=முட்குறை.... [வேற்றுமையில் ட் ஆனது.]

(2.) கல் + குறிது = கல்குறிது, கற்குறிது. [அல்வழியில் உறழ்வு.]

முள் + சிறிது=முள் சிறிது, முட்சிறிது. [அல்வழியில் உறழ்வு.]

(3.) கல் + முனை=கன்முனை...,[வேற்றுமையில் ம் வர ன் ஆனது.]
முள் + முனை=முண்முனை.[வேற்றுமையில் ம் வர ண் ஆனது.]

(4.) கல் +மலிந்தது= கன்மலிந்தது.. [அல்வழியில் ம் வர ன் ஆனது.]

முள் + முறிந்தது=முண்மு[illegible] [அல்வழியில் ம் வர ண் ஆனது.]

(5.) கல் + யாது=கல்யாது....... [அல்வழியில் ய வர இயல்பு.]
கல் + யாப்பு=கல்யாப்பு......[வேற்றுமையில் ய வர இயல்பு.]

66. த், ந் முன்னும் வல்லினத்தின்முன்னும் வரும் ல், ள்.

ல் AND ள் BEFORE த், ந் AND HARD CONSONANTS.

குறில்செறி யாலள அல்வழி வந்த
தகரம் திரிந்தபின் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்பும் திரிபும் ஆவன உளபிற.

[மெய் சூ.26.]

[தனிக்குறில் அல்லாதமற்றை எழுத்துகளைச் சார்ந்துவரும் ல், ள் ஆனவை அல்வழியில்வந்த த் திரிந்தஇடத்தில் கெடுதலும், இருவழியிலும் வந்த ந் திரியும் இடத்தில் கெடுதலும், வல்லினம்வந்தால் அல்வழியில் உறழாமல் இயல்பாதலும், திரிதலும் வேற்றுமையில் திரியாமல் இயல்பாதலும் உண்டு.]

(உ-ம்.)

(1.) ஆல் + தீது = ஆறீது .........[அல்வழியில் ல் கெட்டது.]
வாள் + தீது = வாடீது .......[அல்வழியில் ள் கெட்டது.]

(2.) ஆல் + நன்று = ஆனன்று .. .[அல்வழியில் ல் கெட்டது.]
வாள் + நன்று = வாணன்று.[அல்வழியில் ள் கெட்டது.]

(3.) ஆல் + நன்மை = ஆனன்மை.[வேற்றுமையில் ல் கெட்டது.]
வாள் + நன்மை = வாணன்மை[வேற்றுமையில் ள் கெட்டது.]

(4.) கால் + கடிது = கால்கடிது..[ல் இன்பின் க வர இயல்பு.].
தேள் + சிறிது = தேள்சிறிது.[ள் இன்பின் ச் வர இயல்பு.]

(5.) வேல் + படை = வேற்படை.
வாள் + படை = வாட்படை. } அல்வழியில் திரிபு.

(6.) கால்குதித் தோடியது..... ..
வாள்போழ்ந்திட்டமறவர்.. } வேற்றுமையில் இயல்பு.

———✿✿✿———

67. த் AND ந் AFTER ன, ல AND ண, ள CHANGED INTO
ற், ன் AND ட், ண் [illegible]TIVELY.

னல முன் றனவும் ணள [illegible] வும்
ஆகும் தநக்கள் ஆயும் காலே. [மெய்.சூ.34]

[ன், ல் ஆகிய இவற்றின் பின்வரும் த் ஆனது ற் ஆம்; அவற்றின் பின்வரும் ந் ஆனது ன் ஆம்; ண், ள் ஆகிய இவற்றின் பின்வரும் த் ஆனது ட் ஆம்; அவற்றின் பின்வரும் ந் ஆனது ண் ஆம், ஆராயுங்காலத்தில்.]

(உ-ம்.) பொன்+தீது, நன்று=பொன்றீது, பொன்னன்று. [ச்.]
கல்+தீது, நன்று=கற்றீது, கன்னன்று. [த, ந்.]
மண்+தீது, நன்று=மண்டீது, மண்ணன்று. [த், ந்.]
முள்+தீது, நன்று=முட்டீது, முண்ணன்று. [த, ந்.]

[வேற்றுமையில் வருவதற்கு உதாரணம் ஆராய்ந்துகொள்க.]

### 68. ஒருபுறனடை.—A REMARK.

இடை உரி வட சொலின் இயம்பிய கொளாதவும்
போலியும் மரூஉம் பொருந்திய ஆற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறியே.

[மெய்.சூ.36.]

[இடை, உரி, வட சொல் ஆகிய இவற்றுள் உயிர் ஈற்றுப் புணரியலிலும், மெய் ஈற்றுப்புணரியலிலும் தோன்றல், திரிதல், கெடுதல், இயல்பு என்றுசொல்லியபுணர்ச்சி இலக்கணங்கள் பொருந்தாமல் வேறுபட்டுவருவனவும், இலக்கணப்போலிமொழிகளும், மரூஉமொழிகளும், இருவகை வழக்கிலும் நடக்கின்ற முறைமைக்கு இணங்கும்படி புணர்த்தல் அறிவுடையோர் எல்லார்க்கும் முறைமை.]

# எழுத்ததிகாரம்.

## V-வது: உருபு புணரியல்.
## COMBINATION OF CASUAL TERMINATIONS.

### உருபுகள்.

69. உருபுகள் இடவகையால் இத்தனை என்பது.—NUMBER OF CASUAL TERMINATIONS.

ஒருவன் ஒருத்தி பலர்ஒன்று பலஎன
வருபெயர் ஐந்தொடு பெயர்முதல் இருநான்
குருபும் உறழ்தர நாற்பதாம் உருபே.

[உருபு.சூ.1.]

[ஒருவன்முதலிய ஐந்துபெயருடனே எழுவாய் முதலிய எட்டுவேற்றுமை உருபையும்பெருக்கவரும் வேற்றுமை உருபுகள் நாற்பதாம்]

70. POSITION AND USE OF THESE TERMINATIONS.

பெயர்வழித் தம்பொருள் தரவரும் உருபே.

[உருபு.சூ.2.]

[வேற்றுமை உருபுகள் தம்பொருளைத் தரப்பெயர்க்குப் பின்வரும்.]

(உ-ம்.) மணிஅடித்தான்..................[மணியை]

71. *சாரியைவருதலும், வாராமையும் விகற்பமும்.*—EUPHONIC INCREMENTS MAY OR MAY NOT OCCUR.

பதம்முன் விகுதியும் பதமும் உருபும்
புணர்வழி ஒன்றும் பலவும் சாரியை
வருதலும் தவிர்தலும் விகற்பமும் ஆகும்.

[உருபு.௪.4.]

[பதத்தின்பின் விகுதிஆவது, பதம்ஆவது, உருபுஆவது புணரும்போது சாரியை ஒன்றுஆயினும் பலஆயினும் வருதலும் வாராமையும் இவ்விரண்டும் ஆகிய விகற்பமும் ஆகும்.]

(உ-ம்)

(1.) சென்றனன்...............[சாரியைவந்தது.] ⎫ [விகுதிப்
சென்றான்...............[சாரியைவரவில்லை.] ⎬ புணர்ச்சி
சென்றன, சென்ற... [விகற்பம்.] ⎭ யில்.]

(2.) புளியங்காய்...............[சாரியைவந்தது.] ⎫
புளிக்கறி...............[சாரியைவரவில்லை.] ⎬ [பதப்புணர்
நெல்லின்குப்பை.... ⎫ [விகற்பம்.] ⎪ ச்சியில்.]
நெற்குப்பை........... ⎭ ⎭

(3.) அவற்றை...............[சாரியைவந்தது.] ⎫ [உருபுப்
தன்னை...............[சாரியைவரவில்லை.] ⎬ புணர்ச்சி
ஆனை, ஆவை...............[விகற்பம்.] ⎭ யில்.]

(4.) ஆவினுக்கு...............[பலசாரியைவந்தன.]



சாரியை.



72. THE SEVENTEEN GENERAL INCREMENTS.

அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தம்.
தம் நம் நும்ஏ அஉ ஐ குன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

[உருபு.௫.5.]

[மேற்கூறிய பதினேழும் இவைபோல்வனபிறவும் விகுதி, பதம், உருபு என்னும் மூன்று புணர்ச்சியிலும், தனிமொழிகளிலும் வருகிறதனால் பொதுச்சாரியை ஆகும்.]

## பெயர்கள் வேற்றுமை யுருப்புணரும்போது வரும்விதம்.

73. "எல்லாம்" என்னும்மொழி வேற்றுமை உருபுபுணரும் போது வரும்விதம்.—THE WORD எல்லாம் HOW DECLINED.

எல்லாம் என்ப திழிதிணை ஆயின்
அற்றோ டுருபின் மேலும் உறுமே
அன்றேல் நம்இடை அடைந்தற் றாகும்.

[உருபு சூ 6

["எல்லாம்" என்னும் பொதுப்பெயர் அஃறிணையில் வரும் போது அதனோடு ஆறுஉருபும் புணர்ந்தால் இடையில் அற் றுச்சாரியையும், உருபின்மேல் முற்றும்மையும்பெறும்; உயர் திணையில் வரும்போது இடையில் நம்முச்சாரியையும் உருபின் மேல் முற்றும்மையும்பெறும்.]

(உ-ம்.) எல்லாவற்றையும், எல்லாவற்றினும்
எல்லாநம்மையும், எல்லாநம்மாலும்.

---

74. THE DECLENSION OF தான், தாம், நாம், யான், யாம் நீ AND நீர்.

தான் தாம் நாம் முதல் குறுகும் யான் யாம்
நீ நீர் என் எம் நின் நும் ஆம்பிற
குவ்வின் அவ்வரும் நான்கா றிரட்டல.

[உருபு.சூ.8.

[தான் தாம், நாம் ஆகிய மூன்றுபெயரும், வேற்றுமை உருபு பெறும்போது தன், தம், நம், என நெடில் முதல் குறு கும்; யான், யாம், நீ, நீர் ஆகிய நான்குபெயர்களும் வேற் றுமை உருபுபெறும்போது "என்," எம், நின், நும் என வரும்; இவ்வேழுபெயரோடும் கு உருபு புணர்ந்தால் நடுவே

அகரச்சாரியைவரும்; கு உருபின் அகரச்சாரியைவந்தாலும் ஆறும்வேற்றுமை உருபுகள் வந்தாலும் இவ்வேழுசொற்களி லும் இறுதியாகிய தனிக்குறில்முன் ஒற்றுகள் இரட்டாவாம்.]

☞ "பிற" என்றதனால் பின்வருவதையுங் கொள்க.—

நீ [1-ம் வேற்.], உன்னை [2-ம் வேற்.]

நீர் [1-ம் வேற்.], உம்மை [2-ம் வேற்.]

---

75. வ் ஈற்றுச்சுட்டு வேற்றுமை உருபுபுணரும்போது வரும் விதம்.—THE DECLENSION OF வ ENDING DEMONSTRATIVES.

வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

[உருபு.சூ.11.]

[வ் ஈற்று மூன்றுசுட்டுப்பெயருக்கும் வேற்றுமை உருபுகள் புணரும் இடத்தில் அற்றுச்சாரியை பொருந்துதல் முறைமை ஆம்.]

(உ-ம்.) அவற்றை, இவற்றை, உவற்றை.

☞ "வழியே" என்றதனால் "அவற்றினை" இவற்றினை என "இன்" சாரியை பெறுதலும், தனிக்குறில்முன் ஒற்றுயிர் வந்த இடத்தில் இரட்டியாமையும் அமையும் எனக்கொள்க.

---

76. சாரியைகாணும்வகை.—HOW THE INCREMENT IS TO BE DISCOVERED.

இதற்கிது சாரியை எனின் அளவின்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்திடை
நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்ற உணர்த்தல் உரம்வார் நெறியே.

[உருபு.சூ.14.]

[விகுதிமுதலிய புணர்ச்சிகளில் இதற்குஇதுசாரியை என்று அளவுசெய்து விதித்தனவற்றுள்ளும், ஒழிந்தனவற்றுள்ளும், தனித்தனிச்சொல்லத்தொடங்கினால்அளவுபடாதாதலால்விகு

கிமுதலிய புணர்ச்சிகள்வரும் இடத்தில் அப்புணர்ச்சிகளைப் பகுத்து ஏ, அ முதலிய எழுத்துச்சாரியைகளையும், அன், ஆன் முதலிய பதச்சாரியைகளையும், இவ்விரண்டுசாரியையும் இல்லாமல்நிற்கிற இயல்பையும்தெரிய அறிவித்தல்பெரியோருடைய நெறியாம்.]



புறனடை.

77. இரண்டாம் வேற்றுமையைக்குறித்து.—PECULIARITIES OF THE SECOND CASE.

இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை இடத்து விரிந்தும் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவும் ஆகும் ஐ உருபே. [உருபு.சூ.16.]

[பொதுவிதியோடு முடிதலே அன்றி அப்படிவிதித்த இயல்பிலே விகாரமாயும், விகாரத்திலே இயல்பாயும், உயர்திணையில் விரிந்தும் மறைந்தும் பொதுப்பெயரில் விரிந்தும் மறைந்தும் இவைபோல்வன பிறவேறுபாடுகளும் வரும் இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி.]

(உ-ம்.)

(1.) "நிற்புறம் காக்க".......... ..[இயல்பில் விகாரம்.]

(2.) மண்கொணர்ந்தான்..........[விகாரத்தில் இயல்பு.]

(3.) நம்பியைக்கொணர்ந்தான், கொற்றனைக்கொணர்ந்தான். [உயர்திணை, விரவுப்பெயர்களில் விரிந்தன.]

(4.) பல்லோர் அறியுஞ்சொல், ஆண்பெற்றாள்............... [உயர்திணை, விரவுப்பெயர்களில்மறைந்தன.]

☞ பிறவும் என்றதனால் பின்வருவனவும் அமையும்.

(5.) வாருகட்டினான்.................[இயல்பில் இயல்பு.]

(6.) பலாக்குறைத்தான்............[விகாரத்தில் விகாரம்.]

(7.) தற்கொண்டான்... ........[உறழ்ச்சியில் திரிந்துவந்தது.]

## 78. A CONCLUDING REMARK.

இதிற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

[இதற்கிது முடிபுஎன்று இவ்வதிகாரத்தில் விதிக்கத்தக்கவைகளை எல்லாம் தனித்தனி வரையறுத்துச் சொல்லத்தொடங்கினால் அதற்கு அளவிராது; ஆதலால், வகுத்துச்சொல்லியவைகளின் இலக்கணங்களைக்கொண்டு வகுத்து விதிசொல்லாதனவற்றையும் கருத்தினால் வகுத்துக்கொள்க.]

## [illegible]திகாரம்.—ETYMOLOGY.

### I-வது: பெயரியல்.—OF NOUNS.



### மொழி.

**79. சொல் இன்னதென்பது.—சொல் DEFINED.**

ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி என்று
இருதிணை ஐம்பாற் பொருளையும் தன்னையும்
மூவகை இடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.
[பெயர்.சூ.2.]

*[ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி என மூன்று பிரிவை உடையதாகி, இருதிணை ஆகிய ஐம்பாற்பொருளையும் அப்பொருளை அன்றித்தன்னையும், மூன்றிடத்திலும் வழக்கிலும் செய்யுளிலும், வெளிப்படையாலும் குறிப்பினாலும் விளக்குவது சொல்லாகும்.]*



**80. சொல் இத்தனைவகை என்பது.—KINDS OF சொல்.**

ஒருமொழி ஒருபொரு ளனவாம் தொடர்மொழி
பலபொரு ளனபொது இருமையும் ஏற்பன.
[பெயர்.சூ.3.]

*[ஒருமொழிகளாவன ஒருபொருளைத்தருவனவாம். தொடர்மொழிகளாவன பலபொருளைத்தருவன. பொதுமொழிகளாவன ஒருமொழிக்கும் தொடர்மொழிக்கும் பொதுவாய் நிற்பன.]*

(உ-ம்.)

(1.) நிலம், நட, உறு, மன். ..... ................[ஒருமொழிகள்.]

(2.) நிலம்வலிது, அதுசெய், சாலப்பெரியன்.[தொடர்மொழிகள்.]

(3.) எட்டு, தாமரை, வேங்கை.. .. .. . ......[பொதுமொழிகள்.]

☞ எட்டு=எள்+து=எள் உண்; எட்டு=8.
தாமரை=தாவும்மரை; தாமரை=தாமரை என்னும்செடி.
வேங்கை=வேகும்கை; வேங்கை=ஓர்புலி அல்லது ஓர்மரம்.



81. உயர்திணை, அஃறிணைப்பெயர்.—HIGH CASTE AND NO CASTE NOUNS.

மக்கள் தேவர் நரகர் உயர்
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.

[பெயர்.சூ.4.]

[மக்கள், தேவர், நரகர்ஆகிய இவர்களைக்குறிக்கும் பெயர் உயர்திணைபெயர் ஆம்; இவர்கள்தவிரமற்றும் உயிருள்ளவைகளையும் இல்லாதவைகளையும் குறிக்கும்பெயர்அஃறிணைப் பெயராம்.]

82. உயர்திணையின்வகை.—DIVISIONS OF HIGH CASTE NOUNS.

ஆண் பெண் பலர் என முப்பாற் றுயர்திணை.

[பெயர்.சூ.5.]

[உயர்திணைஆனது ஆண், பெண், பலர் என மூன்றுபாலையும் உடையது.]

(உ-ம்.) உயர்திணை. { ஆண்பால்......மகன், அரசன்.
பெண்பால்......மகள், அரசி.
பலர்பால்.........அரசர், புத்திரர்.

83. அஃறிணையின்வகை.—DIVISIONS OF NO CASTE NOUNS.

ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை

[பெயர்.சூ.6.]

[அஃறிணை ஆனது ஒன்று, பல என இரண்டுபாலை உடையது.]

(உ-ம்.) அஃறிணை. { ஒன்றன்பால்......அது.
பலவின்பால்......அவை, மரங்கள்.

---

## இடம்.

84. மூவிடம்.—THE THREE PERSONS.

தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

[பெயர்.சூ.9.]

[மூவிடம் ஆவன :—தன்மை, முன்னிலை, படர்க்கை.]

(உ-ம்.) நான், நடந்தேன்......................[தன்மை.]
நீ, நடந்தாய்..............................[முன்னிலை.]
அவன், நடந்தான்..........................[படர்க்கை.]

---

## சொல்.

85. வழக்கு இவை என்பது.—DIVISIONS OF TAMIL USAGES.

இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகும் மூவகை இயல்பும்
இடக்க ரடக்கல் மங்கலங் குழூஉக்(
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

[பெயர்.சூ.10.]

[இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ என்று வழங்குகிற மூன்றுவகை இயல்புவழக்கும்; இடக்கரடக்கல் மங்கலம், குழூஉக்குறி என்று வழங்குகின்ற மூன்றுதகுதிவழக்குடனே வழக்கிலக்கணம் ஆறும்.]

[I. இயல்புவழக்கு.]

உ-ம்.)

(1.) நிலம், நீர், தீ............ {[இலக்கணமுடையது ; அ-து : இலக்கண வழியால்வந்தது.]

(2.) முன்றில்[=இல்முன்].. புறநகர்[=நகர்ப்புறம்] மீகண்[=கண்மீ]........ } [இலக்கணப்போலி. அ-து : இலக்கணம் இல்லை ஆனாலும் இலக்கணமுடையதுபோல் வருவது.]

(3.) அருமந்தபிள்ளை = அருமருந்தன்னபிள்ளை சோணாடு[=சோழநாடு] } [மரூஉ ; அ-து : இலக்கணம்சிதைந்து மருவியது.]

[II. தகுதி வழக்கு.]

(1.) கால்கழீஇவருதும்...... {[இடக்கர் அடக்கல் ; அ-து. சொல்லத்தகாததை மறைத்துச்சொல்வது.]

(2.) துஞ்சினார்[=செத்தார்] திருமுகம்[=ஓலை]... ... வெள்ளாடு[=காராடு].. } [மங்கலம் ; அ-து : மங்கலம் இல்லாததைத்தவிர்த்து மங்கலமாகச் சொல்வது.]

(3.) பரி[=பொன்]......... காரை[=ஆடை]....... சொல்விளம்பி[=கள்].. {[குழூஉக்குறி ; அ-து: ஒருகூட்டத்தார் ஏதாயினும் ஒருகாரணம் பற்றி ஒருபொருளின் பெயரை விட்டு வேறொருசொல்லாற் சொல்வது.]

---

87. வெளிப்படை, குறிப்பு.—DIRECT AND INDIRECT EXPRESSIONS.

ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயர்அன் மொழிவினைக் குறிப்பே
முதல்தொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பின் தருமொழி அல்லன வெளிப்படை.

[பெயர்.சூ.12.]

[இருதிணை ஆண்பெண்ணுள் ஒன்றை ஒழிக்கும் பொதுச்சொல், வலித்தல்முதலிய ஒன்பது விகாரச்சொல், மூன்று தகுதிவழக்குச்சொல், ஆகுபெயர்ச்சொல், அன்மொழித்தொகைச்சொல், வினைக்குறிப்புச்சொல், முதற்குறிப்புச்சொல், தொகைக்குறிப்புச்சொல், இந்தமுதல்தொகையல்லாத வேறு வழியால்வருங்குறிப்புச்சொல் ஆகியஇவைகளும் இவைபோன்றவேறுசொற்களும் குறிப்பினால்இருதிணை ஐம்பாற்பொருளைத்தரும் சொற்கள் ஆம்; இவைஅல்லாத மற்றைச்சொற்கள் எல்லாம் வெளிப்படையால் அப்பொருளைத்தரும் சொற்கள் ஆம்.]

(உ-ம்.)

(1.) ஆயிரமக்கள் பொருதார் [உயர்திணை ஆண்பால்.]
[மக்கள், பொதுப்பெயர்; பொருதார், விகுதியால் பொதுவினை.]
(2.) பிறைக்கடை பிறக்கிட......[பிறங்கிட, விகாரம்.]
(3.) பறி ...................... [பொன், தகுதிவழக்கு.]
(4.) புளித்தின்றான்.... ... ......[புளியம்பழம், ஆகுபெயர்.]
(5.) முற்றிழாய்! .. ...... .. .. ...[பெண்ணே! அன்மொழித்தொகை.]
(6.) இவனிப்போதுசெல்வன்... [வினைக்குறிப்பு.]
(7.) ஆத்திசூடி படித்தான் ... ... [முதற்குறிப்பு.]
(8.) கன்னனோடு ஐவர்வந்தார். [பாண்டவர், தொகைக்குறிப்பு.]

---

83. சொல் இத்தனை என்பது.—CLASSES OF WORDS.

அதுவே,

இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
எனஇரண் டாகும் இடைஉரி அடுத்து
நான்கும்ஆம் திசைவட சொல்லணு காவழி.
[பெயர்.சூ.13]

[முன்காட்டியசொல் இயற்சொல், திரிசொல், என்னும் தன்மையை உடைய பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும் என இரண்டாம்; இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அவற்றுடன் சேர்ந்து நான்கும் ஆம்; (இப்படி நான்காய்வருவது) திசைச்சொல்லும் வடசொல்லும் அவற்றுடன் சேராதவிடத்து.]

89. இயற்சொல் இதுஎன்பது.—ORDINARY TAMIL WORDS.

செந்தமிழ் ஆகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.
[பெயர்.சூ.14.]

[செந்தமிழ் நிலத்துமொழிஆகி, திரிசொல்லைப்போல் ஆகாமல் கற்ருேருக்கும் மற்ருேருக்கும் தம்பொருளை ஒருசரியாய் விளக்குகின்றதன்மையைஉடையஉலகவழக்கே இயற்சொல்.]

(உ-ம்) மண், பொன், மரம்......[பெயர் இயற்சொல்.]
நடந்தான், இருப்பான்..[வினை இயற்சொல்.]
அவனை, அவனுல்.........[ஐ, ஆல் இடை இயற்சொல்.]
அழகு, அன்பு.... .......[உரி இயற்சொல்.]



90. திரிசொல் இது என்பது.—SYNONYMS AND WORDS OF SEVERAL SIGNIFICATIONS.

ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் ஆகும்.
[பெயர்.சூ.15.]

[ஒருபொருளைக்கருதிய பலசொல் ஆகியும், பலபொருளைக்கருதிய ஒருசொல் ஆகியும், அரிதாகக்கற்ருேர் அறிகின்றபொருளை உடையனவாய்வருவன திரிசொல்ஆம்.]

(உ-ம்.) (1.) பெயர்.
கிள்ளை, சுகம், தத்தை.
[கிளி என்னும் ஒரு பொருள்குறித்த பலபெயர்த்திரிசொல்.]
வாரணம் [=யானை, சங்கு, கோழி.]
[பல பொருள்குறித்த ஒரு பெயர்த்திரிசொல்.]

(2.) வினை.
படர்ந்தான், சென்ருன் [=போனுன்.]
[ஒரு பொருள்குறித்த பலவினைத்திரிசொல்.]

இறுத்தான் [=சொன்னான், வடித்தான்.]
[பலபொருள்குறித்த ஒரு வினைத்திரிசொல்.]

(3.) இடை.

சேறும், வருதும் [றும், தும்; தன்மைப்பன்மைவிகுதிகள்.]
[ஒருபொருள்குறித்த பலஇடைத்திரிசொல்.]

கொல்.

[இது ஐயப்பொருளில் ஆவது அசைநிலையாக ஆவதுவரும் ஆதலால், பலபொருள் குறித்தவொரிடைத்திரிசொல்.]

(4.) உரி.

சால, உறு, தவ, நனி, கூர், கழி [=மிகல்.]
[ஒருபொருள் குறித்த பலஉரித்திரிசொல்.]

கடி [=மணம், காப்பு, கூர்மை, இன்பம், அச்சம்.]
[பலபொருள்குறித்த ஒருரித்திரிசொல்.]



91. திசைச்சொல் இது என்பது.—WORDS PECULIAR TO CERTAIN DISTRICTS.

செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழ்ஒழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப.

[பெயர்.சூ 16.]

[செந்தமிழ் நிலத்தைச்சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்திலும், பதினெட்டுமொழிகளுள் தமிழ்ஒழிந்தமற்றைப் பாஷைகள் வழங்குமிடங்களிலும் உள்ளோரது குறிப்பை உடையனவாய் அவ்விடங்களில் இருந்து செந்தமிழ்நிலத்தில் வந்துவழங்குவன திசைச்சொல் என்றுசொல்வார் புலவர்.]

உ-ம்.) தென்பாண்டியில்......[பசு=பெற்றம்.]
குட்டநாட்டில்.........[தாய்=தள்ளை.]
குடநாட்டில்............[தந்தை=அச்சன்.]

92. வடசொல் இது என்பது.—SANSCRIT WORDS.

பொதுஎழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.

[பெயர்.சூ.17.]

[ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவாகிய எழுத்தாலும் ஆரியத்துக்குமாத்திரமே உரியசிறப்பெழுத்தாலும் இவ்விரு வகை யெழுத்தாலும் செந்தமிழ்ச்சொல்லைப்போல் வடதிசை யில்இருந்து செந்தமிழ்நாட்டில்வந்து வழங்குவனவடசொல்.]

(உ-ம்). அமலம், கமலம்.........[பொதுஎழுத்தால்.]
சுகி, சுத்தி.. ...............[சிறப்பெழுத்தால்.]
கடினம், சலம்... ...... ...[ஈரெழுத்தால்.]

---

பெயர்.

93. பெயர்ச்சொல்.—NOUN.

இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழில்அல காலந்தோற்றா
வேற்றுமைக் கிடன்ஆய்த் திணைபால் இடத்தொன்
றேற்பவும் பொதுவும் ஆவனபெயரே.

[பெயர்.சூ.18.]

[இடுகுறியும், காரணக்குறியும், மரபையும் ஆக்கத்தையும் தொடர்ந்து, வினையால் அணையும்காரணக்குறி அல்லாதவை காலத்தைக்காட்டாமல், எட்டு வேற்றுமையும் சார்ந்துவரு தற்கு இடமாய், 'இருதிணை ஐம்பால் மூவிடம் ஆகியவற்றுள் ஒன்றை ஆவது, பலவற்றை ஆவது ஏற்பனவாய்வருவன பெய ர்கள் ஆம்.]

(உ-ம்.)
(1.) மரம், பனை, பலா... ... ... ...[இடுகுறிமரபு.]
(2.) அவன், பறவை, விலங்கு...[காரணக்குறிமரபு.]

(3.) "பொன்போலும் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கிசைந்தனளே ; மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாறுய தெவ்வர்போங்
கானவேல் முட்டைக்குங் காடு."

[குமரன்பெயர்=முட்டை ; இடுகுறி ஆக்கம்.]

(4.) பொன்னன், பூணன்... ...[காரணக்குறி ஆக்கம்.]
மற்றவைகளுக்கு உதாரணம் 2-ம். பக்கத்திற்காண்க.

☞ ஆண், பெண், பலர், ஒன்று, பலஎன்னும்பாற் பெயர் வரும்விதம் :—

(1.) பொருள்முதலிய ஆறுடன் சுட்டு, வினு, பிற, மற்று இவைகளின் அடியாகப்பிறந்து அன், ஆன், விகுதிகளைக்கொண்டு முடியுஞ் சொற்களும் ; நம்பி, ஆடூஉ, விடலை, கோ, வேள், குரிசில், தோன்றல் முதலிய பெயர்களும் ஆண்பாற் பெயராம்.

(உ-ம்.) தமன், ஊரன், தையான், செங்கணன், கரியன் ஈவான், அவன், எவன், பிறன், மற்றையான்.

(2.) மேற்கூறியவைகள் அடியாகப்பிறந்து ள் இ என்னும் விகுதிகளைப்பெற்று வருவனவும் ; தோழி, செவிலி, மகடூஉ, நங்கை முதலானபெயர்களும் பெண்பாற் பெயராம்.

(உ-ம்.) தமள், சருவூரி, ஆதிரையாள், தடங்கண்ணி, பெரியள், ஈவாள், எவள், அவள்.

(3.) அவ்வாறேபிறந்தர் ஈற்றுப்பெயர்களும், கள் என்னும் விகுதி ஏற்றுவருவனவும் பலர்பாற் பெயர்களாம்.

(உ-ம்.) தமர், கோக்கள், அரசர்கள், எவர், அவர்.

(4.) மேற்காட்டியபடியே பிறந்த து விகுதியை உடைய பெயரும், "ஒன்று" என்னும்பெயரும் ஒன்றன்பாற் பெயராம்.

(உ-ம்.) கரியது, ஒன்று, எது, இது, அஃது.

(5.) முன்சொன்னவழியேபிறந்து, அ, கள் விகுதிகளைப் பெற்று. "ஒன்று" அல்லாத பலபொருளைக்குறிப்பனவும், வ் ஈற்றுச்சுட்டும் உள்ள, இல்ல, பல்ல, சில்ல, உள, இல, பல, சில முதலியபெயர்களும் பலவின்பாற் பெயர் ஆம்.

(உ-ம்.) நெடியவை, குதிரைகள், இரண்டு, எவை, இவை, அவ்.

[பெயர்.சூ.19—23.]



94. பால்பகா அஃறிணைப்பெயர்.—NO CASTE NOUNS BOTH SINGULAR AND PLURAL.

பால்பகா அஃறிணைப் பெயர்கள் பாற்பொதுவே.

[பெயர்.சூ.24.]

[அஃறிணைப்பெயர்களுள் ஒருமை, பன்மை பகுக்கப்படாத பெயர்கள் எல்லாம் அத்திணையின் இருபாலுக்கும்பொதுவான பெயர்கள் ஆம்.]

(உ-ம்.) (1.) குதிரைவந்தது ............ [ஒருமை.]
(2.) குதிரைவந்தன ............ [பன்மை.]



95. தன்மை, முன்னிலை, படர்க்கைப்பெயர்கள்.
THE PERSONS OF பெயர்.

தன்மை யான் நான் யாம் நாம் முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை எல்லாம் எனல்பொது.

[பெயர் சூ.28]

[யான், நான், யாம், நாம் இவைதன்மைப்பெயர்கள், எல்லீர், நீயிர், நீவிர், நீர், நீ இவைமுன்னிலைப்பெயர்கள், இவ்வொன்பதும் அல்லாதபெயர்கள் படர்க்கைப்பெயர்கள் ஆம்; அவற்றுள் "எல்லாம்" என்பது மூவிடத்திற்கும்பொதுவாம்.]

96. தான் முதலியவை ஒருமை; தாம் முதலியவை பன்மை.
தான், யான் &c. SINGULAR; தாம், யாம் &c. PLURAL.

தான் யான் நான் நீ ஒருமை பன்மைதாம்
யாம் நாம் எலாம் எலீர் நீயிர் நீர் நீவிர்.

[பெயர்.சூ.30.]

[தான், யான், நான், நீ என்கிறஇவை இருதிணை ஒருமை யில்வரும் பெயர்களாம். தாம், யாம், நாம், எல்லாம், எல்லீர், நீயிர், நீர், நீவிர் என்பவை இருதிணைப் பன்மையில்வரும் பெயர்களாம்.]



97. எண்ணால்வரும் உயர்திணைப்பெயர் [புறனடை.]
HIGH CASTE NOUNS FROM NUMBERS.

ஒருவன் ஒருத்தி பெயர்மேல் எண்ணில.

[பெயர்.சூ.31.]

["ஒன்று" என்னும் எண்ணால் "ஒருவன்," "ஒருத்தி" என வருமே அல்லாமல் இவற்றின்மேல் இரண்டுமுதலாகிய எண்களால்இவ்வகை ஆண்பாற்பெயரும்பெண்பாற்பெயரும்வரா.]



98. "ஒருவர்" என்னும் பெயர்.—THE NOUN ஒருவர்.

ஒருவர் என்ப துயர்இரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

[பெயர்.சூ.32.

["ஒருவர்" என்னுஞ்சொல் உயர்திணை ஆண்பெண் ஆகிய இரண்டுபாலுக்கும் பொதுவாய் அத்திணையிலே பன்மைவினை முற்றைக்கொண்டுமுடியும் தன்மையை உடையது என்று புலவர்சொல்வார்.]

(உ-ம்) ஆடவருள் ஒருவர் அறத்தின் வழிநிற்பார்.
பெண்டிருள் ஒருவர் கொழுநன் வழிநிற்பார்.

## 99. ஆகுபெயர் வரும்விதம்.—METONYMY.

பொருள்முதல் ஆறோ டளவைசொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே.

[பெயர் சூ.33.]

[பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகிய ஆறுடனே நால்வகை அளவை, சொல், தானி, காரணம், காரியம், கருத்தா முதலாய்வரும் பொருள்களுள் ஒருபொருளின் இயற்பெயரால் அப்பொருளுக்கு இசைந்தவேறு ஒருபொருளை முற்காலந்தொடுத்து வழங்கிவருகிற முறைப்படியே சொல்லப்பட்டுவருவன ஆகுபெயர் ஆம்.]

(உ-ம்.)

(1.) குவளை போலுங் கண்,....["குவளை" பொருள் ஆகுபெயர்.]
[முதற்பொருளின் பெயர்சினைப்பொருளுக்கு ஆனது.]

(2.) "ஊர்கேட்ப"................["ஊர்" இட ஆகுபெயர்.]
[இடப்பெயர் மனிதருக்கு ஆனது.]

(3.) கார் அறுத்தது..............["கார்" கால ஆகுபெயர்.]
[மாரிகாலத்துப்பெயர் அக்காலத்துப்பயிருக்கு ஆனது.]

(4.) வெற்றிலை நட்டான்..........["இலை" சினை ஆகுபெயர்.]
[அவயவத்தின் பெயர் கொடிக்கானது.]

(5.) "தூண்முட்டும் ஆம்கீழ்."...["கீழ்" குண ஆகுபெயர்.]
[குணத்தின்பெயர் மனிதனுக்கு ஆனது.]

(6.) வற்றல் உண்டான்..........["வற்றல்" தொழில் ஆகுபெயர்.]
[தொழிலின்பெயர் உணவிற்கு ஆனது.]

(7.) காலாலே நடந்தான்.["கால்" எண்ணல் அளவை ஆகுபெயர்.]
[எண்ணல் அளவைப்பெயர் உறுப்பிற்கு ஆனது.]
துலாக்கோல்.....["துலா" எடுத்தல் அளவை ஆகுபெயர்.]
நாழி உடைந்தது.["நாழி" முகத்தல் அளவை ஆகுபெயர்.]
இப்புலம் பத்துப்பரப்பு["பரப்பு" நீட்டல்அளவை ஆகுபெயர்.]

(8.) இதற்குரைசொல்............["உரை" சொல் ஆகுபெயர்.]
[சொல்லின்பெயர் பொருளுக்கு ஆனது.]

(9.) விளக்கு முறிந்தது...........["விளக்கு" தானி ஆகுபெயர்.
[தீபத்தின்பெயர் தண்டினுக்கு ஆனது.]

(10) திருவாசகம்.....................[காரண ஆகுபெயர்.]
[முதற்காரணத்தின்பெயர் செய்யுளுக்கு ஆனது.]

(11.) இந்நூல் அலங்காரம்..["அலங்காரம்" காரிய ஆகுபெயர்.
[காரியத்தின்பெயர் காரணத்திற்கு ஆனது.]

(12.) இந்நூல்திருவள்ளுவர்["திருவள்ளுவர்" கருத்தா ஆகுபெயர்.
[கருத்தாவின் பெயர்நூலுக்கு ஆனது.]

(13.) வெற்றிலை நட்டான்.........[அடைஅடுத்த ஆகுபெயர்.]
[இலை ஆகிய சினைப்பெயர் வெறுமைஎன்கிற அடை அடுத்து இலையை உடையபொருள் ஆகியகொடிக்கு ஆனது.]

☞ (1.) "ஆதி" என்றதனால் இன்னும் சில அமையும்:—
(உ-ம்.) காளைவந்தான், பாவைவந்தாள்.[உவமை ஆகுபெயர்.]
(2) கார் அறுத்தது என்பதில்,
கார்=கருநிறம், (மேலும்,) கார்=கார்மேகம்.
[இருமடி ஆகுபெயர்.]
(மேலும்,) கார்=ஓர்தானியம்.
[மும்மடி ஆகுபெயர்.]

(3.) மனுஷருக்கிட்டு வழங்கிவரும் தேவர் முதலியவர்பெயரும் ஒருவகை ஆகுபெயராம் எனக்கொள்க.

---

## வேற்றுமை.

100. வேற்றுமை இன்னதென்பதும் இத்தனை என்பதும்.—
CASE DEFINED: THE NUMBER OF CASES.

ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும்ஈ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.
[பெயர்.சூ.31.]

[ஏற்ற எவ்வகையானபெயர்க்கும் இறுதியாய் அப்பெயர்ப் பொருளைவேறுபடுத்துவன ஆகியவேற்றுமைகள் எட்டாம்.]

---

101. வேற்றுமையின்பெயரும் முறையும்.—THE NAME AND ORDER OF THE CASES.

பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளி என் றாகும் அவற்றின் பெயர்முறை.

[பெயர்.சூ.35.]

[அவ்வேற்றுமைகளுடைய பெயர்களும்முறையும் ஆவன பெயர், ஐ, ஆல், கு, இன், அது, கண், விளிஎன்பனஆம்.]

---

102. எழுவாய் மற்றஉருபுகளை ஏற்கும்.—THE SIX CASUAL TERMINATIONS ARE ADDED TO THE NOMINATIVE.

ஆறன் உருபும் ஏற்கும்அவ் உருபே.

[பெயர்.சூ.36.]

[எழுவாய்உருபு ஐ முதலிய ஆறுவேற்றுமை உருபுகளையும் ஏற்கும்.]

---

103. ஐ முதலியஉருபு ஏலாதவை.—WORDS WHICH DO NOT ADMIT OF THESE TERMINATIONS.

நீயிர் நீவிர் நான் எழுவாய் அலபெறா.

[பெயர்.சூ.37.]

[நீயிர், நீவிர், நான் என்னும்மூன்றுபெயரும் எழுவாய்வேற்றுமையல்லாத பிறவேற்றுமைகளை ஏலா.]

---

104. எழுவாய்வேற்றுமை : பயனிலை.—THE NOMINATIVE : ITS PREDICATE.

அவற்றுள்,—எழுவாய் உருவு திரிபில் பெயரே
வினை பெயர் வினாக்கொளல் அதன்பய னிலையே.

[பெயர்.சூ.38.]

[வேற்றுமைகளுள் முதல்வேற்றுமையின் உருபு ஐ முதலிய உருபுபெற்றுத்திரியாத பெயரேயாம்; வினை, பெயர், வினா, இவைகளைக்கொள்வதே அதன்பொருணிலையாம்.]

(உ-ம்.) (1.) "தீயினாற் சுட்டபுண் உள்ளாறும்." [குறள். 13,9.]
["ஆறும்" வினை.]
(2.) "அறத்தான் வருவதே இன்பம்." [குறள். 4,9.]
["இன்பம்" பெயர்.]
(3.) "ஏதிலனை நோவ தெவன்." [நீதிநெறி. 25.]
["எவன்" வினா.]

இம்முதல் வேற்றுமைக்கு உருபு இல்லையாயினும் ஆனவன், என்பவன், ஆனவள், ஆனது என்பது, என்கின்றது, என்றது முதலானவை சொல்லுருபாகவரும் எனக்கொள்க.

105. இரண்டாம்வேற்றுமை.—THE SECOND CASE.

இரண்டா வதன்உரு பையே அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும். [பெயர். சூ. 39.

[இரண்டாம் வேற்றுமையின் உருபு ஐ என்பதே அதன் பொருள் ஆக்கல்முதலிய ஆறும் பிறவுமாம்.]
[இவை எழுவாய்வேறுபட்ட செயப்படுபொருள்களாம்.]

(உ-ம்.)
(1.) வீட்டைக்கட்டினான் ... ... ... ... [ஆக்கல்.]
(2.) மரத்தைவெட்டினான் ... ... ... ... [அழித்தல்.]
(3.) மோட்சத்தை அடைந்தான்.. [அடைதல்.]
(4.) ஊரைவிட்டான் ... ... ... ... ... [நீத்தல்=விடுதல்.]
(5.) மலையை ஒத்தான் ... ... ... ... [ஒத்தல்.]
(6.) செல்வத்தை உடையான் ... ... [உடைமை.]
(7.) அரசன்பகைவரைச்சிறைச்சாலையை அடைவித்தான் ... ... ... ... ... ... [செயப்படுபொருள் குன்றுவினைக்கு இரண்டுசெயப்படுபொருள்வந்தன.]

## 106. மூன்றும்வேற்றுமை.—THE THIRD CASE.

மூன்று வதனுரு பால் ஆன் ஓடொடு
கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள்.

[பெயர்.சூ.40.]

[மூன்றும்வேற்றுமையின்உருபு ஆல், ஆன், ஓடு, ஒடு என்பவைகள். அவற்றின்பொருள் : கருவிமுதலிய மூன்றுமே.]

(உ-ம்.) (1.) பொன்னாற்செய்தவணி.............[கருவி.]
(2.) குயவனால்வனையப்பட்டகுடம்....[கருத்தா.]
(3.) கொற்றனோடு சாத்தன்வந்தான்.[உடனிகழ்ச்சி.]

☞ கருவி முதற்கருவி, துணைக்கருவிஎன இருவகைப்படும் ; சில இடங்களில் ஆல், ஆன் உருபுகள் சினைப்பொருளிலும் ஆல், தோறும் என்னும்பொருளிலும்வரும்.

(உ-ம்.) (1.) கண்ணால்குருடன்... ... ..[சினைப்பொருள்.]
(2.) ஊரால்ஓர்மடம்... ... ...[தோறும்.]



## 107. நான்காம்வேற்றுமை.—THE FOURTH CASE.

நான்கா வதற்குரு பாகும் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது ஆதல் [ருளே.
பொருட்டுமுறை ஆதியின் இதற்கிதெனல் பொ

[பெயர்.சூ.41.]

[நான்காம்வேற்றுமை உருபு கு என்பதே : அதன்பொருள் கொடைமுதலியவும் பிறவுமாம்.]

(உ-ம்)

(1.) சாத்தனுக்கு வீட்டைக்கொடுத்தான்...............[கொடை.]
(2.) அவனுக்கு இவன்பகை...............[பகை.]
(3.) கொற்றனுக்குநட்பன் சாத்தன்.[நேர்ச்சி.]
(4.) அருங்கலம் அரசர்க்குரியது.........[தகுதி.] ணகாரியம்.]
(5.) மோதிரத்திற்குப்பொன்...............[அது ஆதல் ; முதற்கார
(6.) கூழுக்குச்சூற்றேவல்,.................. [பொருட்டு=நிமித்த கா
(7.) கொற்றனுக்குமகன்....................[முறை.] ரணகாரியம்.]

108. ஐந்தாம்வேற்றுமை.—THE FIFTH CASE.

ஐந்தா வதன்உரு பில்லும் இன்னும்
நீங்கல்ஒப் பெல்லை ஏதுப்பொருளே.

[பெயர்.சூ.42.]

[ஐந்தாம் வேற்றுமையினது உருபு இல், இன் என்பவை களே. அவற்றின்பொருள் : நீங்கல்முதலியதாம்.]

உ-ம்.) (1.) "நுனியிற்கரும்புதினறற்று."......[நீங்கல்.]

(2.) "பால்உண்குருகிற்றெரிந்து."....[ஒப்பு.]

(3.) வேலூரிற்றெற்குச்சேலம்..........[எல்லை.]

(4.) கல்வியிற் பெரியர் கம்பர்..........[ஏது.]

இவ்வேற்றுமைக்குச் சொல்உருபுகளுமுண்டு அ-ன: நின்று, காட்டிலும், பார்க்கிலும், இருந்து.

109. ஆறும்வேற்றுமை.—THE SIXTH CASE.

ஆறன் ஒருமைக் கதுவும் ஆதுவும்
பன்மைக் கவ்வும் உருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

[பெயர்.சூ.43.]

[ஆறும்வேற்றுமையின் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்பன்மைக்குஅவ்வும்உருபாம். அவற்றின்பொருள் : பண்புமுதலிய ஐந்து தற்கிழமைப் பொருள்களும் அவை அல்லாதபிறிதின் கிழமைப்பொருள்களும் ஆம்.]

[I. தற்கிழமை.]

(உ-ம்.)

(1.) சாத்தனதுகருமை... [குணம்] } [பண்பு.]
சாத்தனதுவரவு.....[தொழில்.] }

(2.) கொற்றனதுதலை.................. } [உறுப்பு.]
குதிரையினதுசெவி..................

(3.) மனிதரதுதொகுதி.................. } [ஒன்றன்கூட்டம்.]
நெல்லினதுகுப்பை..................

(4.) மணிகளதுதொகுதி.................. } [பலவின்கூட்டம்.]
பறவைகளதுகூட்டம்..................

(5) நெல்லினதுபொரி.................. } [திரிபின்ஆக்கம் அ-து: ஒன்றுதிரிந்துஒன்றானது.]
மஞ்சளதுபொடி..................

[II. பிறிதின் கிழமை.]

(1.) கொற்றனது குதிரை........ } [பொருள்.]
சாத்தனது வாள்........

(2.) கொற்றனது வீடு........ } [இடம்.]
சாத்தனது நிலம்........

(3.) கொற்றனது நாள்........ } [காலம்.]
மாரனது வேனில்........

☞ மற்ற உருபுகள் வருவதற்கு உதாரணம் :—
எனதுகை, நினதுதலை, தனதுபுறம்[அது உருபு.]
எனகைகள், நினதாள்கள்,.................[அ உருபு.]
"கழுந்தராய்உன கழல்பணி யாதவர்" [இரா.சி.பாயிரம்.]
இவ்வேற்றுமைக்கு உடைய எனுஞ்சொல்லுருபுவரும்.



110. ஏழாம்வேற்றுமை.—THE SEVENTH CASE.

ஏழன் உருபுகண் ஆதி ஆகும்
பொருள்முதல் ஆறும் ஓரிரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொருள் என்ப.

[பெயர்.சூ.44.]

[ஏழாம்வேற்றுமையின் உருபுகண்முதலியனவும். இவற்றின் பொருள் ஆவன : தம்மைஏற்றபெயர்ப்பொருள் ஆகியபொ

ருள்முதலிய ஆறும் இரண்டுகிழமைப்பொருள்களுக்கும் இட
மாய் நிற்க அவற்றை வேறுபடுத்தலாம், என்று புலவர்சொ
ல்வார்.]

[உதாரணம்வரும் இடத்திற்காண்க]

---

111. ஏழாம்வேற்றுமை உருபுகள்.—THE TERMINATIONS OF THE SEVENTH CASE.

கண் கால் கடை இடை தலை வாய் திசை வயின்
முன் சார் வலம் இடம் மேல் கீழ் புடை முதல்
பின் பாடு அளை தேம் உழை வழி உழி உளி
உள் அகம் புறம் இல் இடப்பொருள் உருபே.

[பெயர்.சூ.45.]

[மேற்கூறிய கண்முதலானவை ஏழாம் வேற்றுமை இடப்
பொருள் உருபுகள் ஆம்.]

இவற்றிற்கு உதாரணம் வந்தஇடத்திற் காண்க.

112. எட்டாம் வேற்றுமை.—THE EIGHTH CASE.

எட்டன் உருபே எய்துபெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பயல்
திரிபும் ஆம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முகம் ஆகத் தான்அழைப் பதுவே.

[பெயர்.சூ.46.]

[எட்டாம் வேற்றுமையின் உருபுகள் விளி அடைந்தபெயர்
ஈற்றினது திரிதல், கெடுதல், மிகுதல், இயல்பாதல், ஈற்றுக்கு
அயல்எழுத்துத்திரிதல்,ஆகியவைஆம். அவற்றின்பொருள்: பட
ர்க்கை இடத்தாரைத்தனக்கெதிர்முகமாக அழைத்தலேஆம்.]

(உ-ம்.) குழையாய்! அரச! செல்வனே! மக்காள்!

113. விளி உருபு : ஓர்புறனடை.—A REMARK ON THE TERMINATIONS OF THE EIGHTH CASE.

அண்மையின் இயல்பும் ஈறழிவும் சேய்மையின்
அளபும் புலம்பின் ஓவும் ஆகும்.

[பெயர்.சூ.56.]

[மேற்சொல்லிய விளி உருபுகளுள் சமீபவிளிகளுக்கு இயல்பாதலும், ஈறுகெடுதலும்; தூரவிளிகளுக்கு அளபெடுத்தலும்; புலம்பல் விளிகளுக்கு ஓ மிகுந்துவருதலும் ஆகும்.]

(உ-ம்.)

(1.) தம்பி! [இயல்பு;] அரச! [ஈறழிவு.]......[அண்மை.]
(2.) மகனேஎ! [பிள்ளாஅய்! [அளபு.]......[சேய்மை.]
(3.) அண்ணாவோ!....................[புலம்பல்.]

114. எட்டாம் வேற்றுமையில் வாராதபெயர்கள்.—WORDS NOT ADMITTING OF THE VOCATIVE CASE.

நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வை துத் தாம்தான் இன்னன விளியா.

[பெயர்.சூ.57.]

[நு, மூன்றுமுதல்வினா, மூன்றுசுட்டு, இவைகளைப்பொருந்திய ன், ள், ர் ஈற்று உயர்திணைப்பெயர்களும், வை, து ஈற்று அஃறிணைப்பெயர்களும், தாம், தான் ஆகியபொதுப் பெயர்களும், இவைபோல்வனவும் விளிக்கப்படா.]

☞ "இன்னன" என்றதினால் பிறன், மற்றையான் முதலான

115. வேற்றுமை மயக்கம்.—INTERCHANGE OF CASES.

யாதன் உருபின் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.

[பெயர்.சூ.60.]

[எந்தவேற்றுமையிற் சொல்லிருந்தாலும் பொருள்சார்ந் தபக்கமே வேற்றுமைசாரும்.]

(உ-ம்.) "மனத்தால் மறுவிலர் ஏனுந்தாஞ் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர்." [நாலடி.18.10.]

[மனத்தால்=மனத்தில்; 7-ம் வேற்றுமை மயக்கம்.]

---

### எட்டுவேற்றுமைக்கும் முடிக்குஞ்சொல்.—THE GOVERNING WORD.

எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கேழ் இருமையும்
புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்.

[பெயர்.சூ.62.]

[எல்லைப்பொருளில்வரும் ஐந்தாம் வேற்றுமையும் ஆறும் வேற்றுமையும் பெயரைக்கொண்டுமுடியும்; இவைஅல்லாத மற்றைவெற்றுமைகள் எல்லாம்வினையைக்கொண்டு முடியும்; நான்காம், ஏழாம்வேற்றுமைகள் வினை, பெயர் ஆகிய இரண் டையுங்கொண்டு முடியும், மிகுதியும் என்று புலவர்சொல்வார்.]

[உதாரணம் அந்தந்தவேற்றுமை உதாரணங்களிற்காண்க.]

# சொல்லதிகாரம்.

## II-வது : வினையியல், OF VERBS.

Barthelemy

117. வினை இன்னதென்பது.—DEFINITION OF VERB.

செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.

[வினை.சூ.1.]

[செய்பவன் முதலிய ஆறுபொருளையுங் கொடுப்பது தெரி

☞ "செய்பவன்" என்பதை ஐம்பாலினுங் கொள்க.

(உ-ம்.) குடத்தைவனைந்தான்—இதில், குயவன் செய்பவன்; மண், தண்டசக்கரம் முதலியனகருவி; வனைந்தஇடமே இடம்; வனைதல் செயல்; இறந்தகாலமே காலம்; குடம், செய்பொருள்.

118 குறிப்புவினை.—THE INDIRECT VERB.

பொருள் முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.

[வினை.சூ.2.]

["பொருள்" முதலிய ஆறுங் காரணமாகப்பிறந்து முன் சொல்லிய "செய்பவன்" முதலிய ஆறனுள்கருத்தா ஆகிய ஒன்றைமாத்திரமே தெரிவித்துநிற்பது குறிப்புவினை ஆம்.]

(உ-ம்.) பொன்னன் [பொருள்]; வானத்தான் [இடம்.] விகுதியால் செய்பவன் தோன்றியது.

119. முற்றுவினை.—THE FINITE VERB.

பொது இயல் பாறையும் தோற்றிப் பொருட்பெ
முதல்அறு பெயர்அல தேற்பில முற்றே. [யர்
[வினை.சூ.4.]

[வினைக்குப்பொது இலக்கணம் ஆகிய "செய்பவன்" முத
லித்துப் பொருட்பெயர் முதல் ஆகிய
றுவகைப்பெயர் அல்லாத வேறொன்றையும் கொண்டுமுடி
யாதன குறிப்பு தெரிநிலை வினைமுற்றுகளாம்.]

(உ-ம்.) நடந்தான் பொன்னன் [தெரிநிலை];
பெரியது நிலம் [குறிப்பு.]

120. ஆண்பால் படர்க்கை.—THE THIRD PERSON SINGULAR, MASCULINE.

அன் ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை.
[வினை.சூ.6.]

[அன், ஆன் ஆகிய விகுதிகளை உடையசொற்கள் ஆண்பாற்
படர்க்கை ஆம்.]

(உ-ம்.) நடந்தனன் குழையன் [அன்.]
நடந்தான் குழையான் [ஆன்.]

121. பெண்பாற் படர்க்கை.—THE THIRD PERSON SINGULAR, FEMININE.

அள்ஆள் இறுமொழி பெண்பாற் படர்க்கை.
[வினை.சூ.7.]

[அள், ஆள் ஆகியவிகுதிகளை உடையசொற்கள் பெண்பாற்
படர்க்கை ஆம்.]

(உ-ம்.) (1.) நடந்தனள் [அள்]; (2.) நடந்தாள் [ஆள்.]

122. பலர்பாற் படர்க்கை.—THE THIRD PERSON PLURAL, HIGH CASTE.

அர் ஆர் பவ்வூர் அகரம்மார் ஈற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.

[வினை.சூ.8.]

[அர், ஆர், ப, மார் ஆகிய விகுதிகளை உடையசொற்கள் பலர்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள் மார் விகுதியையுடையசொல் பெயருடனல்லாமல் வினையுடனும் முடியும்.]

(உ-ம்.) (1.) நடந்தனர் [அர்.]; (2.) நடந்தார் [ஆர்.]
(3.) நடப்ப [ப.]; (4.) கொண்மார் வந்தார் [மார்.]

123. ஒன்றன்பாற் படர்க்கை.—THE THIRD PERSON SINGULAR, NO CASTE.

துறுடுக் குற்றியல் உகர ஈற்ற
ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பின் ஆகும்.

[வினை.சூ.9.]

[து, று, டு ஆகியவிகுதிகளை உடையசொற்கள் ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்; டு குறிப்புவினைக்குமாத்திரமே உரியதாம்.]

(உ-ம்.) (1.) நடந்தது [து.]; (2.) போயிற்று [று.]
(3.) பொருட்டு=பொருளை உடையது [டு.]

124. பலவின்பாற் படர்க்கை.—THE THIRD PERSON PLURAL, NO CASTE.

அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்.

[வினை.சூ.10.]

[அ, ஆ, ஆகிய விகுதிகளைஉடைய வினைச்சொற்கள் பலவின் பாற் படர்க்கை ஆம்; ஆ எதிர்மறையிடத்தது ஆகும்.]

(உ-ம்.) (1.) நடந்தன [அ.] (2.) நடவா [ஆ.]

ஆ, குறிப்புக்குவாராது.



125. இருதிணைக்கும் பொதுவினை.—VERBS COMMON TO THE TWO CLASSES.

தன்மை முன்னிலை வியங்கோள் வேறில்லை
உண்டெ ரெச்சம் இருதிணைப் பொதுவினை.

[வினை.சூ.11.]

[தன்மை, முன்னிலை, வியங்கோள் முற்றுகளும், வேறு, இல்லை, உண்டு என்கிற குறிப்பு வினைமுற்றுகளும் பெயர் எச்ச வினைஎச்சங்களும் இருதிணைக்கும் பொதுவினைகளாம்.]

126. தன்மை ஒருமைவினை.—THE FIRST PERSON SINGULAR.

கு டு து று என்னுங் குன்றியல் உகரமோ
டல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.

[வினை.சூ.12.]

[கு, டு, து, று ஆகியகுற்றியல் உகரவிகுதிகளையும், அல், அன், என், ஏன் ஆகியவிகுதிகளையும் உடையமொழிகள் இருதிணையில் மூன்றுபாலுக்கும் பொதுவான ஒருமைத்தன்மை முற்றும்]

கு, டு, து, று இவைதாமே காலங்காட்டுகின்றன அல் எதிர் காலவினைக்குமாத்திரம்வரும் ஆதலால் குறிப்புவினைக்குவாரா.

உ-ம்.) (1.) உண்கு............[கு, எதிர்வு.]

(2.) உண்டு..............[டு, இறப்பு.]

(3.) வந்து, [து, இறப்பு]; வருது......[து, எதிர்வு.]

(4.) சென்று, [று, இறப்பு]; சேறு.....[று, எதிர்வு.]
(5.) நடப்பல்...........[அல், எதிர்வு.]
(6.) வந்தனன்..........[அன்.]
(7.) வந்தனென் ......[என்.]
(8.) வந்தனேன் ......[ஏன்.]
(9) குழையினன்......[அன்.]

---

**127.** தன்மைப்பன்மை.—THE FIRST PERSON PLURAL.

அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்க்கை யாரையும்
உம்ஊர் க ட த ற இருபா லாரையும்
தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை.

[பெயர் சூ.13.]

[அம், ஆம் ஆகியவிகுதிகளை உடையசொற்கள் முன்னிலை யாரையும், எம், ஏம், ஓம் ஆகியவைகளை ஈற்றில் உடையமொழிகள்படர்க்கையாரையும், கும், டும் தும், றும் ஆகிய இவைகளை இறுதியாக உடையசொற்கள் முன்னிலையாரையும் படர்க்கையாரையும் தன்னோடுகூட்டும் உளப்பாட்டுத்தன்மைப் பன்மைமுற்றும்.]

(உ-ம்.)

(1.) சென்றனம், சென்றாம், [யாம், யானும் நீயும்.]

(2.) சென்றனெம், சென்றேம், சென்றோம் { யாம், யானும் அவனும்.

(3.) உண்கும், உண்டும், செல்லுதும், சேறும் { யாம், யானும் நீயும் அவனும்.

**128.** முன்னிலை உளப்பாட்டுப்பன்மை.—THE SECOND PERSON PLURAL. [*when the second person comes together with the third.*]

முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை.

[வினை.சூ.14.]

[முன்னிலையோடுகூடிய படர்க்கையும் முன்னிலையாம்.]

(உ-ம்.) நீயும் அவனும் வந்தீர், உண்மின், குழையீர்.



129. முன்னிலை ஒருமை.—THE SECOND PERSON SINGULAR.

ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉம் எல்லா வீற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.

[வினை.சூ.15.]

[ஐ, ஆய், இ ஆகிய ஈற்றுமொழிகளும் ஏவலில்வருகின்ற சகல ஈற்றுமொழிகளும் மூன்றுபால்களுக்கும் பொதுஆகிய முன்னிலை ஒருமைவினை ஆம்.]

(உ-ம்.) (1.) சென்றனை செல்கின்றாய் சேறி! [ஐ, ஆய், இ.]
(2.) செல்லாய் செல் நட படி [ஏவல் ஈறு.]
(3.) முடியினை, வேலாய், [குறிப்புவினை.]

☞ "மூன்றும்" என்று பிரித்தமையால் ஏவல் வினைமுற்றுக்கள் குறிப்புவினையில் இல்லை எனக்கொள்க.

இ எதிர்காலங்காட்டும்.



130. முன்னிலைப்பன்மை.—THE SECOND PERSON PLURAL.

இர் ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின்அவற் றேவல்.

[வினை.சூ.16.]

[இர், ஈர் ஆகிய இரு விகுதிகளையும் உடையசொற்கள் இருதிணைப்பன்மை முன்னிலை வினைஆம். மின் என்னும் விகுதியை உடையசொற்கள் அவற்றின் ஏவல்ஆம்.]

(உ-ம்.) (1.) நீர் சென்றனிர், சென்றீர், [தெரிநிலை.]
(2.) நீர் வில்லினிர், வில்லீர், [குறிப்பு.]
(3.) நீர் சென்மின், உண்மின், [ஏவல்.]

☞ உண்ணும் என உம் விகுதியும் வரும்.

## 131. வியங்கோள்.—THE OPTATIVE.

கய வொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப.

[வினை.சூ.19.]

[க, ய, ர் ஆகிய் இவைகளை இறுதியாக உடையமொழிகள் வியங்கோள் முற்றுகளாம். இவை மூவிடத்திலும் ஐம்பாலிலும் செல்லும் என்று புலவர் சொல்லுவார்.]

(உ-ம்.) வாழ்க, வாழிய, வாழியர்.

☞ சிறுபான்மை அல் விகுதியும்வரும் ; இதை
"வருத்துனையாதவும் வருத்தனர் கொளலே."
என இவ்வாசிரியர் கூறியதாற் கொள்க.

(உ-ம்.) "நன்றே தரினும் நடுஇகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்." [குறள்.123

[விடல்=விடுக.]

அகரவிகுதியும் வரும்.

(உ-ம்.)

"விண்ணிடை மதியினை மிகையிதென்னவே." [இரா.1.5.9.]

[என்ன=என்க.]

———

## 132. OF வேறு, இல்லை AND உண்டு.

வேறில்லை உண்டைம் பான்மூ விடத்தன.

[வினை சூ.20.]

[வேறு, இல்லை, உண்டு ஆகியமூன்று குறிப்புவினைமுற்றும் ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கும் உரியனவாம்.]

(உ-ம்.) யான், யாம். நீ, நீர்......
அவன், அவள், அவர்..... } வேறு, இல்லை, உண்டு.
அது, அவை...............

☞ மேற்கூறியவை அன்றி வேண்டும், தகும், படும், என்னுஞ்சொற்களும் ஐம்பால்மூவிடங்களுக்கும் பொதுவானவை எனக்கொள்க :—

(உ-ம்.)

(1.) "யானை அனையவர் நண்பொரீஇ நாய்அனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்." [நாலடி. 22. 3.

(2.) அவ்வேலைசெய்யத்தகும்.

(3.) "நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்." [குறள்.34.5.]

-❦-

## 133. பெயர் எச்சம்.—RELATIVE PARTICLES.

செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டிற்
காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
செய்வதாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே. [வினை. சூ.21.

[செய்த, செய்கின்ற, செய்யும் என்கிற மூன்றுவாய்பாட்டுச்சொற்களில் காலமும் செயலும் தோன்றி, பாலுடன் "செய்பவன்" முதலிய ஆறுவகைப்பொருட்பெயர்களும் குறைந்துநிற்பன பெயர் எச்சவினை ஆம்.]

(உ-ம்.)

(1.) உண்ட { சாத்தன், கலம், வீடு, ஊண், இராசோறு.

(2.) கரியபசு, உள்ளருணர். [குறிப்பு.]

——❦——

## 134. செய்யும் என்னும் எச்சம்.—THE RELATIVE PARTICIPLE செய்யும்.

செய்யும்என் எச்சஈற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்முந் தாகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.

[வினை. சூ.22.

[செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயர்எச்சத்தினுடைய ஈற்று உயிர்மெய்கெடுதலும், செய்யுளில் உம் விகுதி உந்து

எனத்திரிதலும், அதுவினைமுற்று ஆனால் அதன் ஈற்று உயிர் ஆனாலும் உயிர்மெய் ஆனாலும் கெடுதலும் உளவாம்.]

(உ-ம்.)

(1.) "யாதானும் நாடாமால் ஊராமால் என் ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு?" [குறள். 40. 7.]
[சாம்=சாரும்; கு கெட்டது.]

(2) "கூப்பெயர்க்குந்து நீர்க்கோழி."
[பெயர்க்குந்து=பெயர்க்கும்.]

(3.) "மருளினும் எல்லாம் மருண்ம"

(4.) "மார்வினையொடுமுடிமே." [வினை.சூ.8.]
[முடிமே=முடியுமே.]

-❀-

135. வினைஎச்சம்.—ADVERBIAL PARTICIPLES.

தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினைஎச் சம்மே.

[வினை.சூ.23.]

[செயலும், காலமும்விளங்கி பாலும். வினையும் குறைந்து நிற்பது வினைஎச்சமாம்.]

☞ "வினை" எனப்பொதுப்படச்சொல்லியிருப்பதால் தெரிநிலைவினையும், குறிப்புவினையும், வினையால் அணையும்பெயரும், தொழிற்பெயரும் குறைந்தும்நிற்கும் எனக்கொள்க.

136. வினை எச்சவாய் பாடுகள்.—DIFFERENT FORMS OF ADVERBIAL PARTICIPLES.

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான் பான் பாக்கின வினைஎச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும்.

[வினை.சூ.24.]

[மேற்கூறியவற்றுள் முதல் ஐந்தும் இறந்தகாலத்தையும்,

கடுவில் நின்ற ஒன்றும் நிகழ்காலத்தையும் பின்தின ஆறும் எதிர்காலத்தையும் காட்டுவனவாம்.]

☞ இவற்றுள் செய்து என்பது ஒழிய மற்றவை விகுதியால் காலங்காட்டும்.

வேறுவகை வினை எச்சங்களை "இன" என்றதனாற்கொள்க.

[18-ம் பக்கத்திற்காண்க.]

## 137. இவைஅவாவுமாறு.—THE WORDS WHICH FOLLOW THESE.

அவற்றுள்,—முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவும்ஏற் கும்பிற.

[வினை.சூ.25.]

[அவ்வினை எச்சங்களுள் முதலில் உள்ளநான்கும் இறுதியில் உள்ள வான், பான், பாக்கு என்னும் மூன்றுவிகுதிகளை உடையமூன்றும் செய்பவனைக் கொண்டுமுடியும்; நடுவில் உள்ளஐந்தும் இவைபோல்வனபிறவும் செய்பவனை அன்றி மற்றவைகளையும் கொண்டுமுடியும்.]

(உ-ம்.) (1.) தான் நடந்துவந்தான்.........[வினைமுதல்.]

(2.) தான் உண்டென மகிழ்ந்தான்.
பிறன்உண்டெனமகிழ்ந்தான். } [வினைமுதலும் பிறவும்கொண்டன.

[மற்றவைகளுக்கு உதாரணம் இப்படியேகாண்க,]

## 138. மேற்கூறியதற்கு ஓர்புறனடை.—A REMARK ON THE ABOVE.

சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும்.

[வினை.சூ.26.]

["முதலில் நான்கும் ஈற்றில் இரண்டும்" என்றுசொன்ன வினை எச்சங்கள் சினைவினை ஆயின் அவைசினை வினைஉடனே அன்றிமுதல்வினை உடனும் முடியும்.]

(உ-ம்.) கால் ஒடிந்து மாடு விழுந்தது.
[ஒடிதல், சினைவினை ; விழுதல், முதல்வினை.]



### 139. INTERCHANGE OF THE FORMS OF THE ADVERBIAL PARTICIPLE.

சொற்றிரி யினும்பொருள் திரியா வினைக்குறை.
[வினை.சூ.27.]

[வினை எச்சங்களுள் சொல்திரிந்தாலும் அவற்றின் பொருள்திரியா.]

(உ-ம்.) (1.) கோழிகூவிப் பொழுதுவிடிந்தது........[கூவ.]
(2.) யான்கொள்ளுவான் பொன்கொடுத்தான்..[கொள்ள

### 140. ஆக்கம் INDISPENSABLE.

ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.
[வினை. சூ28.]

[ஆக்கத்தால்வருகின்ற வினைக்குறிப்புச்சொற்கள் ஆக்கச்சொற்கள் இல்லாமல்வரா.]

(உ-ம்.) (1.) சாத்தன் நல்லன் ஆயினான்.
[நல்லன், ஆக்கவினைக்குறிப்பு ; ஆயினான், ஆக்கம்.]
(2.) சாத்தன் நல்லன்...[ஆக்கம் தொக்கது.]

### 141. செய்யும் என்னும் முற்று.—THE FINITE VERB OF THE FORM செய்யும்.

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே.
[வினை.சூ.29.]

[செய்யும் என்னும்முற்றுவினை பலர்பாற்படர்க்கை, முன்னிலை, தன்மைகளில்செல்லாது.]

ஆதலால் மற்றை நான்குபாலிலும்செல்லும் எனக்கொள்க.
(உ-ம்.) (1.) அவன், அவள், அது, அவை உண்ணும்.

(2.) "மலைநலம் உள்ளும் குறவன்" [நாலடி.36.6.]

(3.) "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்." [குறள்.7.9.]

[உள்ளும்=உள்ளுவான்; உவக்கும்=உவப்பாள்.]

-❁-

142. யார் என்பதைக்குறித்து.—OF யார்.

யார்என் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.
[வினை.சூ.30.]

[வினாப்பொருளைத்தருகிற யார் என்கிறவினைக்குறிப்பு முற்று உயர்திணைமுப்பால்களுக்கும் பொதுவினையாம்.]

(உ-ம்.) அவன், அவள், அவர், யார்.

☞ யார்என்பது ஆர் எனவும்வரும். [50-ம்.சூ.காண்க.]

143. "எவன்" என்பதைக்குறித்து.—OF எவன்.

எவன் என் வினாவினைக் குறிப்பிழி இருபால்.
[வினை.சூ.31.]

[வினாப்பொருளைத்தருகிற எவன்என்னும் குறிப்புவினைமுற்று அஃறிணை இரண்டுபாலுக்கும் பொதுவினையாம்.]

(உ-ம்.)

(1.) அஃது, அவை, எவன்.

(2.) "சிறைகாக்கும் காப்பெவன் செய்யும்?" [குறள்.6.7.]

☞ எவன், என்பதுமருவி என், என்னை, என்ன, ஏன், எனவும்வரும்.

(உ-ம்.) "நீயோ அன்றேனென்றாய்," [இராமாயணம்.]

"காக்கினென் காவாக்காலென்." [குறள். 31. 1.]

144. முற்று எச்சம் ஆய்வருதல்.—FINITE VERBS USED AS PARTICIPLES.

வினைமுற் றேவினை எச்சம் ஆகலும்
குறிப்புமுற் றீரெச்சம் ஆகலும் உளவே.

[வினை. சூ.32.]

[தெரிநிலைவினைமுற்றே வினைஎச்சம்ஆகிவருதலும், குறிப்புமுற்று வினைஎச்சம்ஆகியும் பெயர்எச்சம் ஆகியும் வருதலும் உளவாம்.]

(உ-ம்.) போனான் நின்றான்=போய்நின்றான்.
அவன்வேலினன்வந்தான்=வேலினன் ஆகிவந்தான்.
[வினைஎச்சம் ஆனது.]
"வேந்திறலினன் விறல்வழுதியொடு" [திறலினனாகியவழுதி.]
[பெயர் எச்சம் ஆனது.]

# சொல்லதிகாரம்.

## III-வது : இடைச்சொல்லியல்

## OF PARTICLES.

145. பலவகை இடைச்சொற்கள்.—DIFFERENT KINDS OF PARTICLES.

வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்பெனெண் பகுதியில் தனித்தியல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஓரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்
[இடை. 1]

[வேற்றுமைஉருபுகள், வினைஉருபுகள், சாரியைஉருபுகள், ஒப்புருபுகள், தத்தம் பொருளைக்காட்டியசொற்கள், இசைநிறைக்கிறசொற்கள், அசைநிலைச்சொற்கள், குறிப்பினால்வருஞ்சொற்கள், என்கிற எட்டுவகையை உடையனவாய் தனித்துவழங்கப்படாமல் பெயரிலும் வினையிலும் பின்னும் முன்னுமாகிய ஆறனுள் ஓரிடத்தில் ஒன்றாயினும் பலவாயினும் வந்து ஒன்றுபட்டு நடப்பது இடைச்சொல்லாம்.]

146. இடைச்சொல் ஆகிய ஏ.—THE PARTICLE ஏ.

பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.
[இடை. 3.]

[ஏகாரம் பிரிநிலை முதலான ஆறுபொருளைத்தரும்.]

(உ-ம்.) (1.) அவனே செய்தான்..................[பிரிநிலை.]
(2.) நீயே வந்தாய்?......................[நீயா? வினா.]
(3.) நிலனே நீரே தீயே வளியே......[நிலனும் எண்.]
(4.) "செய்யும் என் முற்றே"..........[ஈற்றசை.]
(5.) நானே செய்தேன். ..................[தேற்றம்=துணிவு
(6.) ஏ ஏ இவள் ஒருத்தி பேடியோ..[இசைநிறை.]

இவை அன்றி ஏ எதிர்மறைப்பொருளையும் தரும்.

(உ-ம்.) யானே செய்தேன்..........[செய்திலேன், எதிர்மறை.]

---

147. இடைச்சொல் ஆகிய ஓ.—THE PARTICLE ஓ.

ஒழிஇசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனஎட் டோவே.

[இடை.கூ.4

[ஓகாரம் ஒழிஇசை முதலான எட்டுப்பொருளைத்தரும்.

(உ-ம்.)

(1.) இங்கிருக்கவோவந்தாய்.....[ஒழியிசை.]

[இருக்கவல்ல, போகவந்தாய் என ஒழிந்தசொல் கரு நிற்கின்றது.]

(2.) அவனோசெய்தான்?.........[வினா.]

(3.) ஓ ஓ பெரியன்!...............[உயர்வு சிறப்பு.]
ஓ ஓ சிறியன்!...............[இழிவு சிறப்பு.]

(4.) நானோசெய்தேன்.............[நான்செய்திலேன்,எதிர்மறை.]

(5.) சாத்தனோ, அன்று கொற்றனோ, அன்று..[தெரிநிலை.]
[இல்லாமை தெரிந்துநிற்கின்றது.]

(6.) ஓ ஓ என்ன உணர்வில்லையோ.[கழிவு.]
[இரக்கப்பொருள்.]

(7.) "கட்டுரைப்பதென்கொலோ"..[அசைநிலை.]

(8.) அவனோசொன்னான்.............[பிரிப்பு.]
[பலருள் இருந்து ஒருவனைப்பிரித்துச்சொல்லல்.]

148. என, என்று என்னும் இடைச்சொற்கள்.—THE PARTICLES என AND என்று.

வினைபெயர் குறிப்பிசை எண்பண் பாறினும்
எனவெனும் மொழிவரும் என்றும் அற்றே.

[இடை.சூ.5.]

[என, என்று என்னும் இடைச்சொற்கள் வினைமுதலிய ஆறுபொருளில்வரும்]

(உ-ம்.)

1.) "சென்றான் எனப்படுதலான்"....................[வினை.]
2.) "உடையர் எனப்படுவதூக்கம்" ............[பெயர்.]
3.) ஒல்லென ஒலித்தது...............................[குறிப்பு.]
4.) "ஏ எனப்பூதமொன்றெழுந்ததாம் அரோ"...[இசை.]
5.) கை என கால் என.................................[எண்]
6.) வெள்ளெனவிளந்தது............................[பண்பு.]

---

149. உம் என்கிற இடைச்சொல்,—THE PARTICLE உம்.

எதிர்மறை சிறப்பையம் எச்சம்முற் றளவை
தெரிநிலை ஆக்கமோ டும்மை எட்டே.

[இடை.சூ.6.]

[உம் என்னும் இடைச்சொல் எதிர்மறைமுதலிய எட்டுப் பொருள்களிலும்வரும்.]

(உ-ம்.)

(1.) செய்தலுங்கூடும்.................................[எதிர்மறை.]
(2.) குறவரும் மருளுங் குன்றம்.....................[உயர்வு சிறப்பு.]
"மீனும்நாறினவேறினிவேண்டுமோ"......[இழிவு சிறப்பு.]
(3.) பத்தாயினும் எட்டாயினும் கொடு......[ஐயம்.]
(4.) கொற்றனும்வந்தான்............................[சாத்தன்வந்ததன்றி எனப்பொருள்கொண்டால், இறந்ததுதழுவிய எச்சஉம்மை; இனிச் சாத்தனும்வருவான் என்றர்த்தம்கொண்டால் எதிரதுதழுவிய எச்சஉம்மை.]

(5.) ஐம்புலனும் அறிவுக்கிடம்...... ...[முற்றும்மை.]
(6.) நானும் அவனும் போனோம்.......[எண்.]
(7.) நானும் அல்லன் நீயும் அல்லன்...[தெரிநிலை.]
(8.) பாலும் ஆயிற்று.....................[ஆக்கம்.]
[அதுவே மருந்தும் ஆயிற்று.]

---

150. மற்று என்னும் இடைச்சொல்—THE PARTICLE மற்று

வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

[இடை.சூ.14

[வினைமாற்றுமுதலியபொருளில் மற்று என்பதுவரும்.]
(உ-ம்.) "மற்றறிவாம் நல்வினை" ............[வினைமாற்று
"மற்றுத்தம் மெல்லுரு அஞ்சன்மின்".[அசைநிலை.]
"மற்றென் செய்யார்"................[பிறிது.]

---

151. கொல் என்னும் இடைச்சொல்—THE PARTICLE கொல்

கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.

[இடை.சூ.16

[கொல் என்பது ஐயம, அசைநிலை என்னும் இரண்டுபொரு ளிலும் வரும்.]

(உ-ம்.)
(1.) சாத்தன் கொல் கொற்றன் கொல்...............[ஐயம்.]
(2.) "யாதுகொல் இதுவென எண்ணல்தேற்றலர்."[அசைநிலை

---

152. அந்தில் ஆங்கு என்னும் இடைச்சொல்—THE PARTICLE அந்தில் AND ஆங்கு.

அந்தில்ஆங் கசைநிலை இடப்பொருள் அவ்வே.

[இடை.சூ.17

[இவ்விரண்டு இடைச்சொற்களும், அசைநிலைப்பொருளையும், இடப்பொருளையும் தரும்.]

(உ-ம்.) (1.) அந்நிற் கழலினன்......................[அசைநிலை.
(2.) "அந்நிற் கொழுநற்காணிய"......[இடம்.]
(3.) "சொரிந்திட் டரிப்பரித்தாங்கு"...[அசைநிலை
(4.) ... ... ... ...ஆங்குத்தாம்
போற்றிப்புனைந்த உடம்பும்." ....[இடம்.]

---

153. யா முதலிய இடைச்சொற்கள்.—THE PARTICLES யா &c.

யா கா பிற பிறக் [1]கரோ போ மா [2]திரும்
இன் குரை ஒரும் போலும் இருந் [3]திட்
டன் [4]றாம் தாம்தான் கின்றுநின் றசைமொழி.
[இடை. சூ.22.]

[யா முதலியவை எவ்விடங்களிலும் வருகிற அசைச்சொற்களாம்.]

[உதாரணம் வரும் இடத்திற் காண்க.

1. பிறக்கு, அரோ; 2. மாது, இரும்; 3. இருந்து, இட்டு;
அன்று, ஆம்.

# சொ ல் ல தி கா ர ம்.



## வது: உரிச்சொல்லியல்.

## OF ADJECTIVES AND ADVERBS.

### 154. உரிச்சொல் இவை என்பது.—ADJECTIVES AND ADVERBS.

பல்வகைப் பண்பும் பகர்பெயர் ஆகி
ஒருகுணம் பல்குணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல்.

[உரி.சூ.1].

[இசை, குறிப்பு, பண்பு ஆகிய பலவேறுவகைப்பட்ட பண்புகளையும் தெரிவிக்கிற பெயர்ஆகி ஒருகுணத்தையும் பலகுணத்தையும் சார்ந்து பெயர்வினைகளைவிட்டு நீங்காமல் செய்யுளுக்கு உரியனவாய் நிற்பன உரிச்சொல்ஆம்.]

☞ இசை=ஓசை; குறிப்பு மனத்தால் அறியப்படுவது; பண்பு ஐம்புலன்களால் அறியப்படுவது.



### 155. THE WORDS சால, &c.

சால உறு தவ நனி கூர் கழி மிகல்.

[உரி.சூ.ப்.

[இவை மிகுதிஎன்கிற ஒருகுணத்தைக்குறிக்கும் உரிச்சொற்கள் ஆம்.]

(உ-ம்.) (1.) "சாற்றுங்கொல் சாலச்சிறிது."..........[சால.]
(2.) "உறுபுலி ஊன் இரைஇன்றி."..........[உறு.]
(3.) "தவ உயர்ந்தன."..........[தவ.]
(4.) "கல்லாதவரும் நனிநல்லர்."..........[நனி.]
(5.) "புத்திகூர் அருள்விதரன்."..........[கூர்.]
(6.) "கல்வியான்ஆய கழிநுட்பம் கல்லார்."...[கழி.]

# சொல்லதிகாரம்.

## V-வது: பொதுவியல்.—OF PARTS OF SPEECH IN GENERAL.

156. செய்யுளில் ஆ ஓ ஆதல்.—IN POETRY ஆ BECOMES ஓ.

பெயர்வினை இடத்து ன ள ர ய ஈற்றயல்
ஆஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே.

[பொது.சூ 2.

[செய்யுளில் பெயர், வினை ஆகிய இரண்டிலும் ன், ள், ர், ய், ஆகிய இறுதியின்முன் உள்ள ஆகாரம் ஓ ஆதலும்உரித்தாம்.]

(உ-ம்.) "நீண்டோனே! கரியோனே!" [பாரதம்.

[மற்றவைகளுக்குதாரணம் வரும் இடத்திற்காண்க.]

157. வேற்றுமை உருபும் வினையும்.—CASUAL TERMINATION AND VERBS.

உருபுபல அடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் எச்சம் ஈறுற முடியும்.

[பொது.சூ 4.

[வேற்றுமைஉருபுகள் பலஅடுக்கிவந்தாலும், வினைச்சொற்கள் வெவ்வேறு பலஅடுக்கிவந்தாலும், தத்தம் எச்சம் ஒன்று ஈற்றில்வர அதனோடு அவைஎல்லாம்முடியும்.]

(உ-ம்.)

(1.) கொற்றன் தன்சகோதரனைப் புத்தியால்வென்றான்.
[பல உருபுகள் விரவி ஒருவினைகொண்டன.]

(2.) சாத்தனைக் கொற்றனைக்கண்டேன்...[தம்முள்வேறுபல.

(3.) உண்டான் ஓடினான் பாடினான் கொற்றன்.[வினைமுற்று.

158. இடைப்பிறவரல்.—ADJUNCTS.

உருபு முற்றீ றெச்சம் கொள்ளும்
பெயர்வினை இடைப்பிற வரலும்ஆம் ஏற்பன.
[பொது.சூ.5.]

[வேற்றுமை உருபுகளும், முற்றுகளும், இருவகை எச்சங்களுங்கொள்ளும் பெயர், வினை ஆகிய இவற்றிற்கு இடையில் பொருந்துவன ஆகிய பிறசொற்கள் வருதலும் ஆம்.]

(உ-ம்.)

(1.) கல்வியால் மிகச்சிறந்தான்.................[வேற்றுமை.]

(2.) இறங்கினான் மலைமீதேறின மனிதன்.........[முற்று.]

(3.) தேர்ந்த சென்னைபுரிப்புலவன்............[பெயர் எச்சம்.]

(4.) எடுத்து இப்போதுகொடுத்தான்............[வினைஎச்சம்.]



159. ஒருமொழி வேறொன்றை அமைத்தல்.—ONE WORD INCLUDING ANOTHER.

ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே.
[பொது.சூ.7.]

[நால்வகைச்சொற்களில் ஏதாவது ஒருசொல் ஒழிந்ததனது இனத்தைக்கொண்டு முடிதற்கு உரித்தாகும்.]

(உ-ம்.)

(1.) சோற்றை தனி உண்டான். [கறியை தனி இன்றான்.]

(2.) நஞ்சுண்டவன் சாவான்.

[நஞ்சுண்டவள் சாவாள், நஞ்சுண்டவர் சாவார், நஞ்சுண்டது சாகும், நஞ்சுண்டன சாகும் என அமையும்.]



160. எச்சம் முடிதல்.—SUPPLYING OF ELLIPSIS.

பெயர்வினை உம்மைசொல் பிரிப்பென ஒழியிசை
எதிர்மறை இசை எனும் சொல்ஒழி பொன்பதும்
குறிப்பும் தத்தம் எச்சம் கொள்ளும்.
[பொது.சூ.9.]

[பெயர், வினை, உம்மை, சொல், பிரிப்பு, என, ஒழியிசை, எதிர்மறை, இசை, ஆகிய இவ்வொன்பதுசொல் எச்சங்களும், குறிப்பெச்சமும், தங்கள்தங்கள் எச்சங்களைக்கொண்டு முடியும்.]

(உ-ம்)

(1) செய்தகொற்றன், நல்லசாத்தன். [பெயரெச்சம்]

(2) செய்துபோனான், செய்துநல்லனாயினான். [வினைஎச்சம்.]

(3.) பொன்னனும்வந்தான். [உம்மை, முன்சாத்தனும்வந்தான் எனத்தன் எச்சங்கொண்டது]

(4) வருவேன் என்றான். [சொல் எச்சம; "வருவேன்" எனச்சொன்னான் எனத்தன் எச்சங்கொண்டது.]

(5.) அவனேசெய்தான், அவனோசெய்தான்.
[பிரிநிலை எச்சம்; பிறர்செய்திலர்எனத்தம் எச்சங்கொண்டன.]

(6) "எழுந்தனர் பொருக்கென இரதம் ஏறினார்." [இரா]
[என எச்சம்; தன்எச்சம் ஆகிய வினைகொண்டது. இ-ள்: விரைவில் தேர் ஏறினார்.]

(7.) செய்யவோபோனான்................... [ஒழியிசை எச்சம்.]
[இ-ள். செய்ய அல்ல.]

(8.) செய்யினும்நன்று, அவனோசெய்தான்.
[எதிர்மறை எச்சம்; (இ-ள்:) செய்யாவிடினும் நன்று, அவன்செய்திலன்.]

(9.) "கற்றார் அனைத்திலர்பாடு," .. .......... ..[குறள்.41.9.]
"வெஃகி வெறிய செயின்,"...................... [குறள்.18.5.
[இசை (=சொல்) எச்சம்; கற்றார்=நூலைக்கற்றார் வெஃகி=பொருளைவெஃகி]

10 ம் சூத்திரத்தின் அடியிற்காண்க.



61. தொகைநிலைத்தொடர்.—ELLIPTICAL CONSTRUCTION

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபிடை

ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்தொரு [சொல்
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்
[பொ.சூ.10

[பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும், பெயர்ச்சொல்லோடுவினைச்சொல்லும், வேற்றுமைமுதல் ஆகியபொருள்களில் அவற்றின் உருபுகள் நடுவிலே தொக்குநிற்க இரண்டு சொல்முதலாகத்தொடர்ந்து ஒருசொல்போல் வருவனதொகைநிலைத்தொடர்சொல் ஆம்.]



162. ஆறுதொகைநிலை.—THE SIX KINDS OF ELLIPTICAL CONSTRUCTION.

வேற்றுமை வினைபண் புவமை உம்மை
அன்மொழி எனஅத் தொகைஆ றாகும்.
[பொ.சூ.11

[வேற்றுமை முதல் ஆகிய ஆறும் அந்தத்தொகைநிலை.]



163. வேற்றுமைத்தொகை.—ELLIPSIS OF CASUAL TERMINATIONS.

இரண்டு முதலா இடைஆ றுருபும் [யே.
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகை
[பொ.சூ.12

[இரண்டு முதலான ஆறுவேற்றுமை உருபுகளும் தொக்கன வேற்றுமைத்தொகை ஆம்.]

இவற்றிற்கு உதாரணம் 23-ம் பக்கத்திற்காண்க.

"ஆறுருபும்" என்றதனால் உருபும் பயனும் உடன்தொக்க தொகையையுங்கொள்க.

(உ-ம்.) "அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங்காக்கும்"
[கதிர்ஞாயிறு—கதிரை உடையஞாயிறு.]

[2-ம் வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்கதொகை.]
"பொன்மலர்தாற்றமுடைத்து." [நீதிநெறி.5]
[பொன்மலர்=பொன்னும் ஆகியமலர்; 3-ம் வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்கதொகை.]



164. வினைத்தொகை.—ELLIPSIS OF TENSE IN VERBS.

காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.
[பொது·சூ 13.

[காலத்தைக்காட்டும் இடைநிலைதொக்கு நிற்கும் பெயரெச்சம் வினைத்தொகை ஆம்.]

(உ-ம்.) "விளைநிலம்," "எறிநீர்."

இவை விளைகிற, விளைந்த, விளையும்; எறிகிற, எறிந்த, எறியும், என விரியும்.

☞ வருபுனல், தருசுடர், உணர்ந்திடுஞானம் என வினைப் பகுதி விகாரப்பட்டும் வினைத்தொகை வரும்.



165. பண்புத்தொகை.—ELLIPSIS OF THE ADJECTIVE SIGN.

பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை.
[பொது.சூ.14

[குணத்தைவிளக்கும் "ஆகிய" என்னும் பண்புருபு தொக்குநின்றவைகளும், ஒருபொருளுக்கு இரண்டுபெயர்கள் பொதுவாயும் சிறப்பாயும் வந்தவைகளும் பண்புத்தொகைகள் ஆம்.]

(உ-ம்.)
(1.) கருங்குதிரை.............................[வண்ணப்பண்பு.]
(2.) உருளைப்பூமி.............................[வடிவுப்பண்பு.]
(3.) இருசெவி.............................[அளவுப்பண்பு.]
(4.) இன்சொல்.............................[சுவைப்பண்பு.]

(5.) சாரைப்பாம்பு, ஆயன் சாத்தன் ...[இருபெயர் ஒட்டு.]
[illegible] வெண்ணிறத்தூவி..................... [பன்மொழித்தொடர்.]
[வெண்மை ஆகியநிறம் ஆகியதூவி; தூவி—வால்.]

166. உவம உருபுகள்.—PARTICLES OF COMPARISON.

போலப் புரைய ஒப்ப உறழ
மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத் துருபே.

[பொ.கி.சூ.1[illegible]

[மேற்கூறிய "போல" முதலியவை உவம உருபுகள் ஆம்.]

167. உம்மைத்தொகை.—ELLIPSIS OF உம்.

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனுநான் களவையுள் உம்இல தத்தொகை.

[பொது.சூ.17.

["எண்ணல்" முதலிய நான்கு அளவைப்பெயர்களுள் உம் உருபு இல்லாதன உம்மைத்தொகைகள் ஆம்.]

(உ-ம்.)

(1.) இராப்பகல் . .. . ...... .......[இராவும் பகலும்.]
(2.) இரண்டரைப்பலம் . .. .......[எடுத்தல்.]
(3.) மூன்றேமுக்கால் ஆழாக்கு....[முகத்தல்.]
(4) மூந்நூற்று முப்பத்தைந்தடி..[நீட்டல்.]
(5) சேர சோழ பாண்டியர்.... [பன்மொழித்தொடர்.]



168. அன்மொழித்தொகை.—TROPE.

ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி.

[பொது.சூ.18.]

[வேற்றுமை முதலிய ஐந்துவகைத்தொகை நிலைத்தொட மொழிகளின்புறத்து வேறுமொழிகள் தொக்குவருதல் அன்மொழித்தொகையாம்.]

(உ-ம்.) "முற்றிழாய்! [=பெண்ணே!];" உயிர்மெய்.



### 169. பலர் ஈறு.—THE PLURAL TERMINATION.

உயர்திணை உம்மைத் தொகைபலர் ஈறே.

[பொது.சூ 21

[உயர்திணை ஒருமையில்வருகிற உம்மைத்தொகைகள் பலபால் விகுதிகளை உடையனவாம்.]

(உ-ம்.) சேரசோழபாண்டியர்; தேவன் தேவிகள்.

☞ "ஈறே" என்றதேற்றத்தால் நன்மை தீமை, நன்மை தீமைகள் தந்தை தாய், தந்தை தாயர் என அஃறிணைப்பெரும் பொதுப்பெயரும்வரும் எனக்கொள்க.



### 170. தொகாநிலை.—UNELLIPTICAL CONSTRUCTIONS.

முற்றீ ரெச்சம் எழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடைஉரி அடுக்கிவை தொகாநிலை.

[பொது.சூ.23

["முற்று" முதல் "விளி" ஈறுகஉள்ள ஐந்துவகைப்பெருள்களில் மொழிகள் புணரும் புணர்ச்சியும், வேற்றுமையுருபுகளோடு மொழிகள் புணரும் புணர்ச்சியும், உரி, அடுக்கு, ஆகிய சொற்புணர்ச்சியும் ஆனஇவை தொகாநிலையாம் உதாரணம் 23-ம் பக்கத்திற்காண்க.



### 171. எழு வழு.—THE SEVEN GRAMMATICAL ERRORS.

திணையே பால்இடம் பொழுது வினா இறை
மரபாம் ஏழும் மயங்கினும் வழுவே.

பொது.சூ.24

["திணை" முதலிய ஏழும் மயக்கினால் வழுவாகும்.]

[1] இறைமாவிடை.

(1.) நம்பிவந்தது ............................[திணைவழு.]

(2.) தாய் வந்தான் ............................[பால்வழு.]

(3.) அவன் வந்தேன் ............................[இடவழு.]

(4.) நேற்றுவருவான் ............................[காலவழு.]

(5.) அப்பசுபாலோ கினையோ? ............................[வினாவழு.]

(6.) கடம்பூர்க்குவழியாது? என்பதற்கு, இடம்
புணி என் ஆவின்கன்றன்று ............................[விடைவழு.]

(7) பசுவின் குட்டி ..... என்பது. ............................[மரபுவழு.]

---

## 172. உயர்திணையைத் தொடர்ந்த அஃறிணை

A NO CASTE NOUN PRECEDED BY A HIGH CASTE NOUN.

உயர்திணை தொடர்ந்த பொருள்முதல் ஆறும
அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின.

[பொருள்.சூ.26]

[உயர்திணையைப்பற்றியபொருள் முதலிய ஆறையும் அவ்வு யர்திணையோடு சேர்த்து முடித்தால் அவ்வுயர்திணை முடிபை ய டையனவாம்.]

(உ-ம்.) கொற்றன் பொன் பெரியன், நாடுபெரியன், வாளுஞ் பெரியன், கைசிறியன், குணநல்லன் நடைகடியன்.

☞ யானைகோடு பெரியது என அஃறிணையோடு சேர்த்தால் அஃறிணைமுடிபை உடையதாயும்வரும்.

---

## 173. திணை, பால்பேதமான பெயர்களுக்கு ஒருமுடிபு

HIGH AND NO CASTE NOUNS HAVING A COMMON PREDICATE.

திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே.

[பொருள்.சூ.26.]

[திணை, பால் வேறுவினைப் பலபொருள்கள் இவைகலந்து வந்தஇடத்தில் சிறப்பினாலும், மிகுதியினாலும், இழிவினாலும் ஒருமுடிபை உடையன ஆம்.]

(உ-ம்.)

(1.) "நீங்களும் சான்றோரும் ஒப்பீர்." [திணைவிரவல். [சிற.]

(2.) மூர்க்கரும் முதலையுங் கொண்டதுவிடா.......................... [திணைவிரவல் இழிவு.]

(3.) மனைவியுந்தானும் வந்தான் . ... [பால்விரவல்.] [சிறப்பு.]

(4.) மாலையும்முடியுங் கவித்தான்.... [வேறு வினைப் பலபொருள் விரவல்.] [சிறப்பு.]

[மற்றவைகளும் இப்படியேகாண்க.]

---

171. திணை, பால் வழுஅமைதி.—GENDERS AND NUMBERS INTERCHANGED.

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் [1]செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே.
[பொது சூ.28.]

[“உவப்பு” முதலியவைகளினாலே பால், திணைவழுவி வந்தாலும் இலக்கணமேயாம்.]

(உ-ம்.)

(1.) மகனை, என் அம்மைவந்தாள்.................. [உவப்பு.]

(2.) ஒருவனை, அவர்வந்தார்.............................[உயர்வு.]

(3.) "தாதா மூவேழுலகுக்குந்தாயே." ...............[சிறப்பு.]

(4.) "எனைத்துணையராயினும் என்னாம் தினைத்துணையும் தேரான் பிறனில் புகல்."...........................[செறல்.]

(5.) வீரத்தன்மை இல்லானை நோக்கி,இவன்பெண்.[இழிப்பு.]

[1] செறல்=கோபித்தல்; [2] இழிப்பு;=இழித்தல்.

### 175. ஒருமை, பன்மை, இடம் :—INTERCHANGE OF NUMBERS AND PERSONS.

ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

[பொது.சூ.29]

[ஒருமையிற் பன்மைச்சொல்லையும், பன்மையில் ஒருமைச்சொல்லையும், ஓரிடத்தில் வேறிடத்துச்சொல்லையும் தழுவுதலும் உள ஆம்.]

(உ-ம்.)

(1) அவன் இக்கிணற்று நீர் எல்லாம் இறைத்தான். [ஒருமையிற் பன்மை.]

(2) இரண்டுகையும் அடித்தது. ......[பன்மையில் ஒருமை.]

(3.) சாத்தன் தாய் இவைசெயவலோ ? [தன்மையில் படர்க்கை.]

(4) நீயோ, அவனோ, யார் இது செய்தார் ? [விரவி ஓரிடத்திற் பிற இடம் வந்தது.]

### 176. நிகழ்காலம்.—THE PRESENT TENSE.

முக்கா லத்தினும் ஒத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழும் காலத் தானே.

[பொது.சூ.32.]

[மூன்று காலத்திலும் செயல் இடைவிடாமல் ஒரேவிதமாய் நடக்கின்றபொருள்களை நிகழ்காலத்தாற் சொல்வார் புலவர்.]

(உ-ம்.)

வனம் அடர்த்தியாய் இருக்கிறது.
கடவுள் சகலமும் பார்க்கிறார்.

### 177. TENSES INTERCHANGED.

விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉம் முக்காலமும் ஏற்புழி.

[பொது.சூ.33.]

[விரைவு, மிகுதி, தெளிவு, இயல்பு ஆகிய இவைகளினாலே மூன்றுகாலங்களும் ஏற்கும் இடத்தில் ஒருகாலம் மற்றொரு காலம் ஆகச்சொல்லப்படவும்பெறும்.]

(உ-ம்.)

(1.) என்னுடன்வருகிறாயா? என்றவினாவிற்கு.
விடை. வந்துவிட்டேன், வந்துவிட்டேன்.
[விரைவினால் நிகழ்காலத்துக்கு இறந்தகாலம் வந்தது.]

(2) இவ்வீட்டில் இருந்தால் மோசம்போவாய்...[மிகுதி.
[எதிர்காலத்துக்கு இறந்தகாலம் வந்தது.]

(3.) மின்னினால் மழைபெய்தது......................[தெளிவு.
[எதிர்காலத்துக்கு இறந்தகாலம்வந்தது.]

(4.) முன் எல்லாம் அவன் இங்கேவருவான்......[இயல்பு.
[இறந்தகாலத்துக்கு எதிர்காலம் வந்தது.]



## 178. மரபு.—USAGE.

எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே.
[பொது.சூ.37.]

[எந்தப்பொருளை எந்தச்சொல்லினால் எந்தவழியால் அறிவுடையோர் சொன்னார்களோ அப்படிச்சொல்லுதல் மரபாம்.

(உ-ம்.) குதிரைக்குட்டி; பசுக்கன்று; மாங்கன்று;
தென்னம்பிள்ளை; கோழிக்குஞ்சு.

## 179. சொல் அடுக்கிவரல்.—REPETITION OF WORDS.

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கொருசொல்
இரண்டு மூன்று நான் கெல்லைமுறை அடுக்கும்.
[பொது.சூ.44.]

[அசைநிலை, பொருள்நிலை,[1] இசைநிறை இவற்றிற்கு ஒருசொல் இரண்டு, மூன்று, நான்குவரை முறையாக அடுக்கும்.]

[1] பொருள்நிலை பலவகைப்படும். அ-ன:—விரைவு, கோபம், சந்தோஷம், பயம், அவலம், முதலியன.

(உ-ம்.) அன்றே அன்றே ... ... ... ... ... [அசைநிலை.]
"வந்தது வந்தது கூற்று" ... ... ... [விரைவு.]
விடு விடு ... ... ... ... ... ... ... ... [கோபம்.]
உண்ணு உண்ணு ... ... ... ... ... [சந்தோஷம்.]
பாம்பு பாம்பு பாம்பு ... ... ... ... ... [பயம்.]
"பாடுகோ, பாடுகோ, பாடுகோ, பாடுகோ" [இசைநிறை.



## 180. உம்வேண்டியது.—உம் NECLSSARY.

இனைத்தென் றறிபொருள் உலகின் இலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டும்.
[பொது. சூ. 48.

(உ-ம்.) (1.) மூவேந்தரும்வந்தார் ... [இனைத்தென்றறிபொருள்.
(2.) ஒளிமுன் இருளெங்குமில்லை [உலகிலாப்பொருள்.]

-

## 181. ஒருபொருட்பன்மொழி.—SYNONYMS.

ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா.
[பொது. சூ. 47

[ஒரு பொருளைக்குறித்த பலமொழிகள் சிறந்து நிற்கின்றன ஆதலால் அவை தப்பன்று.]

(உ-ம்.) "நாகிளவன்று" "ஈர்த்திரைத் தார்த்தல்" "மீமிசை
[இராமாயணம்.]



## 182. செயப்படுபொருளைக் கருத்தாவாகச் சொல்லல்.

THE OBJECT USED AS THE SUBJECT.

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே
[பொது. சூ.

[செயப்படுபொருளை வினைமுதலைப்போலவைத்து வி
பொருந்தச் சொல்வதும் வழக்கில் உரித்தாம்]

(உ-ம்.) இவ்வீடுயான்கட்டியது.

இதில் "னைத்தனும்" என்னும் உம்மையால் கருவி, நிலம், செயல், காலம், ஆகிய இவைகளையுங் குறித்துவரும் எனக் கொள்க :—

(உ-ம்.)

(1.) இவ்வெழுத்தாணி யான்எழுதியது . [கருவி.]

(2.) இவ்வீடு யான் இருந்தது... .. ..........[நிலம்.]

(3.) இச்செயல் யான் செய்தது. .... ...[செயல்.]

(4.) இவ்வருஷம் அவன் ஜனித்தது.. ........ [காலம்.]

நன்னூற்சுருக்கம்

முற்றும்.

# INDEX.

## சூத்திரவகராதி

—⁂—

முற்றும்.

நன்னூற்சுருக்க

# அநுபந்தம்

# APPENDIX

# ABRIDGMENT OF THE NANNUL;

CONTAINING A TABLE FOR PARSING,
EXAMPLES PARSED, AND THE ANALYSIS OF UPWARDS OF ONE HUNDRED
WORDS OF MORE THAN ORDINARY DIFFICULTY, SELECTED
FROM THE RAMAYANAM, NALADI, CURAL, AND
NIDI-NERI-VILAKKAM.

G. P. SAVUNDRANAYAGAM PILLAI, B. A.
VERNACULAR TRAINING MASTER, GOVERNMENT NORMAL SCHOOL, MADRAS,
FORMERLY HEAD MASTER, NORMAL SCHOOL, CHEYORE, COIMBATORE.

MADRAS:
PRINTED AT THE AMERICAN MISSION PRESS.
1863.

# ADVERTISEMENT.

I have published this Appendix separately from my Abridgment of the Nannúl, with the view of making the table, examples, and analysis it contains, accessible to such classes as do not use the Abridgment: I believe, that, independently of the Nannúl, this may be usefully introduced into classes which read other elementary works on Grammar; for boys may very well be taught how to parse and analyze words, before they can take up the Abridgment of the Nannúl.

G. P. S.

GOVT. NORMAL SCHOOL,
*Madras, September,* 1863.

Price 2. Anna

Loganathan's Book.

29th January 1864.

# TABLE FOR PARSING.

## பதங்கட்கு இலக்கணஞ்சொல்லும் முறைகாட்டும் அட்டவணை.

### பெயர்ச்சொல்.—Noun.

இடுகுறி { மரபு / ஆக்கம் } காரணம் } பொது
காரண இடுகுறி மரபு } *சிறப்பு
பண்பு… … … … … ……
தொழில்… … …………
வினையாலணையும் …………
[இது காரணப்பெயரில் அடங்கியது]
} பெயர்

உயர்திணை { ஆண் / பெண் / பலர் }
அஃறிணை { ஒன்றன் / பலவின் }
† பால்பகாதது
} பால்

{ தன்மை / முன்னிலை / படர்க்கை }

{ எழுவாய்த் தொகாநிலைத் தொடராய்,……
2-ம் / 3-ம் / 4-ம் / 5-ம் / 6-ம் / 7-ம் } வேற்றுமை;—பொருளில் வந்த { தொகைநிலைத்—தொடராய், / தொகாநிலைத்—தொடராய், }
விளி வேற்றுமைத் தொகாநிலைத் தொடராய், }
—கொண்டு முடிகின்றது. (சந்தி உண்டாகிற் கூறுக.)

---

* இயற்பெயர், பெரும்பாலும், இடுகுறிப்பெயரிலும், சிறப்புப்பெயர் காரணப்பெயரிலும், அடங்குதலால், இவற்றை இவ்வட்டவணையிற் காட்டிற்றேமில்லை.

† திணை, பால், இடங்களுக்குப் பொதுவாய் வரும் பெயர்களின் பொதுமை, மேல்வருஞ் சிறப்புப்பெயர் விசேஷங்களை நீக்குதலால், அதனையுடன் கூறுவது செவ்வன்று; பின்னே கூறப்படும் வினைக்கும் இது பொருந்தும்.

## வினைச்சொல்.—VERB.

### ( தெரிநிலைவினை எனின். )

செயப்படுபொருள் உள்ள / செயப்படுபொருள் இல்லாத

இறந்தகாலம் / நிகழ்காலம் / எதிர்காலம் / முக்காலத்துப் பொது

உயர்திணை: ஆண், பெண், பலர்

அஃறிணை: ஒன்றன், பலவின்

பால்பகாஃறிணை

பால்: தன்மை, முன்னிலை, படர்க்கை

உடன்பாடு / எதிர்மறை

தெரிநிலை: செய்வினையாய்கிற இனை / செயப்பாட்டுவினையாய் நிற்கின்ற

தன்வினை / பிறவினை

- வினைமுற்று; தொகாநிலைத் தொடராய்,—எழுவாய்க்குப் பயனிலையாய் முடிகின்றது.
- வினையெச்சம்; தொகாநிலைத் தொடராய்,—கொண்டு முடிகின்றது.
- பெயர் எச்சம்; தொகாநிலைத் தொடராய்,—கொண்டு முடிகின்றது.
- *வினையாலணையும் பெயர்.
- *தொழிற்பெயர்.

### ( குறிப்புவினை எனின். )

செயப்படுபொருள் உள்ள / செயப்படுபொருள் இல்லாத

உயர்திணை: ஆண், பெண், பலர்

அஃறிணை: ஒன்றன், பலவின்

பால்: தன்மை, முன்னிலை, படர்க்கை

உடன்பாடு / எதிர்மறை

மூவிடம் ஐம்பாலுக்கும் பொது........................

குறிப்பு

- வினைமுற்று; தொகாநிலைத் தொடராய்,—எழுவாய்க்குப் பயனிலையாய முடிகின்றது
- வினையெச்சம்; தொகாநிலைத் தொடராய்,—கொண்டு முடிகின்றது.
- பெயரெச்சம்; தொகாநிலைத் தொடராய்,—கொண்டு முடிகின்றது.
- * வினையாலணையும் பெயர்.
- * தொழிற்பெயர்.

---

* வினையால் அணையும் பெயர்க்கும், தொழிற்பெயர்க்கும, இவையேயன்றிப் பெயரின் அட்டவணையின்படியும் இலக்கணம் கூறுக.

இடைச்சொல்.—PARTICLE.

| | |
|---|---|
| வேற்றுமை, வினை, சாரியை, ஒப்பு, முதலியன (152-ம் சூத்திரத்தைக் காண்க) | இடைச்சொல் (பொருள் உண்டென்று கூறுக) |

---

உரிச்சொல்.—ADJECTIVE AND ADVERB.

| | | |
|---|---|---|
| இசை, குறிப்பு, பண்பு | உரி | —கொண்டு முடிகின்றது. |
| அல்லது | | |
| குணப்பண்பு, தொழிற்பண்பு | உரி | |

# EXAMPLES PARSED.

## இலக்கணங்கூறிய உதாரணங்கள்.

1. "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்." [குறள். 3. 8.]

நிறை எ-து செயப்படுபொருள் இல்லாத, இறந்தகால, அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை, உடன்பாட்டுத் தெரிநிலைச் செய்வினையாய் நிற்கின்ற, தன்வினைக் காலங்கரந்த பெயரெச்சம்; வினைத்தொகைநிலைத்தொடராய், மொழி என்னும் பெயரைக்கொண்டு முடிகின்றது.

["நிறைமொழி" என்பதில், சந்தி இயல்பு]

மொழி எ-து ஆகுபெயராகிய காரண இடுகுறி மரபுப் பொதுப் பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; இரண்டாம் வேற்றுமை; உடைமைப்பொருளில் வந்த, உருபும் பயனும் உடன்தொக்க தொகைநிலைத் தழாத்தொடராய், மாந்தர் என்னும் பெயரைக்கொண்டு முடிகின்றது.

["மொழிமாந்தர்" என்பதில், சந்தி இயல்பு.]

மாந்தர் எ-து காரண மரபுப் பொதுப்பெயர்; உயர்திணைப் பலர் பாற் படர்க்கை; ஆறும் வேற்றுமை; பண்புத் தற்கிழமைப் பொருளில் வந்த தொகைநிலைத் தொடராய், பெருமை என்னும் பெயரைக்கொண்டு முடிகின்றது.

["மாந்தர் பெருமை" என்பதில், சந்தி இயல்பு.]

பெருமை எ-து இடுகுறி மரபுக் குறிப்புப் பண்புப் பொதுப்பெயர்; அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கை; இரண்டாம் வேற்றுமை; ஆக்கப்படுபொருளில் வந்த தொகைநிலைத் தொடராய், காட்டிவிடும் என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிகின்றது.

["பெருமை நிலத்து" என்பதில், சந்தி இயல்பு.]

நிலத்து எ-து ஆகுபெயராகிய காரண இடுகுறி மரபுப் பொதுப் பெயர்; அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கை; ஏழாம் வேற்றுமை; பிறிதின் கிழமைப்பொருட்கு இடம் இடமாய் நிற்கின்ற இடப்பொருளில் வந்த தொகைநிலைத்தொடராய், காட்டிவிடும் என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிகின்றது.

[நிலம் + அத்து = நிலத்து என வந்ததில், மகரங்கெட்டு, அத்துத் தோன்றியது; இது விகாரச் சந்தி.]

மறை எ-து காரண இடுகுறி மரபுப் பொதுப்பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடராய், மொழி எனனும் பெயரைக்கொண்டு முடிகின்றது.

["மறைமொழி" என்பதில், சந்தி இயல்பு]

மொழி எ-து ஆகுபெயராகிய காரண இடுகுறி மரபுப் பொதுப் பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; எழுவாய்த் தொகாநிலைத் தொடராய், காட்டிவிடும் என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிகின்றது.

["மொழி காட்டிவிடும்" எனபதில், சந்தி இயல்பு.]

காட்டிவிடும் எ-து செயப்படுபொருள் உள்ள, நிகழ்கால, அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை, உடன்பாட்டுத் தெரிநிலைச் செய்வினையாய் நிற்கின்ற, தன்வினை வினைமுற்று; மொழி என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நிற்கின்றது.

-»«-

2. "அரும்பயன் ஆயும் அறிவினர் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்." [குறள். 20. 8.]

அருமை என்பது இடுகுறி மரபுக் குறிப்புப் பண்புப் பொதுப் பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; பண்புத் தொகைநிலைத் தொடராய், பயன் என்னும் பெயருடன் முடி

[அருமை என்பதன் ஈறுபோய், பகரத்துக்கினமாகிய மகரம் மிகுந்தது, சந்தி விகாரம்.]

பயன் எ-து இடுகுறி மரபுக் குறிப்புப் பண்புச் சிறப்புப்பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; இரண்டாம் வேற்றுமை; அடையப் படுபொருளில் வந்த தொகைநிலைத் தொடராய், ஆயும் என்னும் வினையைக்கொண்டு முடிகின்றது.

["பயன் ஆயும்" என்பதில், சந்தி இயல்பு.]

ஆயும் எ-து செயப்படுபொருள் உள்ள, எதிர்கால, உயர்திணைப் பலர்பாற் படர்க்கை, உடன்பாட்டுத் தெரிநிலைச் செய்வினையாய் நிற்கின்ற, தன்வினைப் பெயரெச்சம்; தொகாநிலைத் தொடராய், அறிவினர் என்னும் பெயரைக்கொண்டு முடிகின்றது.

["ஆயும் அறிவினர்" என்பதில், சந்தி இயல்பு; இவ்வெச்சம் காலத்தை உணர்த்தாது உரிமையை உணர்த்திற்று ]

அறிவினர் எ-து காரண ஆக்கச் சிறப்புப்பெயர்; உயர்திணைப் பலர்பாற் படர்க்கை; எழுவாய்த் தொகாநிலைத் தொடராய், சொல்லார் என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிகின்றது.

["அறிவினர் சொல்லார்" என்பதில், சந்தி இயல்பு.]

சொல்லார் எ-து செயப்படுபொருள் உள்ள, உயர்திணைப் பலர்பாற் படர்க்கை, எதிர்மறைத் தெரிநிலைச் செய்வினையாய் நிற்கின்ற, தன்வினை வினைமுற்று; தொகாநிலைத் தொடராய், அறிவினர் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நிற்கின்றது.

பெருமை, [அருமை என்பதற்குச் சொல்லியதுபோற் சொல்லி, பயன் என்பதனோடு முடிக்க.]

["பெரும்பயன்" என்பதில், சந்தி விகாரம்.]

பயன் எ-து இடுகுறி மரபுக் குறிப்புப் பண்புச் சிறப்புப் பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; எழுவாய்த் தொகாநிலைத் தொடராய், இல்லாத என்னும் வினையைக்கொண்டு முடிகின்றது.

["பயன் இல்லாத" என்பதில், சந்தி இயல்பு ]

இல்லாத எ-து செயப்படுபொருள் இல்லாத, அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை, எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்; தொகாநிலைத் தொடராய், சொல் என்னும் பெயரைக் கொண்டு முடிகின்றது.

["இல்லாத சொல்" என்பதில், சந்தி இயல்பு.]

சொல் எ-து ஆகுபெயராகிய காரண இடுகுறி மரபு இசைப்பண்புப் பொதுப்பெயர்; அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை; இரண்டாம் வேற்றுமை; நீக்கப்படு பொருளில் வந்த தொகைநிலைத் தொடராய், சொல்லார் என்னும் வினைமுற்றைக் கொண்டு முடிகின்றது.

# ANALYSIS OF DERIVATIVE WORDS.

## பகுபத முடிபு.

### அ

அங்காத்தல் = அங்கா (பகுதி) + த் (சந்தி) + தல் (விகுதி).

அழுக்கறுப்பான் = அழுக்காறு (பகுதி) + ப் (சந்தி) + ப் (எதிர்கால இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

[ஆகாரம் அகரமானது குறுக்கல் விகாரம்.]

அற்றம் [இல்லாமை] = அறு (பகுதி) + அம் (தொழிற்பெயர் விகுதி).

[தன்னொற்றிரட்டல் விரித்தல் விகாரம்; உகரங்கெட்டது சந்தி.]

அற்று [அத்தன்மைத்து] = அன் (பகுதி, இடைச்சொல்) + று (குறிப்பு வினைமுற்று விகுதி).

[னகரம் றகரமானது சந்தி]

அனையர் = அனை (பகுதி, இடைச்சொல்) + ய் (சந்தி) + அர் (பலர்பால் விகுதி).

அன்று = அல் (பகுதி, பண்பு) + று (குறிப்பு வினைமுற்று விகுதி).

[லகரம் னகரமானது சந்தி; அன்று என்பது குறிப்பு வினைமுற்று]

அன்ன = அன் (பகுதி, இடைச்சொல்) + ன் (சந்தி) + அ (அன்ன என்பது முற்றெனின், பலவின்பால் விகுதி; பெயரெச்சமெனின், பெயரெச்ச விகுதி).

### ஆ

ஆர்த்த [கட்டின] = யா (பகுதி) + த் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + அ (பெயரொச்ச விகுதி; அல்லது, முற்றுவிகுதி).

[யா ஆகாரமானது மரூஉ.]

ஆய = ஆ (பகுதி) + ய் (இறந்தகால இடைநிலை) + அ (ஆய என்பது பெயரெச்சமெனின், பெயரெச்ச விகுதி; முற்றெனின், முற்று விகுதி).

ஆய [ஆராய] = ஆய் (பகுதி) + அ (வினையெச்ச விகுதி).

ஆற்ற = ஆற்று (பகுதி) + இன் (இறந்தகால இடைநிலை, தொகுத்தல் விகாரம் பெற்றது) + அ (பெயரெச்ச விகுதி).

[உகரக்கேடு சந்தி]

ஆற்ற [செய்ய] = ஆற்று (பகுதி) + அ (வினையெச்ச விகுதி).

[உகரக்கேடு சந்தி]

ஆன்றோர் [அறிவுடையோர்] = அகல் (பகுதி) + ற் (இறந்தகால இடைநிலை) + ஆர் (பலர்பால் விகுதி).

[அகல் என்பது ஆல் என மருவியது; லகரம் றகரமானது சந்தி; றவ்வானது னவ்வாயத் திரிந்தது மெலித்தல் விகாரம்]

☞ அகலக்கரண்டி என்பது ஆலக்கரண்டி என, இது வழக்கத்திலும் இருக்கின்றது

## இ

இல = இல் (பகுதி, பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று) + அ (பலவின்பால் விகுதி).

இளவல் [இளையவன்] = இளமை (பகுதி, பண்பு) + வ் (சந்தி, தோன்றினது) + அல் (பண்புப்பெயர் விகுதி).

[இளமை என்பதில் மை கெட்டது; இளவல் என்பது ஆகுபெயர்]

இவறன்மை = இவறு (பகுதி) + அல் (தொழிற்பெயர் விகுதி) + மை (விகுதிமேல் விகுதி).

[உகரக்கேடு சந்தி; அனைத்தும் ஓர் பகுதியாய இவறல் என நின்று, அதனுடன் மை விகுதி சேர்ந்தது; லகரம் னகரமானது சந்தி.]

இவறியான் = இவறு (பகுதி) + இன் (இறந்தகால இடைநிலை) + ய் (சந்தி) + ஆன் (ஆண்பால் விகுதி).

[இடைநிலை னகரக்கேடு கடைக்குறை விகாரம்.]

இன்னாத = இன்னா (பகுதி, பண்பு) + த் (எழுத்துப்பேறு, விகாரம்) + அ (விகுதி).

உக்க = உகு (பகுதி) + க் (விகாரம்) + அ (பெயரெச்ச விகுதி).

[பகுதியின் ஒற்று இரட்டியதே காலங் காட்டியது.]

உணர்த்துகிற்றும் = உணர்த்து (பகுதி) + கில் (ஆற்றலுணர்த்தும் விகுதி) + றும் (தன்மைப் பன்மை எதிர்கால விகுதி).

[அனைத்துமோர் பகுதியாய், உணர்த்துகில் என நின்று, றும் விகுதியோடு சேர்ந்தது; லகரம் றகரமானது சந்தி.]

உண்ணிய = உண் (பகுதி) + ண் (சந்தி) + இய (எதிர்கால வினையெச்ச விகுதி).

[இதை வியங்கோள் விகுதியாகக்கொண்டு, அவ்வினை எவினும் அமையும்.]

எ

எச்சம் = எஞ்சு (பகுதி) + அம் (தொழிற்பெயர் விகுதி).

[ஞகரம் சகரமானது வலித்தல் விகாரம்; உகரக்கேடு சந்தி; எச்சம் = சந்ததி, குறைச்சொல்; இது தொழில் ஆகுபெயர்; இப்படி அன்றி, அம் என்பதை வினைமுதற் பொருள் விகுதியெனக்கொண்டு, இதைத் தொழிலடியாகப் பிறந்த பெயர் என்பதும் பொருந்தும்.]

எற்று [எத்தன்மையது] = என் (பகுதி, இடைச்சொல்) + று (குறிப்பு வினைமுற்று விகுதி).

[னகரம் றகரமானது விகாரம்.]

எனைத்து = எனை (பகுதி) + த் (சந்தி) + து (குறிப்பு வினைமுற்று விகுதி).

என்றல் = என் (பகுதி) + தல் (தொழிற்பெயர் விகுதி).

[தகரத்திரிபு சந்தி.]

என்று [சூரியன்] = எல் (பகுதி, இடைச்சொல்*) + று (ஒன்றன்பால் விகுதி).

[லகரம் றகரமானது சந்தி; றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்.]

*தொல்காப்பியத்தில் உள்ள "எல்லே விளக்கம்" என்னும் சூத்திரத்தினால், எல் என்பதை இடைச்சொல் என்னலாயிற்று.

## ஏ

ஏமாந்தேம் = ஏமா. (பகுதி) + த் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + ஏம் (தன்மைப் பன்மை விகுதி).

[ஏமாத்தல் = ஏமம் + பாத்தல்; தகரம் நகரமானது விகாரம்.]

ஏற்றான் = ஏல் (பகுதி) + ற் (இறந்தகால இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

[லகரம் றகரமானது சந்தி ]

## ஒ

ஒட்பம் = ஒள் (பகுதி) + பம் (பண்புப்பெயர் விகுதி).

[ளகரம் டகரமானது சந்தி.]

ஒழுகலார் = ஒழுகு (பகுதி) + அல் (எதிர்மறை விகுதி) + ஆர் (பலர்பால் விகுதி).

[உகரங்கெட்டது சந்தி ]

ஒற்கம் [தளர்ச்சி] = ஒல்கு (பகுதி) + அம் (தொழிற்பெயர் விகுதி).

[லகரம் றகரமாய், உகரங்கெட்டது சந்தி.]

ஒன்னலர் = ஒன்று (=பொருந்து, பகுதி) + அல் (எதிர் மறை விகுதி) + அர் (பலர்பால் விகுதி).

[ஒன்றல் என, அலைத்துமோர் பகுதியாய் நின்று, அர் விகுதியைச் சேர்ந்தது; று கெட்டது கடைக்குறை விகாரம்; னகரம் சந்தி.]

## க

கடவுள் = கட (பகுதி) + வ் (சந்தி) + உள் (தொழிற்பெயர் விகுதி).

[கடவுள் = எல்லாவற்றையுங் கடந்து மேலாயிருப்பவர்; இது தொழிலாகுபெயர்.]

கவற்ற = கவற்று (பகுதி) + அ (நிகழ் காலவினையெச்ச விகுதி).

[உகரக்கேடு சந்தி.]

கழிந்தன்று = கழி (பகுதி) + ந் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + அன் (சாரியை) + று (ஒன்றன்பால் விகுதி).

[தகரம் நகரமானது மெலித்தல் விகாரம்.]

கனன்று = கனல் (பகுதி) + ற் (இறந்தகாலஇடைநிலை) + உ (இறந்தகால வினையெச்ச விகுதி).

[லகரம் றகரமானது சந்தி; றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்.]

## கா

காமுற்று = காமம் + உற்று.

[அம் கெட்டது கடைக்குறை.]

காமுற்று = காமுறு (பகுதி) + உ (இறந்தகால வினையெச்ச விகுதி).

[பகுதியின் ஒற்று இரட்டல் விரித்தல் விகாரம்; அதன் உகரக்கேடு சந்தி; இரட்டியதே இறந்தகாலங் காட்டியது.]

## கு

குற்றி = குறு (பகுதி, பண்பு) + இ (ஒன்றன்பால் விகுதி).

[தனிக்குற்று இரட்டியது விரித்தல விகாரம்; உகரக்கேடு சந்தி.]

## கே

கேண்மை = கேள் (பகுதி, பண்பு) + மை (பண்புப்பெயர் விகுதி).

[ளகரம் ணகரமானது சந்தி.]

கேளார் [பகைவர்] = கேள் (பகுதி) + ஆ (எதிர்மறை விகுதி) + ஆர் (பலர்பால் விகுதி).

[கேளா என அனைத்துமோர் பகுதியாய் நின்று, ஆர் என்னும் விகுதியை அடுத்தது விகுதி ஆகாரக்கேடு முதற்குறை விகாரம்.]

கேளிர் = கேள் (பகுதி) + இர் (பலர்பால் விகுதி).

## கொ

கொணர்ந்தான் = கொணா (பகுதி) + ர் (விரித்தல் விகாரம்) + த் (சந்தி) + த் (இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி)

[ஆகாரம் அகரமானது குறுக்கல்விகாரம்; தகரம நகரமானது சந்தி.]

கொழுநர் = கொழு (பகுதி, பண்பு) + ந் (இடைநிலை) + அர் (பலர்பால் விகுதி).

## கோ

கோடும் = கொள் (பகுதி) + தும் (எதிர்கால விகுதி).

[ஒகரம் ஓகாரமானது நீட்டல் விகாரம்; ளகரக்கேடும் தகரத்திரிபுஞ் சந்தி.]

கோட்டம் = கோடு (பகுதி) + அம் (தொழிற்பெயர்விகுதி).

[டகரம் தோன்றியது விரித்தல் விகாரம்; உகரக்கேடு சந்தி]

கோட்டினான் = கோட்டு (பகுதி) + இன் (இறந்தகால இடைநிலை + ஆன் (ஆண்பால் விகுதி).

[உகரங்கெட்டது சந்தி.]

## சா

சாம்பின [சாம்பராயின] = சாம்பு (பகுதி) + இன் (இறந்த கால இடைநிலை) + அ (பலவின்பால் விகுதி; அல்லது, பெய ரெச்ச விகுதி).

[உகரக்கேடு சந்தி]

சான்று [சாட்சி] = சால் (பகுதி) + று (ஒன்றன்பால் விகுதி).

[லகரம் றகரமானது சந்தி; றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்.]

## சி

சினந்தான் = சின (பகுதி) + ந் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

[தகரம் நகரமானது மெலித்தல் விகாரம்; சினம் என்னும் பெயரடியாகப் பிறந்தது]

## சூ

சூன்றிட்டது = சூல் (பகுதி) + து (சாரியை) + இடு (துணிவுப்பொருள்விகுதி) + ட் (விகாரம்) + அ (சாரியை) + து (ஒன்றன்பால் விகுதி).

[பகுதியின் லகரம் றகரமானது சந்தி; றகரம் னகரமானது விகாரம்; துவ்வில் தகரம் றகரமானது சந்தி; இடு விகுதி சேர்ந்து, அனைத்துமோர்பகுதியாய்நின்று, பின் மற் றும் சாரியை முதலியவற்றை ஏற்றது.]

## சே

செம்மல் = செம் (பகுதி, பண்பு) + ம் (சந்தி) + அல் (பண்புப்பெயர் விகுதி).

[செம்மல் = புத்திரன்; இது பண்பாகுபெயர்.]

செய்துகொண்டான் = செய் (பகுதி) + து (சாரியை) கொள் (தற்செயற்பொருள்விகுதி) + ட் (இறந்தகால இடை நிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

[செய்துகொள் என அனைத்துமோர் பகுதியாய் நின்று, இடைநிலை முதலியன பெற் றுமுடிந்தது; ளகரம் டகரமானது சந்தி; டகரம் ணகரமானது மெலித்தல் விகாரம்]

செவ்விய = செம்மை (பகுதி, பண்பு) + இ (விரித்தல்) + ய் (சந்தி) + அ (பெயரெச்ச விகுதி; அல்லது, பலவின்பால் விகுதி).

[செம்மை என்பதின் மை கெடுதலும், மகரம் வகரமாதலும், வகரம் தோன்றலும், சந்தி.]

செற்றார் = செறு (பகுதி) + ஆர் (விகுதி).

[றகரம் விரித்தல் விகாரம்; அவ்விரட்டலே காலங்காட்டியது; உகரக்கேடு சந்தி]

## சோ

சோகாப்பர் = சோகம் + யாப்பர்.

[அம் கெட்டது கடைக்குறை]

சோகாப்பர் = சோகா (பகுதி) + ப் (சந்தி) + ப் (இடைநிலை) + அர் (விகுதி).

*சோர்தர = சோர்,நா (பகுதி) + அ (விகுதி).

[ஆகாரம அவ்வானது குறுக்கல் விகாரம்; ரு விரித்தல் விகாரம்; உகரக்கேடு சந்தி]

☞ சூழ்தர, அயர்தர, செயதர, போதர, முதலியவற்றையும் முடிக்கும்விதம் இவ்வாறே ஆம்

## த

தந்தை = தாம் (பகுதி) + தை (பெயர் விகுதி).

[தாகாரத்திலுள்ள ஆ அகரமானது குறுக்கல் விகாரம்; மகரம் நகரமானது சந்தி.]

தமது = தாம் (பகுதி) + அ (சாரியை) + து (ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று விகுதி; அல்லது, அப்பெயர் விகுதி).

[தா தவ்வானது குறுக்கல் விகாரம்.]

தருகின்ற = தா (பகுதி; தா தவ்வானது குறுக்கல் விகாரம் + ரு (விரித்தல் விகாரம்) + கின்று (நிகழ்கால இடைநிலை + அ (பெயரொச்ச விகுதி; அல்லது, பலவின்பால் விகுதி).

தழைப்ப (அஃறிணைப் பன்மை வினைமுற்றெனின்) = தழை (பகுதி) + ப் (சந்தி) + ப் (எதிர்கால இடைநிலை) + அ (பல வின்பால் வினைமுற்று விகுதி).

தழைப்ப (உயர்திணைப் பன்மை வினைமுற்றெனின்) = தழை (பகுதி) + ப் (சந்தி) + ப (பலர்பால் வினைமுற்று விகுதி).

தழைப்ப (செயவெனெச்சமெனின்) = தழை (பகுதி) + ப் (சந்தி) + ப் (விரித்தல்) + அ (நிகழ்கால வினை எச்ச விகுதி).

## து

துப்பார் = து (= உண், பகுதி) + ப் (சந்தி) + ப் (எதிர்கால இடைநிலை) + ஆர் (பலர்பால் விகுதி).

துரப்பன = துர (பகுதி) + ப் (சந்தி) + ப் (எதிர்கால இடைநிலை) + அன் (சாரியை) + அ (பலவின்பால்வினைமுற்றுவிகுதி).

துன்னற்க = துன் (பகுதி) + ன் (சந்தி) + அல் (எதிர்மறை விகுதி) + க (வியங்கோள் விகுதி).

[துன்னல் என அனைத்துமோர் பகுதியாய் நின்று, கவ் விகுதியைப்பெற்றது.]

துன்னியார் = துன் (பகுதி) + ன் (சந்தி) + இன் (இறந்தகாலவிடைநிலை) + ய் (சந்தி) + ஆர் (பலர்பால் விகுதி).

[ இன் என்பதிலுள்ள னகரங் கெட்டது கடைக்குறை ]

## தூ

தூகின்றார் = தூ (பகுதி) + கின்று (நிகழ்கால இடைநிலை) + ஆர் (பலர்பால் விகுதி).

[உகரக்கேடு சந்தி.]

## தோ

தோற்றம் = தோன்று (பகுதி) + அம் (தொழிற் பெயர் விகுதி).

[உகரக்கேடு சந்தி; னகரம் றகரமானது வலித்தல் விகாரம்; தோற்றம் என்பது ஒரு பொருளை உணர்த்தினல், ஆகுபெயராம்.]

தோன்றல் [அரசன், புத்திரன்] = தோன்று (பகுதி) + அல் (தொழிற்பெயர் விகுதி).

[உகரம் சந்தியாற் கெட்டது; இது தொழிலாகுபெயர்.]

தோன்றியக்கால் = தோன்று (பகுதி) + இன் (சாரியை) ய் (சந்தி) + அ (சாரியை) + க் (சந்தி) + கால் (எதிர்கால வினையெச்ச விகுதி).

[ சாரியை னகரக்கேடு கடைக்குறை ]

☞ இதில், தகரத்தோற்றம் தோன்றின என்பது பெயரெச்சமன்றென்பதை விளக்குகின்றது.

## ந

நடை + நட (பகுதி) + ஐ (தொழிற்பெயர் விகுதி).

[நட என்பதில், ஈற்றகரக் கேடு கடைக்குறை.]

நடையன் = நடை (பகுதி) + ய் (சந்தி) + அன் (ஆண்பால் விகுதி).

நட்பு = நள் (பகுதி) + பு (தொழிற்பெயர் விகுதி).

[ளகரம் டகரமானது சந்தி]

நண்பு = நண் (பகுதி, பண்பு) + பு (பண்புப்பெயர் விகுதி).

நண்ணினார் = நண் (பகுதி) + ண் (சந்தி) + இன் (இறந்தகால இடைநிலை) + ஆர் (பலர்பால் விகுதி).

[இதைப் பண்படியாகப் பிறந்த பெயராகக் கொள்ளின், இன் சாரியை ஆம்.]

நள்ளார் = நள் (பகுதி) + ஆ (எதிர்மறைவிகுதி; நள்ளா என அனைத்தும் ஓர் பகுதி) + ஆர் (பலர்பால் விகுதி).

[ஆர் விகுதியின ஆகாரங்கெட்டது முதற்குறை]

## நீ

நீண்டக்கடைத்து = நீள் (பகுதி) + து (சாரியை) + அ (சாரியை) + க் (சந்தி) + கடை (எதிர்கால வினையெச்ச விகுதி) + த் (சந்தி) + து (பகுதிப் பொருள் விகுதி).

[நீட்ட என, எவ்வுக தவ்வுத் திரிதலும், உகரங்கெடுதலும் சந்தி; டகரம் ணகரமானது மெலித்தல் விகாரம்]

☞ நீண்ட எனபது பெயரெச்ச மன்றென்று, க[illegible] தோற்றத்தினால் விளங்குகின்றது.

நீத்தனள் = நீ (பகுதி) + த் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + அன் (சாரியை) + அள் (பெண்பால் விகுதி).

## நு

நுட்பம் = நுண் (பகுதி, பண்பு) + பம் (பண்புப்பெயர் விகுதி).

[ணகரம் டகரமானது சந்தி.]

## நோ

நோற்றார் = நோல் (பகுதி) + ற் (இறந்தகால இடைநிலை) ஆர் (பலர்பால் விகுதி).

[லகரம் சந்தியால் றகரமானது.]

## ப

பயக்கும் = பய (பகுதி) + க் (சந்தி) + கு (சாரியை + உம் பெயரெச்ச விகுதி; அல்லது, வினைமுற்று விகுதி).

[உகரம் கெட்டது சந்தி; பய என்பது பயம் என்னும் பெயரடியாகப் பிறந்தது.]

பயந்தான் = பய (பகுதி) + த் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

[தகரம் நகரமானது மெலித்தல் விகாரம்.]

பல்லவர் = பன்மை (பகுதி, பண்பு; மை கெட்டது சந்தி) + ல் (சந்தி) + அ (சாரியை) + வ் (சந்தி) + அர் (பலர் பால் விகுதி).

## பா

பாத்து = பகு (பகுதி; பா என மருவியது) + த் (சந்தி) = த் (இறந்தகால இடைநிலை) + உ (வினையெச்ச விகுதி).

[இதுபோல, பகுதி என்பது பாதி என மருவி வழங்குகின்றது.]

பாலமை = பால் (பகுதி) + அ (சாரியை) + மை (பகுதிப பொருள் விகுதி).

[அகரச்சாரியை இன்றி, பான்மை எனவே சாதாரணமாய் வரும்.]

## பி

பிறன் - பிற (பகுதி, இடைச்சொல்) + அன் (ஆண்பால் விகுதி).

[பிற என்பதின் ஈற்றகரமொழிந்தது கடைக்குறை; இப்படி அன்றி, விகுதி னகரம் எனி னும் அமையும்.]

பிறிது = பிற (பகுதி, இடைச்சொல்) + இ (விரித்தல்) + து (ஒன்றன்பால் விகுதி).

[பிற என்பதில் ஈற்று அகரக்கேடு கடைக்குறை.]

## பொ

பொருது = பொரு (பகுதி) + த் (இறந்த கால இடைநிலை) + உ (வினையெச்ச விகுதி).

பொறுத்தான் = பொறு (பகுதி) + த் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

## போ

போந்தது = புகு (பகுதி; இது போ என மருவியது) + த் (சந்தி) + த் (இறந்தகால இடைநிலை) + அ (சாரியை) + து (ஒன்றன் பால் விகுதி).

[தகரம் நகரமானது சந்தி.]

போன்றன = போல் (பகுதி, இடைச்சொல்) + ற் (இறந்தகால இடைநிலை) + அன் (சாரியை) + அ (பலவின்பால் விகுதி).

[லகரம் றகரமானது சந்தி; றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்.]

## மா

மாட்சிமை = மாண் (பகுதி, பண்பு) + சி (பண்புப்பெயர் விகுதி) + மை (விகுதிமேல் விகுதி).

மாண்டார் [மாட்சிமைப்பட்டார்] = மாண் (பகுதி, பண்பு) + ட் (இறந்தகால இடைநிலை) ஆர (பலர்பால் விகுதி.)

மாண்டார் [இறந்தார்] = மாள் (பகுதி) + ட் (இறந்தகால இடைநிலை) + ஆர் (பலர்பால் விகுதி).

[ளகரம டகரமானது சந்தி; டகரம் ணகரமானது மெலித்தல் விகாரம்]

## மு

முதற்று = முதல் (பகுதி) + று (ஒன்றன் பாற் குறிப்புவினை முற்று விகுதி; அல்லது, அப்பெயர் விகுதி).

[லகரம் றகரமானது சந்தி]

## மோ

மோப்ப = முகர் (பகுதி; இது மோ என மருவியது) + ப் (சந்தி) + ப் (விரித்தல் விகாரம்) + அ (நிகழ்கால வினையெச்ச விகுதி; அல்லது, பலவின்பால் விகுதி).

[ மோப்ப என்பதை உயர்திணைப் பன்மை வினைமுற்றாகக் கொள்ளின், பகர விகுதியாம் ]

## வ

வளமை = வள் (பகுதி, பண்பு) + அ (சாரியை) + மை (பண்புப் பெயர் விகுதி).

[அகரச்சாரியை இல்லாத இடத்தில், வள் + மை = வண்மை ]

வள்ளன்மை = வள் (பகுதி, பண்பு) + ள் (சந்தி) + அல் (பண்புப்பெயர் விகுதி) + மை (பண்புப்பெயர் விகுதி).

[லகரம் னகரமானது சந்தி; வள்ளல் என்பது கொடையாளனுக்கு ஆகுபெயராய், மை விகுதியோடு சேர்ந்து, அவன் தன்மையை உணர்த்திற்று ]

வறந்தக்கால் = வற (பகுதி) + த் (சந்தி) + து (சாரியை) + அ (சாரியை) + க் (சந்தி) + கால் (எதிர்கால வினையெச்ச விகுதி).

[சாரியை உகரக்கேடு சந்தி; தகரம் நகரமானது மெலித்தல் விகாரம் ]

வா

வாழியர் = வாழ் (பகுதி) + இயர் (எதிர்கால வினையெச்ச விகுதி).

[இது "வாழியர்" என்னும் வியங்கோளுக்கும் பொருந்தும்.]

வி

விடுபாக்கு = விடு (பகுதி) + பாக்கு (எதிர்காலவினையெச்ச விகுதி).

☞ பாக்கு என்னும் விகுதி, தொழிற்பெயர்ப்பொருளிலும் வரும்; இதைப்பற்றி 143-ம் சூத்திரத்திலுரையிற்காண்க.

வித்தகன் = வித்தகம் (பகுதி; அம் கெட்டது கடைக் குறை) + அன் (ஆண்பால் விகுதி).

விளக்கம் = விளங்கு (பகுதி) + அம் (தொழிற்பெயர் விகுதி).

[ஙகரம் ககரமானது வலித்தல் விகாரம்; உ கெட்டது சந்தி; பொருளை உணர்த்தினால ஆகுபெயர் ஆம்]

விழுமியார் = விழுமு (பகுதி) + இ (விரித்தல் விகாரம்) + ய் (சந்தி) + ஆர் (பலர் பால் விகுதி).

[விழுமு என்பதில், உகரக்கேடு சந்தி.]

வீ

வீழ்த்தென = வீழ்த்து (பகுதி, பிறவினை) + என (இறந்தகால வினையெச்ச விகுதி).

[சந்தியால், வீழ்த்து என்பதிலுள்ள உகரங்கெட்டது; இது நன்னூலார் மதம்; சிலர் வீழ்த்தால் என என்று இரண்டு சொல்லாக்கி, அல் தொகுத்தல் என்பர்]

வெ

வெற்றி = வெல் (பகுதி) + தி (தொழிற் பெயர் விகுதி).

[வெல் என்பதன் லகரமும் தகரமும் றகரமானது சந்தி]

வென்றி = வெல் (பகுதி) + தி (தொழிற் பெயர் விகுதி).

[லகரமும் தகரமும் றகரமானது சந்தி; வெற்றி என நின்று, பகுதி றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்]

வே

வேட்கும் = வேள் (பகுதி) + கு (சாரியை) + உம் (பெயரெச்ச விகுதி; அல்லது, வினைமுற்று விகுதி).

[ளகரம் டகரமானதும், உகரங்கெட்டதும், சந்தி]

வேட்டான் = வேள் (பகுதி) + ட் (இறந்தகால இடைநிலை) + ஆன் (ஆண்பால் விகுதி).

[சந்தியால், ளகரம் டகரமானது.]

வேண்டா = வேண்டு (பகுதி) + ஆ (பலவின்பால எதிர்மறை விகுதி).

[வேண்டு என்பதில், உகரக்கேடு சந்தி.]

☞ வேண்டா என்பது தற்கால வழக்கத்தில், வேண்டாம் என மருவி, இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாய் வழங்குகின்றது.

வேறல் [வெற்றி] = வெல் (பகுதி) + தல் (தொழிற் பெயர் விகுதி).

[பகுதி எ ஏயானது நீட்டல் விகாரம்; லகரக்கேடும், தகரம் றகரமாகத் திரிதலும், சந்தி.]

நன்னூற் சுருக்க அ[redacted]தம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# கருவூர்ப்புராணம்.

## கருவூர்ப்புராணவசனம்.

இவை

கோயமுத்தூர் வித்துவான்

கந்தசாமிமுதலியார் அவர்களாலும்

நேகமம் வித்துவான்

முத்துநாகப்பமுதலியார் அவர்களாலும்

திருத்தப்பட்டு

ஷெ கந்தசாமிமுதலியார் அவர்களால்

சென்னை:

இந்து தியலாஜிகல் யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

விரோதிஞு ஆடிமீ

விலை ரூபா-க.

உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

## திருக்கருவூர்த்திருவானிலை

பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ்
சுண்டலாருயிராயதன்மையா
கண்டனார்கருவூருளானிலை
யண்டனாரருளீயுமன்பரே. (க)

நீதியார்நினைந்தாயநான்மறை
யோதியாரொடுங்கூடலார்குழைக்
காதினார்கருவூருளானிலை
யாதியாரடியார்தமன்பரே. (உ)

விண்ணுலாமதிசூடிவேதமே
பண்ணுளார்பரமாயபண்பினர்
கண்ணுளார்கருவூருளானிலை
யண்ணலாரடியார்க்குநல்லரே. (ங)

முடியர்மும்முதயானையீருரி
பொா
கபு
அடிகள்யாவையுமாயவீசரே. (ச)

பங்கயம்மலர்ப்பாதர்பாதியோர்
மங்கையர்மணிநீலகண்டர்வான்
கங்கையார்கருவூருளானிலை
யங்கையாடரவத்தெம்மண்ணலே. (ரு)

தேவர்திங்களும்பாம்புஞ்சென்னியின்
மேவர்மும்மதிலெய்தவில்லியர்
காவலர்கருவூருளானிலை
மூவராகியமொய்ம்பரல்லரே. (சு)

பண்ணினார்படியேற்றர்நீற்றர்மெய்ப்
பெண்ணினார்பிறைதாங்குநெற்றியார்
கண்ணினார்கருவூருளானிலை
கண்ணினார்நமையாளுநாதரே. (எ)

கடுத்தவாளரக்கன்கயிலையை
யெடுத்தவன்றலைதோளுந்தாளினு
லடர்த்தவன்கருவூருளானிலை
கொடுத்தவன்னருள்கூத்தனல்லனே. (அ)

உழுதுமானிலத்தேனமாகிமா
ளுழுதுமாமலரோனுங்காண்கிலார்
கழுதினன்கருவூருளானிலை
முழுதுமாகியமூர்த்திபாதமே. (கூ)

புத்தர்புன்சமணாதர்பொய்யுரைப்
பித்தர்பேசியபேச்சைவிட்டுமெய்ப்
பத்தர்சேர்கருவூருளானிலை
யத்தர்பாதமடைந்துவாழ்மினே. (க0)

கந்தமார்பொழிற்காழிஞானசம்
பந்தன்சேர்கருவூருளானிலை
யெந்தையைச்சொன்னபத்தும்வல்லவர்
சிந்தையிற்றுயராயதீர்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

# சருக்க அட்டவணை.



*கோபிதாரசருக்கத்தை, கோபிதாரத்துவசன்சருக்கமென்றும்

‡ கருவூர்த்தலச்சிறப்புச்சருக்கத்தை, நகரச்சிறப்புச்சருக்கமென்றும் சிலபிரிதிகளிலிருக்கின்றன.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# கருவூர்ப்புராணம்

## பாயிரம்.

### கணபதி வணக்கம்.

இன்னதிப்பெற்றித்தொன்றற்கேற்பனவிவையென்றோதி
மன்னுமப்பொருளியாவுமலைவறத்தெரியுமாறு
முன்னவன்புழைக்கைநால்வாய்முக்கணன்செக்கர்மேனிப்
பொன்னவிர்கமலம்பூத்தபூங்கழல்போற்றிசெய்வாம். (க)

பாயலுந்திருவுமுந்திப்பாலனுந்துயிலுஞ்செங்கண்
மாயனும்வேறுவேறுதிசைதிசைமயங்கிமாழ்கத்
தூயபாற்கடலைவாங்கித்துதிக்கையாற்சிதறுந்தெய்வ
நாயகற்கன்புசெய்துநான்றமிழ்நடத்தலுற்றேன். (உ)

### சபாபதி.

வேறு.

ஏர்தந்தகமலமலரயனெடுமாலமரர்தருநீழல்வைகும் [ற்க
போர்தந்தகுலிசன்முதலியர்பரவப்புலியுமொருபணியும்போற்
கார்தந்தகுழலிமயவனிதைமுகமலர்ந்துவிழிகளிப்பநாளுஞ்
சீர்தந்தகனகமணிமன்றுளும்பேரொளியைச்சிந்தைசெய்வாம்.

## பசுபதீச்சுரர்.

மேவருதத்துவசித்தியடைந்துதத்தமெய்யுணர்ந்துவிமல ஞான, மூவகையாருயிர்விளங்கிமுந்திருமன்பால்வழங்குமொ ருமுத்திவாழ்வைப், பாவனைகடந்துநின்றபரஞ்சுடரைப்பசுப திநாயகனைமுன்னைத், தேவர்கடேவைக்கருவூர்ச்சிவக்கொழுந் தையிதயமலர்திகழவைப்பாம். (உ)

## வடிவுடையம்மை.

நதிகாட்டும்புனற்கழனிவளங்காட்டவறங்காட்டுநலஞ்சே ர்வஞ்சிப், பதிகாட்டும்பசுபதியோரிடங்காட்டவலங்காட்டும் பரையைமேலாங், கதிகாட்டுங்கருங்குயிலையருள்காட்டுங்கய லிரண்டுகோட்டுந்தூய, மதிகாட்டுமடமயிலைவடிவுடையநாயகி யைவணங்கிவாழ்வாம். (௩)

## தலவிநாயகர்.

அஞ்சுளாரணியெழுத்தோராறுளார்சடையிற்கண்ட
நஞ்சுளாரணியபாகநயந்துளார்ஞானம்பூத்த
நெஞ்சுளாரணிபயந்தநிறைமதக்கவுட்கொல்வாய்
வஞ்சுளாரணியமேவுங்களிற்றினைவழுத்தல்செய்வாம். (௪)

## முருகக்கடவுள்.

உரைதருசுருதிவேதவுபநிடதத்தினுச்சிப்
பரையருள்விழிகளிப்பப்பார்விசும்புய்யத்தோன்றி
வரைபகமுருக்கிவெஞ்சூர்மாமுதறடிந்துமுந்நீர்க்
குரைகடல்குடித்தவைவேற்குமரனுக்கன்புசெய்வாம் (ரு)

## நந்திதேவர்.

அந்திவான்பிறையுமானுமடன்மழுப்படையுமேந்தித்
தந்திவீழுரிவைபோர்த்ததனிமுதலுருவந்தாங்கிப்
புந்திமாலகலஞானபோதகவெயில்விரிக்கு
நந்திவானிரவிநாடிநமதிருணலிவுசெய்வாம். (சு)

திருஞானசம்பந்தர்.

பொன்புனைகமலச்செல்விபோற்றுபேரொழிலுர்தூய
வன்புநல்லறமுங்கற்புமவ்வமாகஞான
மூன்புருவமைந்தபேதைமுற்றியவென்புக்காவி
பின்பருள்புரிந்தகாழிப்பிள்ளைதாட்கன்புசெய்வாம். (எ)

திருநாவுக்கரசர்.

சூழிமால்யானைதாழப்பிணித்தகற்றுணைந்தாழா
தாழிவாய்மிதப்பமேலாமைந்தெழுத்துணர்வினோங்கிக்
காழிவாழ்ஞானம்பூத்தக்கவுணியக்கொழுந்தைநட்ட
வாழிவாகீசர்வாசமலர்ப்பதம்வணங்கல்செய்வாம். (அ)

வெள்ளியங்கிரியைநீங்கிநாவலூர்மிளிரத்தோன்றி
யொள்ளியதோல்கபாகன்சாதனத்தோட்டிக்குள்ளாய்த்
தெள்ளியபரவையாழ்ந்துசங்கிலிசிமிழ்ப்புற்றுசு
தள்ளியகளிற்றின்பாததாமரைதலைமேற்கொள்வாம். (கூ)

மாணிக்கவாசகர்.

துன்றிருணீங்குமாறுஞ்சுடரொளிதோன்றுமாறு
முன்றிருமறைகாணுதமுதலெழுந்தருளிப்பார்மேற்
றன்றிருஞானபாதமளித்தலுந்தனையுணர்ந்த
தென்றிருவாதவூரன்சேவடிசென்னிசேர்ப்பாம். (க0)

தண்டியடிகள் மற்றை நாயன்மார்.

உண்டிதானஞ்சமானுர்சேடமுண்டுயர்வுபூண்ட
தண்டிதாள்போற்றிசெய்துதனிமுதல்விழியிற்றோன்றுங்
கண்டிதார்மார்புதிண்டோள்கரங்களங்கன்னஞ்சென்னி
கொண்டுதாமணிவோர்யாரேயவர்பதங்குறித்துவாழ்வாம். (கக)

தெண்டிரைபபுவனிவானம்பாதலந்திகழ்வோர்தம்மிற்
பண்டிருவருங்காணுதபரமனுக்கன்புபூண்டு
வெண்டிருநீறுபால்வெண்ணிலவெனமிளிரப்பூசி
மண்டிருள்சீக்குந்தொண்டர்பதமலர்வழுத்தல்செய்வாம். (கஉ)

இதுவுமது.

அக்கமாமணிவெண்ணீறைந்தெழுத்திவையடைவுசேரத்
தக்கபேரன்பினோர்ந்துதரித்துணர்ந்தவர்தம்பாதச்
செக்கமலத்துக்கேற்றபணிவிடைதிருத்தினோர்தாம்
புக்கவர்க்கேவலாற்றும்புனிதர்தாள்போற்றிபோற்றி. (கங)

எறிபத்தர்.

மறிவைத்தகரனுக்கன்பர்கொணர்வருமலரைச்சிந்தும்
வெறிவைத்தகளிரும்பாகும்வீடவெங்கணிச்சிவீசிச்
செறிபத்தரிடையூறீர்ந்துசிவநெறிவழாதுசெய்யு
மெறிபத்தரிணைத்தாளுள்ளத்திருத்தியெம்மிடர்கடீர்வாம. ()

புகழ்ச்சோழநாயனார்.

அளவிலாநிலைநாதற்குச்சேதிமமாதியாற்றிக்
களமதிஞரோதீர்ந்தசடைத்தலைகாண்டலும்பொற்
றளர்முடிமிசைபரித்துக்கேழ்கிளரெரியின்மூழ்கும்
வளர்புகழ்ச்சோழனார்தம்மலரடிமுடிமேல்வைப்பாம். (கரு)

கருவூர்த்தேவர்.

ஊர்ந்தனங்கருவூரன்னையுதரத்திலினியூராமை
சார்ந்தனங்கருவூரென்னத்தவந்திளைத்தாற்றித்தக்கோ
ரார்ந்தநங்கருவூரெந்தையாணிலையடிகள்பாதஞ்
சேர்ந்தநங்கருவூர்த்தேவர்சேவடிசென்னிசேர்ப்பாம். (கசு)

அகம்படிமைத்தொண்டர்.

பிணித்தபூங்கொடிசூழ்வஞ்சிப்பிஞ்ஞகனினிதுவைகு
மணித்தகடிமைத்தசோதிவயக்குபொற்சினகரத்தி
னணித்தனபதிபோல்வாழ்க்கையடைந்தகம்படிமையாகப்
பணித்தகுற்றேவலாற்றும்பரிசனர்பதங்கள்போற்றி. (கஎ)

மெய்கண்டசந்தானத்தார்.

மொழிவழியொழுகுமன்பர்முன்புறுகருப்பையுந்திச்
சுழிவழியிழியாவண்ணந்துணைப்பதமிதவைநல்கி
விழிவழியருளினேற்றுமெய்கண்டசந்தானத்து
வழிவழிவருவோர்காமர்சேவடிவணங்கிவாழ்வாம். (கஅ)

## சத்தியஞானியார்.

கதமலமடேவிற்றேயாதனுதினங்கருதுந்தூயர்
சிதமலரிதயவாவிமுகிழ்ப்பினுஞ்சிவபுரக்கோ
சதமலர்வதனவாசான்சத்தியஞானிஞானப்
பதமலர்தமியேனுள்ளத்தடங்கெழுபான்மைத்தாமால். (கக)

## புராணவரலாறு.

### வேறு.

அரனருட்கொண்டருணந்திசனற்குமரர்க்குரைப்பவவர் வியாதர்க்கோதத், தரமொடவர்சூதமுனிதனக்குரைத்தபுராணத்துட்டகைமைசான்ற, வுரைகருவூர்ப்பெருமைபலவுயர்பிரமகைவருத்தபுராணத்திற்பார், விரவுசிவக்ஷேத்திரகாண்டத்துபரிபாகத்தில்விளம்புமன்றே. (உ0)

அறையுபரிபாகத்திலீரைம்பானிருநான்குமறைந்தபின்னர், முறையில்வருமத்தியாயத்தி லுரைபெருமைவடமொழியைவிண்ணோ, ரிறையருளின்மூழ்குமறையவர்முதலமுதுக்குறைவோரெவருந்தென்கா, லுறைமலயவரைக்கிழமைத்தவமுனியென்றூரால். (உக)

உரைக்குதியென்றுரைத்தசதுமறைக்கிழவர்முதலியசீருரணின்மிக்கோ, ரிரைக்குமிசைத்தமிழ்புனையிந்நூற்குறைவுதீர்த்தெடுப்பரெனுந்திரத்தாற், சருக்கமிருபஃதாலேவகுத்தகவற்பாவினமாய்த்தயங்காநின்ற, விருத்தவியல்யாப்புறுதிபயக்கநல்லோர்வியக்கவெனவிளம்பினேனால். (உஉ)

இந்தநூற்றருவடசொல்வித்துழியங்குரித்தெனதுநாவினெய்துஞ், சந்தமார்தமிழ்க்கவிதைப்பணையேந்திமெஞ்ஞானச்

ணிகாப்பாக, வந்துநீர்வஞ்சிவனத்தொளிபூத்த புராணமெனவளர்ந்ததன்றே. (உ௩)

## கருவூர்ப்புராணம்.

யாதுகாரணங்கருவூர்ப்புராணமிசைப்பதற்கிதுநாளென் னின்முன்னே, ரோதுகாதைகளனைத்துமத்தலத்திற்பாதகர் சென்றுறினுஞ்சிவன், நீதுருவகைமுத்தராவரிஃதுண்மையெ னுந்திறத்தால்யானுங், கோதுறுதவணெய்தியுய்வதுகாரண்மா கக்கூறலுற்றேன். (உ௫)

முத்தநிரைத்தொளிகவினுமுழுமதிவெண்குடைச்சகரர் முரிமுந்நீ, ரித்தரணிபுரந்ததன்மேன்மூவைஞ்ஞூறெண்ணைந் தாமெல்லையாண்டி, லத்தர்பசுபதிநாதர்சந்நிதானத்திலருளன் பர்கேட்ப, வுத்தமநற்பொருட்கருவூர்ப்புராணநிலைநிற்கவென வுரைத்ததன்றே. (உ௬)

## நூற்பயன்.

சுருதிமறைதொடராதபசுபதிநாதன்சரிதைத்தொடர்பி னென்று, கருதியுளங்கேட்குநர்தாமுத்தியடைகுவரெனநூல் கழறிற்றென்று, னிருமலராயவைமுழுதுஞ்செவிப்புலனுக்கமு தமெனநிறையநல்கிப், பருதியெதிரிருளின்மலவிருளிரிப்போர் பெறும்பயன்யார்பகரற்பாலார். (உ௭)

## அவையடக்கம்.

அருள்விரவுசுரபிதருசராசரங்களனைத்தினையுமறிவுநெஞ்ச, மொருவொருபுன்மாப்படைப்பலென மனமுன்னுதன்மானுமு ரவுநூலிற், பொருவிலர்சொற்றிடுங்கருப்பபுரிவடசொற்புரா ணத்தைப்பொதியவெற்பின், மருவுசெழும்பசுந்தமிழின்வகுத் துரைப்பனெனத்துணிந்துமதித்ததம்மா. (உஎ)

மையறுநூற்கடலினைத்தாகமத்துறையிற்படிந்தமதிவல் லோர்முன்னர், தையலலங்காரவதிமுலைமுகட்டிற்புணர்பெரு மான்சரிதைவீறுல், வெய்யவன்புல்லியசொல்லும்விழுமியவா ம்விழுமியசெல்வத்தின்மிக்கோர், செய்யபொருண்முடிதகிலு ங்கைக்கொளுவாரப்பெருளின்சிறப்பான்மன்னே. (உஅ)

வேறு.

யானைமுதலடுங்களத்தினெறிபத்தர்நெடுங்களத்தின்
மானவடிவாளிடத்தான்மகிழும்வடிவாளிடத்தான்
கானுறுமான்பொருந்தத்தான்கரங்கொளுமான்பொருந்தத்தா
னணகர்வஞ்சியானடையிலருள்வஞ்சியான். (உகூ)

தூயொளிமேவிரும்பரசன்சுரரயன்மால்விரும்பரசன்
காயுவரிவிடமிசைந்தான்கௌரியுறவிடமிசைந்தான்
றீயர்புரம்பொருவில்லான்றேவர்தமிழ்ப்பொருவில்லா
னுய்கருவூராதியானிசைகருவூராதியான். (ங0)

ஆனிலையாரவிர்துவசரலரவன்மாலவனகர்தை
யானிலையாரழலுருவமருவிநிமிரணிகருவூ
ரானிலையாரடிகளுக்காளாவீர்காளடன்மேதி
யானிலையார்கவர்நெடுஞ்சூலடுதொழிற்காளாகீரே. (ஙக)

பாயிரம் முற்றுப்பெற்றது.

# வராககிரிச்சருக்கம்.

### வேறு.

நீற்றுவாலொளிமேனியின்பாலொளிநிறைவெள்
ளேற்றுவார்கொடியுயரியவிறையவன்சரிதை
சாற்றுவாய்மையனசூதமாமுனிவரன்றவங்க
ளாற்றுவார்திகழ்நைமிசாரணியத்தையடைந்தான். (௧)

அடைந்தவேலையிற்சவுனகாதியாமுனிவர்
மிடைந்துசென்றெதிர்தழீஇக்கொடுமிகவளவளாவி
யுடைந்தவார்கடலொலித்தெனவேத்தெடுத்துரைத்துக்
கிடந்தவன்பொடுகொணர்ந்துதம்மிருக்கையிற்கெழுமி. (௨)

ஆயிடைத்தவிசேற்றிநின்றருக்கியமுதவிச்
சேயிடைப்படர்கவலையின்வருத்தங்கடீர்த்து
நீயிடைப்படயாங்கள்செய்தவமெனநிகழ்த்தித்
தாயிடைப்படாரினியநன்முகமனுஞ்சாற்றி. (௩)

வேதநூற்கடற்கரைகண்டவியாதனேயனைய
சூதமாதவசுதைமதிக்கண்ணிசூழ்வேணிப்
பூதநாயகன்புண்ணியபுராணத்திற்போக்கும்
காதலோமிகவுடையயாங்கழறலொன்றுளதால். (௪)

நன்றுசொல்லினீர்நனிதவமிழைத்துமுக்குறும்பும்
வென்றுநாற்பொருண்மேற்படுகேள்வியின்மிக்கீர்
மன்றுளார்புரிவைதிகசைவத்தின்வழியி
னின்றுளாரலால்யாவரேகதியிடைநிலைப்பார். (௫)

வேறுதேவுளனுயர்கதிதருமெனவிரும்பி
யூரியாவையும்யாரையும்வந்துழியொடுங்க
வாறுசேர்சடிலத்தனேநித்தனென்றறிதிர். (௬)

சிவனதுண்மையைந்தெழுத்துமேதிகழ்திருவெழுத்து
சிவனைநோக்கிநின்றாகியதியானமேதியானஞ்
சிவனதன்பருக்காட்படுஞ்செல்வமேசெல்வஞ்
சிவனதக்கநீறணிந்திடுஞ்சின்னமேசின்னம். (௭)

அங்கணன்றலத்தாற்றியவறங்களேயறங்க
டிங்கள்வேணியஞ்சந்நிதித்தீர்த்தமேதீர்த்தம்
புங்கவன்றனக்காற்றியபூசையேபூசை
சங்கரன்றனையேற்றியசரிதமேசரிதம். (௮)

அன்னவாகலானவிர்மதிகொழுந்தமுதிறைக்கும்
பொன்னவாஞ்சடைப்புங்கவன்சரிதையின்முதியோர்
சொன்னவாறுகேட்பதுமுயன்றிருளந்துணிவா
லென்னைநீர்வினவியதனைமொழிமெனவிசைப்பார். (௯)

வாதராயணனருண்மொழிவழிபயில்கேள்விச்
சூதமாதவசுடர்மணித்தொகுதியுமகிலுஞ்
சீதவார்பொழிற்சிகரியிலருவிகொண்டிழியும்
வேதநீடுருவாயதோர்வெள்ளியங்கிரியில். (௧௦)

மாலயன்புரந்தரன்றவம்புரியுமாமுனிவர்
மேலவானவர்தானவர்விஞ்சையரியக்கர்
நூலினுண்ணுணர்வுடையவர்பூசுரர்நோன்மை
சாலுமாதிரக்கிழவருஞ்சென்னிதாழ்ந்திறைஞ்ச. (௧௧)

நிறையுமன்புடன்சனகருநெக்குநெக்குருக
வறைதரும்புகழ்ச்சனந்தராஞ்சலிதிருத்த
மறைவனந்தருசநந்தனர்வணங்கிவாழ்த்தெடுப்பக்
குறைவருஞ்சநற்குமரருட்குழைந்துகைகுவிப்ப. (௧௨.)

உலகெலாந்தரும்பரம்பரையொருமருங்கிருப்ப
வலகினூன்மொழிக்குமரவேணனந்தலையமர
நிலவுநீடுதத்துவம்புணர்ந்தகன்றுநின்மலமா
யிலகுபேரொளிக்குள்ளொளியாகியவிறைவன். (௧௩.)

கமைத்தவம்புரிமயன்கண்டுகெற்கவுமரிதாச்
சமைத்தபொற்சினகரத்திடைத்தாபதருளம்போ
லமைத்ததுயவத்தாணிமண்டபத்தினுளரிமா
னிமைத்தமாமணியாதனத்தினிதுவீற்றிருந்தான். (கச)

தலைவன்மாமணியாதனத்திருந்துழிதலத்தின்
றொலைவில்கேள்வியன்சநற்குமரன்றொழுதெழுந்து
நிலையினிற்றலுங்கிருவுளத்துணர்ந்தருணிமலன்
கலையின்றுணர்நந்திபாற்கடைக்கணோக்கருளி. (கரு)

வருகநந்தியாம்வைகுநற்றலங்களும்வளனு
முருகுமன்பினன்சநற்குமாரன்றனக்குணர்வு
பெருகவீயறைகுதியெனப்பிஞ்ஞகனருளா
லருகணைந்தவம்முனியொடுசெந்தனதிடனணைந்தே. (கசு)

எந்தைநின்னுழையருள்சுரந்திசைப்பதற்கியைய
முந்தையெத்துணைத்தவமிழைத்தனன்முனியென்னுச்
சிந்தைவைத்துநற்றானங்கடெளிவுறவோதி
விந்தைசேர்தலப்பெருமையும்விளம்பமேயினனால். (கஎ)

ஓதுதொல்பதியவற்றினுளுதியர்கோனுட்டின்
மீதுயர்ந்தவாம்பிரவதிநதிக்கரையிசையிற்
றுதுபோதுமிழ்வஞ்சுளாடவியெனச்சாற்று
மாதிமாபுரச்சிறப்பினையன்றுரைத்தனனால். (கஅ)

அம்மறுண்பொருளதன்பயனகத்தினைப்பரிதா
லெம்மனோர்புலன்றெளிவுறவிரித்தினிதெவையுஞ்
செம்மையாலொருபொருளிருகாற்செப்புகென்றூர்
மும்மையுந்தெரிசவுநகர்முதலியமுனிவர். (கசு)

சொற்றவாசகங்கேட்டலுஞ்சூதமாமுனிவன்
முற்றநோற்றமாமுனிவிர்நீராதலான்முதல்வ
னுற்றவாதிமாபுரித்திறனோதுகென்றுரைத்தீர்
மற்றறையார்நுமக்கொப்புளார்முனிவரின்மன்னோ. (உo)

ீருதற்கரும்பாவங்கடீரும்வெண்டிரைசூழ்
பாரினுட்பெருந்திருவரும்படித்தமைகேட்பிற்
சாருதற்கருங்கதிவருஞ்சத்தியமென்றால்
யார்கொலத்தலக்கதையினைவரையறுத்திசைப்பார். (உக)

இன்னணஞ்சிலவுண்மைகள்பயக்குமாறியம்பிப்
பன்னருந்தவவியாதனைப்பன்முறைபரவி
யன்னவன்பதநினைந்தவனுதரம்பெருகிச்
சொன்னவாறுகேட்குதிரெனச்சொல்லுகின்றனனால். (உஉ)

வேறு.

புனிதவெண்ணீறுநிலவுதல்போலப்புனிற்றிளம்பிறைநிலா விரிக்குந், தொனிகெழுமந்தாகினிநனிபுனையுஞ்சுடர்முடியடி களையிறைஞ்சிப், பனிவரைமேருவுயரியகயிலைப்பருப்பதமெ னப்புகழ்நிறுவித், தனிநெடுங்கவிகைநிழற்றுசேரலர்கோன்றங் கியகொங்குநன்னுடு. (உங)

முதியவர்தொழும்பேரூர்சதுமறையோர்முறைதொழுந்தி ருவவிநாசி, வதிதருபவானிகூடல்செங்கோடுவெளர்கொடுமுடி நெடுமொயன், விதிபுகழ்முருகன்பூண்டிவெள்விடையோன்வெ ஞ்சமாக்கூடலுமேனைப், பதிகளுமுளவந்நாடுதன்றென்பாற் பன்றிவெற்பொன்றுளதன்றே. (உச)

குடுமிதொட்டிழியுங்கவிழ்தலையருவிதாழுதல்குளிர்பசும் பொதும்பர், நெடுமலர்பொதுள்பைந்தளிரிளங்கொம்பர்நீணு திநிரைநிரைபொதுப்ப, நடுமுகடகல்வான்புழைபடவெழியினறு மணிகொழித்தெறிதிவலைப், படுதிரைசுருட்டியலைத்தெழுங்க ங்கைப்பாய்புனலொழுகுதன்மானும். (உரு)

கானலந்திகழ்தண்டலையதன்புறனுங்கழிபெருமுழையுள வேனு, மூனலனுகருமுழுவைவெம்பேழ்வாய்பிலமெனத்திறந் திடுமொருசார், தேனலன்பருகிப்புனமெறிந்தழுநர்சிறுகுடிப் பெரியதொல்வளஞ்சே, ரேனமால்வரைதானென்னினும்யா னைமலையெனத்திரிதருமொருசார். (உகு)

எழில்கண்டபிலுங்குடட்டயன்மேயுமிரலைவானுயர்முகட ணையு, முழுமதிக்கரையைப்பிணையெனத்தாவமுரட்புரிக்கோ டசென்றுரிஞ்சிப், புழைபடவழியினிழிசுவையமுதம்பூங்குறக் கொடிச்சியர்தினமு, முழுகலுமுகந்துநுகர்தலும்யாவுமதுவெ னின்மொழியுமாறெவனே. (உஎ)

நிறையரமகளிர்பொன்னகர்துறந்துசாரல்னிலைத்தலா கொய்வார், பிறைதவழ்சாரற்கொடிச்சியர்விசும்பிற்பெயர்ந்து கற்பகமலர்கொய்வார், குறைவறுதிருவுந்தொழிலுநல்லெழிலு ங்குணங்களுமொருங்குளவிவரை, யறிவரிதெனினுங்கண்ணறி விக்குமன்றிமற் ர்கொலோவறிவார். (உஅ)

தளர்நடைத்தென்றறிரிவனமொருசார்சந்தனச்சோலைக ளொருசார், கிளர்பசும்புயல்கண்டபில்வனமொருசார்கின்னர மிதுனங்களொருசார், வளரமைதரளஞ்சொரிவனவொருசார் மதமிபஞ்சொரிவனவொருசா, ரிளகுதேனிழியுமிருவனமொ ருசாரிறவுளர்குரம்பைகளொருசார். (உகூ)

பலவிதருசெறிதாபரங்களினுலும்பஃறலைமுடிகளினுலுங், குலவுபூஞ்செடிப்பைங்கொடிகளினுலுங்குகைகளின்றொகைப லவானு, மலமடைதூரபாற்றெறிததலினுலுமாழைநுண்ணுதி பலவானு, மூலவுசீர்வாலகில்லியரென்னுமொருவகைமிருடிக ளாலும். (௬0)

கண்ணுறக்காண்போருண்ணிகழ்பாவங்கலத்திறவரந்தர லானும், புண்ணியச்சாந்தங்கண்டிகைபுனையும்புனிதமாமுனி வரரானு, மெண்ணருங்கோடிசித்தர்களானும்யாவையுந்தருந் திறலானுந், தெண்ணிலாமுடியோனுறைதலானுந்திப்பியமலை யெனத்திகழும். (௬க)

வேறு.

முன்பதன்வரன்முறைமொழிந்துநால்பய
லன்பினன்காசிபன்மரபிலாயவன்
மன்பதைபரவுசீர்வராகமாமுனி
யென்பவன்றுறவினிலேதமில்லவன். (௬உ)

நீவிர்கவிழ்ந்தியதறிதுமெனவிருபனிங்கியவை
மேவியருமறையரொடுமெய்த்தவர்வைகிடனுய்த்தே
யேவியமொத்துறங்கிவிழித்துவகவியல்புறப்பூசை
காவிமிடற்றோர்புரியுங்காலையிற்காவலனடைந்தான். (கரு௪)

அடைந்தவரையனையவளையமரரையென்றருளிற்
றடைந்தமனத்தினராய்வந்தனையாற்றிமுற்றியபின்
மிடைந்தவர்ப்பார்த்திதுபோதின்மேவியதென்னெனவிதா
முடைந்துபணிப்புறவேந்தனொடுங்கியிறைஞ்சினனுரைத்தான்.

வேறு.

மாதவமுனித்தலைவநிற்பணியவந்தனன்மனுநத்தலைவர்நம்மொடெனவுஞ், சோதனைநிமித்தமிஃதென்றுளநகைத்தருகுதொண்டுபுரிமாணவர்தமை, மேதகவிளித்தரியமாமுனிவர்தாமுயலுமெய்த்தவவொடுக்கமுநனி, யேதகமிடத்துளசிறப்புமிவைகாட்டுமெனவெய்தியறிவிப்பனிறையும். (கரு௬)

ஆண்டனுறுவேண்டியவருந்தவமிருந்தவரகங்குழையவாற்றுதிறனுங், காண்டகுநிறைகுண்டிகைகரங்கெழுமுதண்டுதவராடைகலையாதனமிகப், பூண்டிலகுகண்டிமணிபூதிசிவபூசைபுரிபுண்ணியருகண்ணுமிடனு, மாண்டகுசிவாகமபுராணமவைகற்றிதயம்வைப்பவிருக்கைபலவும். (கரு௭)

அங்கிவளர்குண்டமணிமண்டலமருக்கியமொடாச்சியநிறைத்தகுடநீர், தங்குகலசங்குலவுதர்ப்பொதிகும்பகவதானியமுநறியவீத், தங்கமுறுமாபயமுதற்குசைசமித்தரிசிதூர்வையசுருக்கொடுவிரும், பைங்கனிபழக்குலைகளாறுசுவையுண்டிமுதலாயவைபரித்தவிடனும். (கரு௮)

ஐந்தெனவிதித்தசிவதீக்கையுபதேசதசகாரியமமைந்திரிபுறச், சிந்தைதெளிவுற்றிடவினுவிடைகொடுத்தொருவருக்கொருவர்தேர்ந்துபவரும், பந்தமறுமுத்தர்முதலாயவிருக்கைகளும்பார்த்ததிசயித்தவனவ, னைந்தைதமியேன்குறைபொறாத்தரு[illegible]மிறைஞ்சனுமிருந்தவர்சொல்வார். (கரு௯)

வல்லியமுயர்த்தகொடிமன்னவமறைக்குலவர்வாழ்மனைக
டோறுமருவி, யொல்லைவருகென்றவரைப்பட்கொடுமறைகாணமது
ஊறுதசைநாறுபுலனும், புல்லியபுலைக்குடிலெனத்திகழ்வகண்டி
வைறபொருதவிழிசிறியிதுபோ, நெல்லிருமயற்புலனிலைகுநிரி
ருங்கிலுறுதண்டமுமினிப்பெறுவிரால். (கச0)

ஈனர்புரியித்தொழிலியற்றினரிருந்தவரையேசுமொழி
பேசிவறிதே, தானெனமையவர்க்கொடுசபித்திடமனக்கவடுதங்கு
தறுகட்கொடுமையே, யானதுகளைத்தினிர்மறைக்குலம்விடுத்த
னிரகற்றினிரொழுக்கின்வழியே, காணிடைவயிற்றினைவளர்க்கு
திர்நறக்குறவுகானவரெனக்கழறியே. (கசக)

நீத்தவரைநீத்தவரைசேர்க்கிருபதந்தொழுதுநீசருறைவா
சலெனவே, பூத்தைவெறிதுற்றமதுவார்த்ததடமுங்கடமுமூனு
ணவுமாயுறுதலாற், நீத்தெறுவனத்துறைகிராதரொடுசேர்மி
னெனவோதியவராயமொருவி, மாத்தவவடைந்தனன்மறைக்
குலமடாதினியவர்க்கெனவகுத்துரைசெய்தான். (கசஉ)

வேறு.

உரைசெய்தகிருபனைப்பார்த்தோரைந்தும்வென்றுயர்ந்தார்
கரைசெய்துமணிகொழிக்குங்காவிரிநாட்டுறைவேந்தே
திரைசெய்தகடலுலகிற்செயற்கரியதியவினைப்
புரைசெய்தாலும்பொறையிற்பரித்தளிப்பதேபுகழாம். (கசங)

காவலன்காவாதொழியிற்காரொடுபைங்கூழறங்கும்
பூவருவேதியரோதிபொன்றுமாபயங்குன்றுந்
தேவர்சிறப்பொடுபூசைசிதையுமென்றாற்சிதையாமே
யாவரையும்யாவையையுமின்றளிப்பதேயறனும். (கசச)

ஓத்தினையோதியுமறையோராயிருந்துமுபநிடதம்
பாத்துணராப்பொதுவுணர்வுமற்றவர்பற்றவரை
நீத்திகழ்வரவர்கடிருவுளநிகழ்வையாராயார்
காத்திருப்பிகவிற்றறிஞர்கருவதற்காளாயினர். (கசரு

யாதுபுரியினும்பொறுப்பதிசையரசர்க்கென்னிறைஞ்சி
யாதுபுரிகுதலெனவேந்தகன்றனனுணவிருள்போ
யோதுமருந்தவருழிஞானேந்தயமுற்றுங்கிருண்மைப்
போதுசிதைத்தருக்கணையாற்பொருந்தினன்செங்கதிர்ப்புத்தேள்

கறைகெழுமாமணிமிடற்றார்கனைகழற்சேவடிமலரின்
மறையவரின்றடையின்றாரென்பனமங்கலவார்த்தை
யனையுவரிநீருலகிலறிவிப்பான்போலெழுந்து
முறைமுறைறவைகுறையின்மறைமுகரதுமுழங்கியசங்கம். (௧௪௭)

ஆதித்தனெழுமமையத்தந்தணர்தத்தமிற்குழுமிச்
சாதித்தன்மையைநீங்கிச்சாதித்தனைமையணுகிப்
போதித்தாரணிதிணிதோட்புரவலற்குமறையெல்லாம்
பேதித்தாரணியமுறைப்புரிவிததான்பெரிதுமென்றே. (௧௪௮)

ஏற்றவனையுறுந்தண்டமிழைத்திதுபோழ்தெல்லோரும்
வேற்றொருநன்புலத்தடைதலவியப்பெனவான்பொருனைநதி
யாற்றொருதீரத்தடைந்தாரருந்தவரன்றடைகின்ற
பேறதனையோர்ந்திலர்வேதம்பிதற்றியபிராந்தரெலாம். (௧௪௯)

முற்றுமருந்தவத்தினருமுநிதிரையாம்பிரவதியி
னுற்றனரவ்வுழியடர்ந்துநெருங்கமறையோரையுளந்
துற்றபுலப்பகையெனககணடகன்றுசுடர்க்கோயில்புக்கார்
மற்றவர்கண்மருண்டுதிசைமயங்கிமறுகிடைநின்றார். (௧௫௦)

கங்கைபுனைவார்கோயிற்கலந்தகருவூர்த்தேவர்
பொங்கருள்கூர்சிவயோகம்புரிந்ததுமுற்றியதேயோ
வங்கவரன்போதவமோவாதரமோயாதுகொல்லோ
தங்கைகொடுதிருவுருவைத்தழுவினாசரணடைந்தார். (௧௫௧)

படர்ந்தெழுதுந்துமியார்த்தபனிமலர்சிந்தினவானங்
கிடந்தகடற்புவிகுழுமிக்கெழுமியதிசயம்விளைத்த
தொடர்ந்தமறையவர்துளங்கித்துகடீர்ந்ததூயவரை
யடர்ந்தனமென்றழுதுவிழியருவிசொரிதரநின்றார். (௧௫௨)

எங்குற்றீர்துகடீர்க்கிரிதுதெரியாதிடரிழைத்தே
மங்குற்றேரரிலென்றேவருந்துமன்றயவர்தேறத்
தங்குற்றீர்கருவூரார்தமதுகுலமாதலின
[illegible]ற்றமிரிந்ததெனநுவன்றவிசும்பிடைவாணி. (௧௫௩)

மறையுயிர்த்தாரமுல்வேள்விவளர்ப்பவரும்மகிழ்தூங்கிக்
கறையணக்கர்கோதாகுங்கணத்தர்மணிகுயிற்றுமறை
யறைநகழற்றூண்மலரிலருச்சனையாற்றியாதிசைவத்
துறைநெகழுமாகமச்சலதிதனைத்துசுகோதயராஞர். (௧௫௪)

வேறு.

அந்தணர்தொகுதிவாழ்கவானினத்தழைகமாரி
சந்ததம்பொழிகசைவந்தலையெடுத்திடுகவேந்த
ரிக்கிரதருவிளங்கவெம்பிரானன்பர்சூழ்க
சிந்துவெண்டிரைநீர்ஞாலந்திருமகள்வளர்கமன்னோ. (௧௫௫)

வெண்டிருநீறுபாரில்விளங்குகமிளிர்செவ்வேணி
யண்டர்நாயகனூர்நாமவைந்தெழுத்தருளிலங்கப்
பண்டைநான்மறையுமாகமங்களும்படர்கவெங்குந்
தொண்டருந்தொண்டர்சாற்றப்புராணமுஞ்சூழ்ந்திலங்க. ()

ஞானதேசிகர்சீர்மல்கநாற்பெருங்கவிதைசூழ்க
தேனலர்ப்பொழில்சூழ்வஞ்சித்திருநகர்வளஞ்சிறக்க
வானவர்நாதன்பூசைவளப்பெருந்திருவிளங்க
தானமுஞ்சமயமாறுந்தலத்துளோர்யாரும்வாழ்க. (௧௫௭)

கருவூர்த்தேவர்கதிபெறுசருக்கம்முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம் ௨௧-க்கு திருவிருத்தம்-௧௧௨௧.

---

## கருவூர்ப்புராணம் முற்றிற்று.

---

மெய்கண்டதேவர்

மெல்லடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

—o—

# கருவூர்ப்புராண வசனம்.

---

## காப்பு.

வஞ்சிவனத்தின்வளங் கூறுவாமதில்வாழ்
குஞ்சரத்தின்பாத முளங்கொண்டு.

---

## புராணவரலாறு.

கலைமாமதிசூடியகடவுள் கடல்சூழுலகத்திடையமருந்
தலமான்மியத்தையருணந்தி தம்பாலுணர்ந்தசனற்குமரன்
சொலவாங்கதுதேர்வியாசமுனி சூதர்க்குரைப்பவவர்வழிச்சேர்
பலமாமுனிவர்தொழுங்கருவூர்ப் பசுபதீசப்பெருமானே.

கருவூர்த்தலமான்மியமானது கிருபாசமுத்திரமாகிய திருநந்திதேவர் சனற்குமாரமகாரிஷிக்கும், அவர்வேதவியாசமுனிவருக்கும், அவர் சூதபுராணிகருக்குந் திருவாய்மலர்ந்தருளிய பதினெண்புராணங்களுள் பிரமகைவருத்தமென்னு மகாபுராணத்திலே சிவக்ஷேத்திரகாண்டத்திலே நூற்றொன்பதாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

---

இரண்டாவது,

## வராககிரிச்சருக்கம்.

மகவாயுயர்காசிபமுனிதன் மரபிலுதித்தவிராகமுனி
மிகவேயோகசித்தியினை விரும்பிச்சிவபூசனையாற்றி
யிகலொன்றின்றிமுத்தியினை யெய்தும்வராககிரிச்சாரற்
பகலோனுழையாப்பொழிற் கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

முனிபுங்கவராகிய சூதபுராணிகர் ஒருநாள்நைமிசாரணிய த்தை யடைந்தபொழுது சவுனகாதிமகாரிஷிகள் வந்தனவழி பாடுசெய்து வஞ்சுளாரணியமாகிய கருவூர்மான்மியத்தைமுன் னொருகாற்கேட்டு மகிழ்வுபெற்றிலோம் மீட்டுந்திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச் சூதபுராணிகர் சொல்வாராயினர், வெண்கொற்றக்குடையினையுடைய சேரரா ஜனால் அரசுபுரியப்பட்டகொங்குநாட்டிலே கருவூர்,பேரூர்,அவி நாசி, பவானிகூடல், திருச்செங்கோடு, திருப்பாண்டிக கொடு முடி,திருமுருகன்பூண்டி,வெஞ்சமாக்கூடல்,முதலியபலதலங் களும் தென்புறத்திலே வராககிரியென்னும் மலையுமிருக்கின் றன. அவற்றின்வளமைசொல்லுதற்கரியன. அம்மலையிடத்துப் பற்பலசித்தர்களும் முனிவர்களும் வசித்தலினாலும் சிவபெரு மான் திருக்கோவில்கொண்டெழுந்தருளி யிருத்தலினாலும் சி ரேட்டமுட்மைபெற்றது. அதன்வரலாறு சொல்லுதுங் கேட் மீர்களாக. காசிபகோத்திரத்திலே துறவறத்திற்சிறந்தவராகிய வராகமுனிவரென்பவர் ஒருவரிருந்தார். அவர்சரியாபாதம் கிரி யாபாதங்களில் வல்லவராகிச் சிவயோகம்செய்தற்கு நல்லதல ம்நாடி இந்தக்கிரியைஅடுத்து வன்னிமரத்தருகில் சிவலிங்கமொ ன்றுதாபித்து பூசித்துவந்தார். சிவபெருமான் பிரசன்னராய் யாதுவேண்டுவதெனவினவ, பெருங்கருணைத்தடங்கடலே? உம துதிருவருளால் சரியைகிரியையெனனும் இரண்டுபாதங்களு முணர்ந்தேன். சிவயோகத்தைஅடியேனுக்கு அனுக்கிரகஞ்செய் தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச்சிவபெருமான் கி ருபைகூர்ந்து வராகமுனிவனே? யோகமானது இயமம், நியம ம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியா னம், சமாதியென எட்டங்கங்களையுடையது. என்று அதன்விரி வையும் திருவாய்மலர்ந்தருளி இம்மலையானது யோககிரியாக ஆதியிலேயே படைக்கப்பட்டதாதலின் இதனிடத்து நீயோக சித்திபெற்றுமுத்தியடையக்கடவை.உனக்குயோகீசனென்னும் பெயரும்இம்மலைக்கு நீபூசித்தகாரணத்தால்வராககிரியென்னும் பெயரும் உண்டாகக்கவென்று அனுக்கிரகஞ்செய்து மறைந்

தருளினர். அவ்வாறே வராகமுனிவர் யோகிசராய் முத்தி பெற்றார். இம்மலையும் வராகமலையென்று வழங்கப்பட்டு வருகிறது.

---

## மூன்றாவது,

## ஆம்பிராவதிநதிச்சருக்கம்.

வேதம்பரசுங்கிரியிடத்துவிமலையருளேயுருவாகிச்
சூதநதியாம்பிரநதியென்றுயர்பேர்சூடித்தோய்ந்தவர்தம்
மேதமகற்றிமருங்கிருபாலெண்ணில்சிவத்தானம்மருவிப்
பாதம்பணியக்கிருபைசெயும்பசுபதீசப்பெருமானே.

ஓர்காலத்திலே மழைபெய்யாதுமன்னுயிர்கள் வருந்தும் பொழுது சிவபெருமான் உமாதேவியைநோக்கி நீவராககிரியைச்சூழ்ந்த நாடனைத்து முய்யும்பொருட்டு அக்கிரியினின்றும் ...ாதுகலையை நதியுருவமாகவரும்படிசெய்யக் கடவாயென்று ஞ்ஞாபிக்க, அவ்வண்ணமே உலகமாதாவாகிய உமாதேவியான வா வராககிரியினின்றும் தமது அருளையே நதியுருவாக ஒழுகச் செய்தனர். அந்நதியினிருமருங்கிலும் பல்லாயிரம் முனிவர்கள் மாவிருக்கமாகவிருந்து தவஞ்செய்தார்கள். அந்நதி அம்மையின்திருவருளேயுருவாய்வருதலின் அம்பாநதியென்றும், ஆம்பிரமென்கிற பெயரையுடைய மாமரங்களினது நீழலில்வருதலின ஆம்பிரமாநதியென்றும்பெயர்பெறும். காமதேனுவானது கருவூரையடைந்து பூசிப்பதற்குமுன்னர் இந்நதியையடைந்து இருமருங்கிலுமுள்ள பலசிவத்தானங்களைப்பூசித்தபடியால், இந்நதிக்குப் பொருனையென்னும் பெயருமுளது. அந்நதிவராககிரியினின்று மிழிந்து இருகரையிலுமுள்ள பலசிவஸ்தலங்களையும் வணங்கிக் காவேரிநதியுடனே திருமுக்கூடலென்னு மிடத்திற்கலத்தலைச்செய்யும். அந்நதிக்கரையில் வராகமுனிவராற்பூசிக்கப்பட்ட யோகலிங்கமென்னுந் தலமுதலாக திருமுக்கூடலீறாகத், தேவர்கள், இருடிகள், சித்தர்கள், வாலகில்லியரென்னும் இயக்கர்கள்; விநாயகசுப்பிரமண்யர்கள்; பிரமவிட்டுணுக்கள்,

முதலாயினோர்பூசித்த அளவிறந்ததலங்களுள்ளன. அவற்றுள் சந்திரன் குருபத்தினிசாபந்தொலையப்பூசித்த சோமேசலிங்கமும், அசகர்கணேசனென்னுமொருஇலிங்கமும், வெண்மணலைக் குவித்து அகத்தியர்பூசித்த அகத்தியலிங்கமும், காஞ்சேசனென்னும் இலிங்கமும், அடுத்தபிரம்புவனத்திலே தெய்வீகஆரிஷலிங்கங்களும், கொங்கணேசமென்னுந்தலத்தில் கொங்கணேச்சுரனென்னும் இலிங்கமும், காளீசனென்னுமிலிங்கமும், தாரகாசுணங்களாற்பூசிக்கப்பட்ட தாரகேச்சுரனென்னுமிலிங்கமும், வீரபத்திரர்பூசித்த வீரேசனென்னும் இலிங்கமும், விசாலலிங்கமும், காட்சிலிங்கம், திலகுலேச்சுரலிங்கம் முதலியவிலிங்கங்களுஞ்சிறந்தன. அவற்றுள்ளும் ஆதிமாபுரமாகிய கருவூரிலே பஞ்சலிங்கங்களென்னும் ஐந்துஇலிங்கங்கள் மிகச்சிறந்தன.

அவைவருமாறு:—

க. புற்றிடங்கொண்டெழுந்தருளிய ஆதிநாயகரென்னும் பசுபதிலிங்கம்.

உ. அதன்கீழ்பால் கோடீச்சுரலிங்கம்.

ஈ. அதன்கீழ்பால் கயிலாயநாதலிங்கம்.

ச. அதன்தெற்கே கரியமாலீசனென்னுமிலிங்கம்

ரு. அதற்கு அக்கினிதிக்கில் ஆம்பிராநதிக்கரையில் வஞ்சுளேச்சுரலிங்கம், என்பனவைகளே.

அன்றியும் வஞ்சுளேச்சுரத்துக்குக்கிழக்கே அரசவனத்திலே திருமால்பள்ளிகொண்டருளியதலமும் ஒன்றுளது. அந்நதி காவேரிநதியுடன்கலக்குமிடத்திலே மணியீசனென்னும் சிறந்தலிங்கமொன்றிருக்கின்றது. இவ்வாம்பிரமாநதியொன்று, மணிமுத்தாநதியொன்று, காவேரிநதியொன்று, ஆகமூன்றுநதிகளும் ஒருங்குகூடுதலாலவ்விடத்திற்குத் திருமுக்கூடலென்று பெயர். இங்ஙனமாகிய ஆம்பிராநதியின் வளங்களையும் அதிலாடினோர்பெற்றபேற்றையும் இனித்தெரிக்கலுறுதலரிது.

# கருவூர்ப்புராண வசனம்.

## நான்காவது,

## சராசரச்சருக்கம்.

மேலாம்பிரமன்றுயில்கூரவிளிந்தசரத்தோடசரமெலாம்
மாலாய்ப்படைக்கக்கருதிவெண்ணெய்வரையின்பாங்கர்ச்சுரபி
தவம், நோலாநின்றுசராசரத்தின்சுவடுநோக்கிச்சிருட்டிசெய்
து, பாலாற்பூசைபுரிந்தேத்தும்பசுபதீசப்பெருமானே

உலகத்தின்கண்ணுள்ள நால்வகையோனி யெழுவகைத் தோற்றமாகிய சராசரங்களனைத்தும் பிரமதேவரானவர் துயில்கூரும்இரவில் அந்தரப்பிரளயத்தினு லழிவுபெற்றன. பிரமதேவர்துயிலொழிந்து சராசரங்களின் விளிவைநோக்கிப் பெரிதும்வருந்தி முன்போலமறுபடியும்படைக்கத்தொடங்கினர். அத்தொழில்கைகூடாது இடர்ப்பட்டு அதனைவிடுத்துக் கைலையங்கிரியிலே சிவபிரானைநோக்கித்தவஞ்செய்தனர். அதன்முன்னரே சிவபெருமான்சிருட்டியை நினைந்தபொழுது காமதேனுவந்துவணங்கியது. அதனைநோக்கி நீபூமியின்கண்சென்றுபிரமதேவனைப்போல் சிருட்டித்தொழில்செய்யக்கடவாயென்று ஆஞ்ஞாபித்துவிடைகொடுத்தனுப்பினர். பின் பிரமதேவருக்குப் பிரசன்னராகப்பிரமதேவரானவர் அடியேன்றுயின்றமையால் சராசரங்கள்அழிந்துபோயின. அதனாற்பாவமுமறதியும் சம்பவித்தன. அப்பாவம் நீங்குமபொருட்டுஞ் சிருட்டித்தொழில்கை வரும்பொருட்டுந் தேவரீரை அருச்சிக்க விரும்புகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அங்ஙனமேல் நீ ஆம்பிராநதிக்குவடகரையிலுள்ள கருவூரையடைந்து அங்குநம்மைபூசிப்பாயாகவென்று அருளிச்செய்தார். அவர்பூசித்தவாறும் சிருட்டிபெற்றவாறும் பின்னர்க்கூறப்படும் அதுநிற்க. முன்விடைபெற்றகாமதேனுவானது பூலோகத்திலே தென்றிசையையடைந்து தவஞ்செய்யநல்லதலம்யாதென்று நாடுங்காலையில் நாரதமகாரிஷியானவர் அதனையெதிர்ந்து, தேனுவே! ஆம்பிராநதிக்கரையில் வஞ்சுளாரணியமொன்றுள்ளது. அங்குச்சென்றுதவம்புரி

வையாயின் இஷ்டசித்தியெளிதிற்பெறுவாயெனக் காமதேனு வார்கசிரியையடுத்து அங்கிருக்கும் ஆம்பிராநதிக்கரையிலுள்ள புஷ்தலங்களையும் வணங்கி வஞ்சிவனத்தைக்கண்ணுற்று நாரதர் மொழிப்படி தவஞ்செய்துகொண்டிருந்தது. ஓர் நாள், காமதேனுவே! இத்தவஞ்சிவனத்திலே ஒருபுற்றினிடத்திலே பாதலத்தினின்றுந்தோன்றிய ஆதிலிங்கமென்னும் ஒருமகாலிங்கம் இருக்கின்றது. அதனைப்பூசிப்பாயாகவென்று ஆகாயத்தினின்றும் ஒருவாக்குஎழுந்தது. அவ்வாக்கின்படியேசென்று புற்றினிடத்தெழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானைக்கண்டு அத்தியந்தபரவசமடைந்து அந்தமகாலிங்கத்துக்கு பால்முதலியஉபகரணங்களால் அபிடேகநைவேத்தியமுதலியனசெய்து வசித்துக்கொண்டிருந்தது. பின்னர் ஓர்நாள் சிவலிங்கப்பெருமானது திருமுடியின்வாமபாகத்திலே காமதேனுவினது காற்குளம்புபட்டு உதிரஞ்சொரிந்தது. அதனைநோக்கி, ஆ, கெட்டேன் இதற்கென்செய்வேனென வருந்தாநிற்புழி, சிவபெருமான் பசுவே! உன்மீதுபிழையில்லை அதுநமது திருவிளையாட்டானிகழ்ந்ததாதலின் அதற்காகநீவருந்தற்க. இன்றுமுதல் நீபூசித்தகாரணத்தால் எம்மைப்பசுபதிநாயகனென்று மும்புவனங்களும் போற்றக்கடவன. நாம்இருக்குமிவ்விடத்திற்குத் தென்கீழ்த்திசையிலே சராசரங்களின் அடிச்சுவடுகள் அடையாளங்களாகவைக்கப்பட்டிருக்கின்றன. பிரளயங்கள்தோறும் பிரமதேவன்முதலாயினோர் படைத்தற்றொழிலை நமதனுக்கிரகத்தினால் அவ்வடையாளங்களைநோக்கியே செய்யாநிற்பர் நீயுமங்குச் சென்று நம்மைச்சிந்தித்தால் படைக்குமாற்றல பெறுவாய் என்று அருளிச்செய்து மறைந்தனர். காமதேனு அவ்வாறே தென்கீழ்த்திசையையடைந்து சராசரங்களின் அடிச்சுவடுகளிருந்தலைநோக்கிச் சிவத்தியானஞ்செய்து படைக்கத் தொடங்கிற்று. சராசரங்களனைத்தும பழமைபோலவே படைக்கப்பட்டன. அவைகளின் புஷ்டிப்புநிமித்தம்வடதிசையிலேவெண்ணெயமலையென்று ஒருமலையையுகுத்து அதன்கீழ்த்திசையிலே தேனு

தீர்த்தமென்று ஒருதீர்த்தமகழ்ந்து சிலகாலம்சிவார்ச்சனை செய்துகொண்டிருந்து பின்னர் சுவர்க்கலோகஞ்சென்றது. வெண்ணெய்மலையானது தரிசிப்போர்க்கு இட்டசித்திகளைவேண்டுவோர் வேண்டியவண்ணங் கொடுப்பதுமன்றி உட்டினகாலத்தும்தண்ணென்றிருத்தலால் அதன்பெயரை விளக்கும்.

## ஐந்தாவது,

## அலங்காரவதிச்சருக்கம்.

மண்ணின்மீதுசிவதலத்துள்வஞ்சிவனமேசிறந்ததென
வண்ணலருளவலங்காரவதிகேட்டிந்தத்தலனடைந்து
பெண்ணினல்லார்தம்மோடும்பிரசமலர்தூய்ச்சிவபூசை
பண்ணவவட்குப்பாகமருள்பசுபதீசப்பெருமானே.

கைலையங்கிரியிலே எழுந்தருளியிருந்த எம்பெருமானைஎம்பிராட்டியெழுந்துவணங்கிச், சர்வலோகைகநாயகரே பலவிதமாகிய தவங்களினும் உயர்ந்ததாய் செய்தற்கெளியதாயரியபலனைத்தரத்தக்கதவம்யாது, அதனைத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச் சிவபெருமான் எல்லாத்தவங்களினுஞ்சிறந்தது சிவார்ச்சனைசெய்த லொன்றேயாமென்றருளிச்செய்தனர். மகாதேவியார் மீட்டும்வணங்கி அடியர்கள் சிவபூசைசெய்தல்வேண்டும். எந்தவிடத்திற்செய்வது விசேடமாகுமென்பதனையும், அருளிச்செய்யவேண்டுமென்றிரப்பமகாதேவரானவர் வஞ்சுளாரணியஞ்சூழ்ந்தகருவூரே அதற்குத்தக்கதலமென்று அனுக்கிரகஞ்செய்தருளினர். உமாதேவியார் வரங்களைடைபெற்று இலக்குமி சரஸ்வதிமுதலிய சேடியர்கள்சூழ அலங்காரவதியென்னும் பெயரோடு பூலோகத்தையடைந்து வஞ்சுளாரணியத்திலேசென்று ஆம்பிராவதிநதியிலேவிதிப்படிஸ்நானஞ்செய்து திருநீறு அக்கமணிமுதலிய சிவசின்னந்தரித்து ஆகமவிதிவழிமற்பசுபதிநாயகரைப்பூசித்தார். இலக்குமிசரஸ்வதிமுதலிய தேவமாதர்களும் பூசித்தார்கள். சிவபெருமான

அலங்காரவதியார்பூசையையுவந்து அவருக்குப்பிரியாவரந் தந்தருளி யுடனிருந்தினர். மற்றதேவமாதர்களுக்கும் அவரவர் விரும்பியவரங்களைக் கொடுத்தருளினர்.

## பிரமச்சருக்கம்.

வையம்படைக்குமாற்றலினை மறந்துமலர்மெல்லணைக்கிழவன்
துய்யவரம்பெற்றொருவெள்விதொடங்கிச்சொல்லின் கிழத்திமணஞ், செய்யச்சிருட்டிதந்தவன்செய்தீர்த்தமுவந்துபடியுனர்க்குப், டையப்பழுக்குமருட்கனியேப்சுபதீசப்பெருமானே.

முன்னர்க்கூறியபடி பிரமதேவரானவர் ஸ்ரீகயிலாயத்திலே சிவபெருமானிடத்திலே உத்தரவுபெற்றபின்னர்க்கருவூரையடைந்தார். பாவங்களுக்குப் பகையாகவொழுகும் ஆம்பிராநதியிலேமூழ்கி விபூதியுருத்திராக்கமுதலிய சின்னங்கள்தாங்கி ஆதிலிங்கப்பெருமானைமெய்யன்போடுவிதிப்படிபூசித்துக்கண்களானந்தவருவிசொரிய மெய்யுரோமாஞ்சிதங்கொள்ளநாத்தழுதழுப்பநின்று பலவாறுபுகழ்ந்து தோத்திரித்தனர். சிவபெருமானெதிர்தோன்றி வேண்டியவரங் கேட்பாயாகவென்று திருவுளம்பற்றப்பிரமதேவரானவர் ஆண்டவனே? யானுறையின்ற காலையில் சராசரங்கள் அழிந்தமையானேர்ந்தபாவமும்,யானே முதல்வனென்றுளன்னுள்ளத்தேயெழும்புமகந்தையும், படைத்தற்றொழிலை ஒவ்வோர்காலத்தில்மறக்குமபொச்சாப்பும், நீக்கியருளவேண்டுமென்று பிரார்த்திக்கச்சிவபெருமான் அங்ஙனமேவரந்தந்தருளி மற்றும்பிரமதேவரை நோக்கி இவ்விடத்துநீயொரு வேள்வியுரிந்து கலைமாதைமணந்து படைத்தற்றொழிலைச்செய்திருந்து பின்னர்நின்னுலக மடைவாயாகவென்று பணித்துமறைந்தருளினர். பிரமதேவர் அப்பணிதலைமேற் கொண்டு ஆம்பிராநதிக்குவடக்கே வஞ்சுளேச்சுரத்துக்குக் கிழக்கே பசுபதீச்சுரத்துக்குத்தெற்கே பிரமதீர்த்தமென்று தம்பெயரா

லொருதீர்த்தமுண்டாக்கி அதன்கரையிற்சிலநாள் தவஞ்செய்து வதிந்து வெண்ணெய்மலையையடுத்து அதன்வடக்கேயொருயாக குண்டஞ்சமைத்து அனேகமுனிவர்களுந்தேவர்களுஞ்சூழவேத விதிப்படி யவ்வேள்வியைமுடித்துக் கலைமாதைக்கலியாணஞ் செய்து பின்னர்ச்சின்னாள் கருவூரில்வசித்துப் பசுபதீசருக்குத் திருக்கோவிலமைத்துத் திருத்தேர்முதலிய திருவிழாக்களும் நடத்தித்தென்றிசையிலே அரிகரபுத்திரனையும் பத்திரகாளியை யுந்தாபித்து வழிபட்டுவந்தார். அவரதுகாதலநிறைவேறியபின் னர்ப்பிரமலோகஞ்சென்றார்.

---

## ஏழாவது,

## பதரிவனச்சருக்கம்.

முதியதவத்துவியாதமுனிமுன்னேன்பூசைமுயன்றொருபால்
வதியலல்லதலனருளின்வழங்கவேண்டவவற்கிரங்கி
நதியின்வடக்கேசிற்றிலையுநறியசிறியகனியுமுடைப்
பதரிவனந்தந்தருள்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

பிரமதேவரியற்றிய யாகத்திற்காக வந்திருந்த மகாரிஷிக ளில் வேதவியாசரொழிந்த மற்றையோர்கள் தத்தமிருக்கை யிற்சேர்ந்தார்கள். வேதவியாசரானவர் நிரந்தரமாய்க்கருவூரில் வசிக்கக்கருதிப் பசுபதீசப்பெருமானை வந்தித்து உளன்போடு தோத்திரஞ்செய்து அஞ்சலியஸ்தராய் நிற்புழிப் பரமசிவம் வெளிப்பட்டு வேண்டும்வரம்யாதென்றுகேட்ப வேதவியாசரா னவர் இறைவனே? உம்மைச்சதாகாலம்பூசித்து நீங்காமலிவ் விடத்துத்தானே இருத்தல்வேண்டுமென்னும பேரவாவுளதா யிற்று. அதற்குத்தக்கவிடம்நியமித்தருளவேண்டுமென்றுவேண் டச்சிவபெருமான் நம்தாலயத்திற்கு உக்கினிதிக்கிலே ஆம்பிரா நதிக்குவடகரையிலே ஒரு இலந்தைவனமிருக்கிறது. அவ்விட த்துவதிந்து நம்மையருச்சிப்பாயாகவென்று அருளிச்செய்து மறைந்தார். வேதவியாசமுனீந்திரரானவர் அவ்விலந்தைவனத்

துழிச்சென்று அதன்விம்மிதங்களைநோக்கிவியந்து அவ்விடத்துத்தமதுசீடரோடும் வசிப்பாராயினார்.

## எட்டாவது,

## திக்குப்பாலகச்சருக்கம்.

சீருந்திருவுமுடையவராந்திக்குப்பாலரொனுந்தேவா
நீரும்பூவுங்கொடுபூசைநிகழ்த்தவவர்கடமக்கிரங்கி
யாருமபெறுதவவாடதவியருளுந்தன்மைமவியந்துநிதம்
பாரும்விசும்பும்புகழ்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

சிருட்டித்துவக்கத்திலே கருவூரிலே - இந்திரன்-அக்கினி-யமன்-என்னுந்தேவர்கள் பசுபதிச்சுரனைபூசித்து முறையே கிழக்குத் தென்கிழக்குத் தெற்கென்னுந் திசையாதிபத்தியமுமபலவளன்களும்பெற்றார்கள். திருமாலுடனே உயுத்தஞ்செய்தமுராசுரனென்பானது மரபிலே அக்கினியக்கண னென்னும் அசுரனொருவனிருந்தான். அவனுக்குமிக்கவல்லமையுடையதுற்சயன்என்னும் புத்திரன்பிறந்து சூலகடைமுதலியன பயின்று வலலோனாய்ப் பலவிடங்களிலுஞ்சென்று தேவர்முனிவர் முதலாயினோருக்கிடுக்கண்விளைத்து வருகையிலொருநாள் நல்வினைவயத்தாற்கருவூரையடைந்தான். அவ்விடத்துப்பலமுனிவரர்கள் சிவபூசைசெய்தலைக் கண்ணுற்றவளவில் அவனது இயற்கைத்துற்குணங்களனைத்தும் அவனைவிட்டகல அவன்அந்தமகரிஷிகளைப் பூசிப்பானாயினான். அப்பூசையின்வலியால் நிருதியாகித் தென்மேற்றிசையாதிபத்தியம்பெற்றான். வருணன்பூசித்துமேற்றிசையாதி பத்தியம்பெற்றான். வாயுவானவன் திருவாநிலைநாதன் திருக்கோவிலைத்திருவலமிட்ட பெரும்புண்ணியத்தால் வாயுவென்னும்பதவியும் வடமேற்றிசையாதிபத்தியமும் பெற்றான். குபேரன்சிவபெருமானுக்கு இரத்தினாபரணங்கள் சாத்தி

யலங்கரித்துப் பூசித்த தவவலியால் வடதிசையாதிபத்தியம்பெற்றுச் சங்கநிதிபதுமநிதியாதி நிதிக்கோனாயினன். ஈசானன்பூசித்து வடகீழ்த்திசையாதிபத்தியம்பெற்றான்.

---

## ஒன்பதாவது,

## கடவுளாருச்சனைச்சருக்கம்.

அலரிசோமனரிபிரமராகண்டலனேமுதலமர
ரிலகுமிருடிகணமூவரொன்னுந்தமிழ்நாட்டரசரொடு
குலவுமறையோர்முதற்றேவர்குழுமிச்சிவமாக்குறிநிறுவிப்
பலருமபூசைசெயுங்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

மகாவிட்டுணுவானவர் திருவாநிலையுடையாரைப்பூசித்து இலக்குமிதேவியை மணந்து எவ்வுயிரையுங் காத்தலாகிய அதிகாரம்பெற்றுக் கருவூரிலே திருக்கோவில்கொண் டிருப்பாராயினார். வேதங்களானவை பசுபதிநாயகரை வழிபட்டு உண்மை பேசுதலென்னும் வரம்பெற்று மூவுலகத்தும வழங்காநிற்பன். அனேக ரிஷிகள் திருவாநிலைநாதற்குத் தென்கீழ்த்திசையிலே வேள்விகள்புரிந்து அளவிறந்த சிவப்பிரதிட்டைகளுஞ்செய்து வாழ்வடைந்தார்கள். சுப்பிரமணியக்கடவுள் ஆநிலையடிகள் திருவாலயத்துக்குக் கீழ்பாலும், ஆமபிராநதிக்கு மேல்பாலுமாகத் தம்பெயரால் தீர்த்தமுண்டாக்கிப் பூசித்தார். அந்தீர்த்தக்கரையில் அளவிறந்தவர்கள் தவஞ்செய்து சித்திமுத்திகளைப் பெற்றார்கள். தாடகையென்பாள் பசுபதீச்சுரர்ஆலயத்துள்ளே ஒருதீர்த்தம் உண்டாக்கிப் பூசித்து மாரீசனென்னும் பிள்ளையைப்பெற்றாள். சேரசோழ பாண்டியர்களென்னும் மூவேந்தர்களும்பூசித்துத் திருவாலயத்திருப்பணி முதலாயினசெய்து கதியடைந்தார்கள். சூரியன் சந்திரன்முதலிய நவக்கோள்களும்பூசித்து வேண்டும் வரங்களைப்பெற்றார்கள்.

---

## பத்தாவது,

# சுக்கிரனுபதேசம்பெற்றசருக்கம்.

இச்சைமிகுத்துப்புகர்பூசையினிதிஞற்றவவற்கிரங்கி
மச்சைபோர்ததவுடலுயிர்கண்மாய்ந்தவிடத்துமொழப்பவல்ல
விச்சையருளியதைக்கசனும்வியாழன்மகனுக்குணர்த்தவருள்
பச்சைசெழும்பூம்பொழிற்கருவூரப்பசுபதீசப்பெருமானே.

அசுரகுருவாகிய சுக்கிரன் கருவூரிலே பதரிவனத்திலே ஒரு அக்கினிகுண்டமமைத்து அதன்மத்தியிலே ஒற்றைககாலில் நின்று ஐம்புலன்களையுமடக்கிப் பஞ்சாக்ஷர தியானபரனுய் நூறுவருடம் அரியதவத்தைச்செய்தான. அவனது தவத்திற் கிரங்கி மஹாதேவரானவர் உமாசமேதராய்த்தோன்றிச் சுக்கிரனைநோக்கி நீ இறந்தோரை யெழுப்புதற்குரிய மிருதசஞ்சீவினியென்னும் மந்திரத்தைவிரும்பித்தவஞ்செய்தனை, அதனை யுபதேசிக்கப் பெறுவாயென்று உபதேசித்து இம்மகாமந்திரத்தை நின் சீடர்களாகிய அசுரர்களுக்கு உபதேசியா தொழியக் கடவாயென்று ஆஞ்ஞாபித்து மறைந்தருளினர். பினனர்ச்சுக்கிரன் தனது பதியினையடைந்து வாழ்ந்திருந்தான். சிலநாட் சென்றபின்னர் ஒருகாலத்திலே தேவர்களுக்கு மசுரர்களுக்கும் பெரிய உயுத்தமுண்டாகித் தேவப்படையால் அளவிறந்த அசுரர்கள் மாண்டார்கள. அஃதுணார்ந்த சுக்கிரன் தான்கற்ற மிருதசஞ்சீவினிஎன்னும் மந்திரவல்லமையால் இறந்தொழிந்த அசுரர்களைப் பிழைத்தெழும்படி செய்தான். இறந்த அசுரர்களுயிரபெற்றெழுந்ததைநோக்கித் தேவாகள்பயந்து தேவகுருவாகிய வியாழனையடுத்து நடந்த வரலாறுகூறினர். வியாழன் சுக்கிரன்கற்ற மந்திரவலியை வியந்து தன் குமாரனுகிய கசன் என்பவனைநோக்கி நீ சுக்கிரனையடுத்து அவன் மனதுக்கியையவொழுகி மிருதசஞ்சீவினி மந்திரத்தை உபதேசிக்கப் பெற்று இங்குவருவாயாகவென்று விடுப்பத் தேவர்கள் அக் கசனைநோக்கி நீ நூங்கைமொழிப்படி மந்திரங்கற்று வருவா

யாயின் நினைக்கும் யாகத்தின்கண் அவிப்பாகம் தருவேமென்று மொழிந்தார்கள். அவ்வாறேகசனும் சுக்கிரனது இருக்கையை யடைந்து அடியேன் தேவரீரைச்சரணடைந்தேனென மிகப் பணிவோடுவணங்கி மொழியச் சுக்கிரன் இரக்கமுற்று நீயாவன்? இவண்வந்தவாறென்னே? எனவினவ, கசன் ஐய? யான் வியாழனுடைய குமாரன் என்பேர் கசன் உமக்கடிமைசெய் யும்பொருட்டு வந்தேன் என, சுக்கிரன் மனமுவந்து ஆனிரை மேய்க்கும்படி பணித்த பணிவிடையைக்கசன் ஆயிரம்வருடஞ் செய்திருந்தான். இவ்வாறு ஒழுகுறும்நாளிலே வியாழனது புத்திரியாகிய தேவயானியென்பாள் கசனிடத்திலே பற்றுடையாளாய் அவனைத் தினந்தோறுஞ் சோலையிற்சென்று புதுமலர் கொய்துதரும்படி வேண்டிப்பெற்றும், யாழ்வாசிக்கக்கேட்டு மகிழ்ந்தும் காலங்கழிப்பாளாயினள். கசன் மிருதசஞ்சீவி மந்திரத்திற்காகக் குருபணிவிடைசெய்து வருதலையுணர்ந்ததைத்தியர்கள் பொறாராய் அவனைக்கொன்று புலிக்கிரையாக்கினார்கள். அன்றிரா கசன்வராமையால் தேவயானி சுக்கிரனிடத்து மொழியச் சுக்கிரன் உணர்ந்து மிருதசஞ்சீவி மந்திரத்தாற்கசனை வரவழைத்தான். மற்றொருநாள் தைத்தியர்கள் அவ்வாறே கசனைக் கடலிலமிழ்த்திக்கொன்றார்கள். அன்றுந் தேவயானி வேண்டுகோளால் சுக்கிரன் கசனை எழுப்பினான். பின்னொருநாள் தைத்தியர்கள் கசனைக்கொன்று தீயடுத்து நீறாக்கி அச்சாம்பரைச் சுராவுடன்கலந்து அச்சுராவை ஒருபொன்வள்ளத்திற்பெய்து சுக்கிரனிடத்துக் கொணர்ந்து உண்ணக்கொடுத்தார்கள். சுக்கிரன் அம்மதுவை யருந்திக் களித்திருந்தான். அற்றைப்பகல்கழிய விரவிற் கசன்வராமையைத் தேவயானியாலுணர்ந்த சுக்கிரன் முன்போல மிருதசஞ்சீவி மந்திரத்தைச் சரித்துக்கசனை அழைத்தான். கசன் சுக்கிரனது வயிற்றிலே யுயிர்பெற்றெழுந்து அடிகளே! யான் எவ்வாறு வெளிப்படுவதெனச் சுக்கிரன் இம்மோசம் தைத்தியர் செய்கையானேர்ந்ததென்றுணர்ந்து, தன்வயிற்றினிடத்திருக்கும் கசனுக்கு மிருதசஞ்சீவிமந்திரத்தை யுபதேசித்துத் தன்வயிற்றைப் பீறிவெளி

யில்வரக் கற்பித்தான். அவ்வண்ணமே சுக்கிரன் தா வயிற்றி னின்றும் வெளிவந்த கசனுனவன் அம்மிருதசஞ்சீவி மந்திரத் தைக்கொண்டு சுக்கிரனை எழுப்பினுன். உயிர்பெற்றெழுந்த சுக்கிரன் இனி இம்மதுவையருந்தினோர் சண்டாளராகவென்று சபித்துக் கசனைநோக்கி நினதெண்ணம் முற்றியது. இனி நின் னிருக்கைக் கேகக்கடவாயென்று விடைகொடுப்பக் கசன்வண ங்கி விடைபெற்றுச்செல்லுழித் தேவயானி தடுத்துத் தன்னை வதுவையாற்றிச்செல்லும்படி வேண்டினுள். கசன் தேவயானி யைநோக்கி நீ குருபுத்திரியா யிருத்தலி னின்னை மணத்தல் தகுதியன்று அன்றியும் நின்றந்தை வயிற்றினின்றும் நீயும் நானும் தோன்றினமையால் சகோதரியுமாவாயாதலின் நின்னை வேட்டல் முறையன்றென்று மறுத்தான். தேவயானி சினந்து கசனே நீ என்றந்தையின்பாலுணர்ந்த மந்திரத்தை மறந்து விடக்கடவாயென்றுசபித்தனள். கசன்வருந்தித்தேவயானியை நோக்கி நீ வியபசாரியாகக் கடவாயென்று சபித்துவிட்டுப் பொன்னுலகம்சென்று தாதையைவணங்கி நிகழ்ந்தவையனைத் துங்கூறி அம்மிருதசஞ்சீவி மந்திரத்தை வேறொரு மறைய வனுக்குபதேசித்துத் தேவர்கள் வாக்குத்தத்தஞ் செய்தபடி யாகத்தின்கண் அவிப்பாகம்பெற்று வாழ்ந்திருந்தான்.

## பதினொன்றுவது.

# முசுகுந்தச்சருக்கம்.

வில்லுவத்தினிலைபறித்துவிமலன்றிருமேனியிலெறிந்த
புல்லவுணர்வின்முசுக்கலையைப்புவியாளரசர்தமின்மேலாம்
நல்லவரசாய்முடிபுனையநல்கியாண்டதனிமுதலே
பல்லவஞ்சேர்பொழிற்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவர்பூர்வசன்மத்திலே குர ங்காயிருந்தபொழுது வில்வமரத்திலேறி அதன் இலைகளைப்பறித் துக் கீழேயிட அவை சிவபெருமான் திருமேனியிற்பட்ட புண்ணி

வசத்தால் அவ்வுணர்ச்சிமறவாதிருக்குமவனை குரங்குமுக
மும் மானிடவடிவமும் அருளப்பெற்று அரசனாகப்பிறந்து கரு
வூரிலே அரசுசெலுத்திக்கொண்டிருந்தார். அவர் ஸ்ரீசிதம்பரம்,
திருவாரூர், திருமறைக்காடு, முதலிய பலதலங்களிலுஞ்சென்று
வணங்கி மீண்டுங்கருவூரையடைந்து வசித்தார். அக்காலையில்
தேவேந்திரன் மாற்றலன்போருக்கு ஆற்றாதுடைந்து வருந்து
தலையுணர்ந்து அவனுக்குப்படைத்துணைசெய்து வெற்றி பெறு
வித்தார். அவ்விந்திரன ஆன்மார்த்தமாகப் பூசிக்கப்பட்ட ஸ்ரீ
தியாகராசப்பெருமானை அவனாற்பெற்றுத்திருவாரூரிலேதாபித்
தார். திருப்பரங்கிரியிலே ஸ்ரீ முருகக்கடவுள் தெய்வயானை யம்
மையைத் திருக்கல்யாணம் செய்தபொழுது அத்திருவோலக்
கத்தை கண்டிறைஞ்சிக் கண்களிகூர்ந்தார். பின்னர்க்கருவூ
யடைந்து நீதிகோடாதுபன்னாளரசாண்டு முத்தியடைந்தார்

பன்னிரண்டாவது.

## தீர்த்தச்சருக்கம்.

ாசிதனிலேகங்கைமணிகன்னிகைப்போர்த்தீர்த்தமுத
லாசில்பலவாந்திருத்தலனுமதனுக்கிசையவாங்காங்கே
தேசுமலியும்பலபலவாந்தீர்த்தமமைத்தேயெம்மனோர்
பாசவினையைப்பறிக்கவல்லபசுபதீசப்பெருமானே.

கௌதமநதிதீரத்திலே காசிப கோத்திரத்திலே காலவ முனிவரென்பவ ரொருவரிருந்தார். அவரிடத்துத் தேவத்துதி யெனனும் முனிவரர்வந்தார். அவருக்கு அர்க்கியபாத்திய ஆசமனங்கொடுத்து இனியமுகமன்கூறி ஆசனத்தெழுந்தருளச் செய்துவணங்கி தவக்கடலே தேவரீர் எங்குநின்றும் எழுந் தருளாநின்றீர்? என்று விண்ணப்பஞ்செய்ய தேவத்துதி மகரிஷியானவர் தீர்த்தயாத்திரைசெய்துவருகின்றோம் எனத்தேவரீர் சென்றாடியதீர்த்தங்களையும் அவைகளிருக்குந் தலங்களையும் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று காலவமுனிவர் வேண்டத் தேவத்துதிமுனிவர் சொல்வாராயினர்.

கேதாரத்திலே - புட்கரதீர்த்தம்.
காசியிலே - கங்கையிலேமணி கன்னிகைதீர்த்தம்.
பிரயாகையிலே - திரிவேணிதீர்த்தம்.
கயையிலே - பிதிர்தீர்த்தம்.
அலம்புதியிலே - வன்னிதீர்த்தம.
மணிகூடத்திலே - திரிபுட்கரதீர்த்தம், நர்மதை, கோதாவரி, துங்கபத்திரை, யமுனைமுதலிய தீர்த்தங்கள்.
ஸ்ரீபருப்பதத்திலே — அம்பாதீர்த்தம்.
மாளவதிலே - பானுதீர்த்தம.
சததாரணியத்திலே - பிரமதீர்த்தம்.
சிகாளத்தியிலே - பொன்முகலித்தீர்த்தம்.
பிற்பாசகத்திலே - வருணதீர்த்தம்.
திருவாலங்காட்டிலே - குகதீர்த்தம்.
காஞ்சிபுரத்திலே - வேகவதிமுதலியதீர்த்தங்கள்.
அருணசலத்திலே - பிரமதீர்த்தம் துர்க்கைதீர்த்தம்.
விருத்தாசலத்திலே - மணிமுத்தாநதி
சிதம்பரத்திலே - சிவகங்கைமுதலியதீர்த்தங்கள்.
திருவாரூரிலே - தேவதீர்த்தம்.
வேதாரணியத்திலே - மத்தியானமணிகன்னிகை,வேததீர்த்தம் கோடிதீர்த்தம்முதலியதீர்த்தங்கள்
திருப்புகலூரிலே - அக்கினிதீர்த்தம்.
திருவெண்காட்டிலே - காயத்திரிதீர்த்தம்.
திருச்சாய்க்காட்டிலே - சாயாதீர்த்தம்.
திருக்கடவூரிலே - யமதீர்த்தம்.
சீகாழியிலே - பிரமதீர்த்தம.
திருமயிலாடுதுறையிலே - காவிரியிலே,துலாமாசத்திலேகங்கை யுதிக்குந்தீர்த்தம்.
புள்ளிருக்கும்வேளூரிலே - சண்முகதீர்த்தம்.
திருவாவடுதுறையிலே - காம்தேனுதீர்த்தம்.
திருவீழிமிழலையிலே - சக்கரதீர்த்தம்.
திருவாஞ்சியத்திலே - சூரியதீர்த்தம்.

திருவிடைமருதூரிலே-காருண்ணியதீர்த்தம், காவிரியிலேபூசத்
தீர்த்தம்முதலியதீர்த்தங்கள்.
திருநாகேச்சுரத்திலே-முருகதீர்த்தம்.
கும்பகோணத்திலே-மாமகதீர்த்தம்.
திருச்சத்திமுற்றத்திலே-வேலாயுததீர்த்தம்.
திருவலஞ்சுழியிலே-வலஞ்சுழிதீர்த்தம்.
திருவையாற்றிலே-பஞ்சநதிதீர்த்தம்.
திருவானைக்காவிலே-சம்புநதி, சந்திரபுட்கரணி, முதலியதீர்த்தங்கள்.
மதுரையிலே-பொற்றாமரை, வையைமுதலியதீர்த்தங்கள்.
கந்தமாதனத்திலே-சேது,தனுக்கோடிமுதலியதீர்த்தங்கள்.
திருக்குற்றாலத்திலே-சித்திராநதிதீர்த்தம்.
திருநெல்வேலியிலே-தாம்பிரவர்ணியிலேசிந்துபூர்துறை, ஏம
புட்கரணி,சர்வதீர்த்தம்முதலியதீர்த்தங்கள்.
கன்னியாகுமரியிலே-கன்னிகைதீர்த்தம்.
திருவனந்தபுரத்திலே-தர்மதீர்த்தம்.
கேரளத்திலே-பாண்டுமகாதீர்த்தம்.
கோகன்னத்திலே-கோடிதீர்த்தம்.
கொங்குநாட்டிலே-காஞ்சிநதிகுடகநதிஆம்பிராநதிமுதலியதீர்த்
தங்கள்.

கொங்குநாட்டிலே மேற்சொன்ன ஆம்பிராநதிக் கரையிலே திருக்கருவூரென்னும் திவ்வியக்ஷேத்திரமானது அனேக தீர்த்தங்களுடன் சிறந்துவிளங்குகிறதென்று தேவத்துதி மகாரிஷியானவர் காலவமுனிவருக்குத்திருவாய்மலர்ந்தருளினார்.

---

## பதின்மூன்றுவது,
## தலதீர்த்தச்சருக்கம்.

சிவமார்வஞ்சிவனத்தினிடைத்திகழாம்பிரமாநதியுடனே
நவமார்தேனுமுருகவேள்சதுமாமுகத்தோன்றுடகையா
மிவராற்கண்டநாற்றீர்த்தமிலகுமரசதீர்த்தமுடன்
பவநோய்தீர்க்குந்தீர்த்தமருள்பசுபதீசப்பெருமானே.

காலவமுனிவர் மீட்டுந்தேவத்துதி முனிவரை வணங்கிச் சுவாமீ! அனேக தலங்களையுந் தீர்த்தங்களையுங்கூறி யீற்றிலே ஆம்பிராநதிக்கரையிலே திருக்கருவூரென்னுந் திவ்யக்ஷேத்திரமானது பலதீர்த்தங்களோடு விளங்குகிறதென்று கூறிவிடுத்ததென்னை திருவுளம்பற்றவேண்டுமென்றுவினவ, நன்றுவினுயினீர் கேட்கக்கடவீரென்று தேவத்துதிமுனிவர் சொல்வாராயினுர். உலகத்தினுள்ளே எல்லாப்பதிகளுந்தோன்று முன்னர்த தோன்றி ஆதிபுரியென்னும் பெயர்பெறுகையாலும், பிரமதேவன் கற்பந்தோறும்படைத்தற்றொழில்செய்யக் காரணமாயிருந்து கர்ப்பபுரியென்னு நாமம்பெற்றமையாலும், ஓர்விளக்கிலேதோன்றிய பலதீபங்கள் ஒடுங்குங்காலத்தில் தோனறிய முறையேயொடுங்கி ஒன்ருனுற்போல ஆதிலிங்கமாகிய பசுபதீச்சுரரானவர் தன்னுற்றோற்றுவிக்கப்பட்ட பலதலங்கள் திரத்தம் மூர்த்திகளையுந் தன்னுட்கரத்தலினுலே கரபுரியென்னும் பெயர் பெற்றமையாலும், கர்ப்பபுரியினுஞ் சிறந்ததலம்பிறிதொன்றில்லை, அதன்பெருமை தோன்றுமாறு மற்றெல்லாத் தலன்களையு முன்னமொடுத்தோதிக்கர்ப்பபுரியினை யீற்றிற்கூறினுமெனக், காலவமுனிவர் அத்தலனிலுள்ள தீர்த்தவிசேடங்களைச் சாங்கோபாங்கமாய்த் திருவாய்மலாந்தருள வேண்டுமெனத், தேவத்துதிமுனிவர் சொல்லத்தொடங்கினுர்.

இந்தக்கருவூரிலே அநந்தந்தீர்த்தங்களுள்ளன. அவற்றுள ஆறுதீர்த்தங்கள் மிகச்சிறந்தன. அவைவருமாறு:—

க. ஆம்பிராநதி-இதுதோன்றியொடுங்குங்காறுஞ் சிறந்த தீர்த்தமேயாயினும் வஞ்சிவனத்தெல்லையில் அந்நதி சர்வோத்திருஷ்டமாகையால் மகாதீர்த்தமெனப்படும்.

உ. தேனுதீர்த்தம் - இதுவெண்ணெய்மலைக்குக் கிழக்கேயுள்ளது.

ரு. முருகதீர்த்தம் - பசுபதீச்சுரத்துக்குக்கிழக்கே ஆமபிராநதிக்கு மேற்கேயுள்ள கோபிதாரவனத்திலிருப்பது.

௪. அரசதீர்த்தம - பதரிகாச்சிரமத்துக்குமேற்கே ஆம்பிராநதிக்கரையிலே அரசவனத்திலுள்ளது.

௫. தாடகைதீர்த்தம் - இது ஆநிரையக ராலயத்துள்ளே பூர்வதிக்கிலேயுள்ளது.

௬. பிரமதீர்த்தம் - இதுவஞ்சுளேசராலயத்துக்குக் கிழக்கேயுள்ளது. இதனைஅவ்வாலயத்திற்குமேற்கே யிருந்ததாகப் புராணத்துட்கூறப்படுகிறது. ஒருகால்பூர்வத்தில் பிரம தீர்த்தத்துக்குக்கிழக்கே இருந்தவஞ்சுளேசசுர ஆலயமானது நதிப்பெருக்காற் பழுதுபட்டுப்பின்னர் அத்தீர்த்தத்தின்மேல் புறத்திற்கட்டப்பட்டிருக்கிறதுபோலும்.

இத்தீர்த்தங்கள் மிகவும்விசேடித்தவைகளாதலின் இவற்றிலொன்றின் புனலைச்சிரத்திற் புரோக்ஷித்துக்கொள்ளினும், தொடினும், உட்கொள்ளினும் சகலபாவங்களையும் போக்கிப் புண்ணியத்தைத்தருமானால் இவற்றில்விதிப்படி நீராடுவோர பெறும்பலனை எம்மனோரால் அளவிடற்கெளிதோ? அன்று.

---

பதினான்காவது,

## கோபிதாரத்துவசன்சருக்கம்.

பூமிக்குடையவிசாலைநகர்மன்னன்கோபிதாரனெழு
பழிவில்புகழோனகத்தியனாரடையவவனையவமதித்துப்
பொழியுங்கருணைநோக்கிழந்துபொல்லாக்குட்டநோயடைந்த
பழியைத்தொலைத்ததிருக்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

மிகுந்த வளமைபொருந்திய விசாலைஎன்னும் நகரத்திலே திராவிடமரபிலே தோன்றிச் சகலசற்குண சம்பன்னனாகிய கோபிதாரத்துவசன்என்னும் அரசனொருவனிருந்தான். அவன் சிவபத்தி யடியார்பத்தியுடையோனாய் மன்னுயிர்களுக்கன்னை போன்று மனுநெறிகோடாது அரசுபுரியுநாளிலோர்நாள், சிவனடியாரிற்சிறந்த அகத்தியமுனிவரானவர் பலமகாரிஷிகள் தமமைச்சூழ்ந்துவர அவ்வரசனைக் காணும்பொருட்டு எழுந்தருளி

அரசனிடத்துவந்தார். அரசன்சிவபத்தாக்ரகண்யராகிய அகத்தியரையும் முனிபுங்கவர்களையுங்கண்டு எழுந்து வந்தனைவழிபாடுசெய்திலன். ஊழ்வினை அறிவைமயக்குதலால் வாளாவிருந்தான். அகத்தியமகாமுனிவரானவர் தம்மை அவமதித்தலையுந் திருவுள்ளங்கொள்ளாது தம்முடன்போந்த சிவனடியார்களை அவமதித்தற்குப் பொறுதவராய்ச் சென்றவழியேமீண்டு தம்முடனுறையும் பிரமிட்டன்என்னும் முனிவர்பிரானை நோக்கிச் சிவனடியார்களை மதியா தகந்தைகொண்டிருந்த அவ்வரசனைச் சபிக்க நினைந்தேன். இன்றுவிரதகாலமாயிருத்தலின் லங்கனஞ்செய்திலேன், நீபோயவ்வரசனைச்சபித்து வருவாயாகவென்று ஏவ அவ்வாறே பிரமிட்டமுனிவரானவர் கோபிதாரத் துவசனிடத்துச்சென்று சிவனடியாரைஅவமதித்திருந்த மன்னவனே? நீ குட்டநோயால் வருந்தக்கடவையென்று சபித்து மீண்டனர். பின்னர் முனிவர்கள்யாவரும் பொதியமலையையடைந்தார்கள். கோபிதாரத்துவசனுக்கு யாவரும் அருவருக்கத்தக்க குட்டநோயானது மேற்கொள்ள அரசன் துணுக்குற்று நோயின் வருத்தஞ்சகிக்கலாற்றாது வருந்தினன். அந்நோய்நீங்கும் பொருட்டுப் பற்பலபிராயச்சித்தங்கள்செய்தும் அதுசற்றும் நீங்கிலது. பிணியின் வருத்தஞ்சகிக்கலாற்றாது நாடுநகரந் துறந்து வனத்திற்றிரிதருகையில் முன்செய்த புண்ணியவசத்தால் பிரமிட்டமகாமுனிவரது ஆச்சிரமத்தையடைந்தான். பிரமிட்டமுனிவரைக்கண்டு அவரதுபாதங்களில்வீழ்ந்து பணிந்து இறைவனே யான்செய்தகுற்றத்தைப் பொறுத்தருளவேண்டும் என்று பலவாறுவேண்டினன். ஓ? அரசனே நினக்குஇக்குட்டநோய் வரும்படி சபித்தவன்நானேயாயினும் அதனைஎன்மனசோர்ச்சையாகச் செய்திலேன். எனதாசிரியராகிய அகத்தியமுனிவரது கட்டளைப்படிசெய்தேன். அச்சாபநீங்கியுய்யவேண்டுமானால் அகத்தியமகாமுனிவரது பாதத்திற்சரணடையக்கடவாயாக என்றுவிடைகொடுத்தார். கோபிதாரத்துவசனனவன் அகத்தியமுனிவரது ஆச்சிரமத்தையடைந்து அவரதுபாதங்களில் தண்டாகாரமாய்விழுந்து மனங்கசிந் துருகிப்பணிந்தான்.

அகத்தியமுனிவர் அரசனைநோக்கி மனமிரங்கி, வருதிகோபிதார ரத்துவசமன்னனே? சிவனடியார் நிந்தைசெய்த பெருங்கொடும்பாவத்தால் இச்சாபம்பெற்றனை இதுதீரவேண்டுமாயின் சேரநாட்டிலே ஆமபிராநதிக்குவடகரையிலேயுள்ள சர்ப்பபுரியையடையக்கடவாயாக, அங்குப்பதரிவனத்திலேவசிக்கும் வேதவியாசமுனிவரையடுத்து அவர்கூறுமாறு ஒழுகிப்பிரமதீர்த்தத்திலேமூழ்கிப் பசுபதீச்சுரனைப்பூசிப்பாயாகவென்றுதிருவாய்மலர்ந்தருளிவிடைகொடுப்ப அரசன்வணங்கிவிடைபெற்றுக்கருவூரையடைந்தான். அங்கு, பதரிவனத்திலே அடியார்குழாங்களோடு வீற்றிருந்தருளிய வேதவியாசமுனிவரைக்கண்டு வணங்கியெழுந்து அஞ்சலியஸ்தனாய்நிற்ப அவன்முகநோக்கி வியாசமுனிவரானவர் கோபிதாரத்துவசனே நீ இங்ஙனம் பொலிவழிந்து குட்டநோயால்வருந்தி யடைந்தவாறென்னை என்று வினவக் கோபிதாரத்துவசன்சொல்லுவானாயினான். சுவாமி! அடியேன் செல்வச்செருக்கினாலே சிவனடியார்களாகிய அகத்தியமகாமுனிவர் முதலாயினோரைக்கண்டும் எழுந்து வந்தனை வழிபாடுசெய்யாதிருந்தேன் அதுகண்டு அகத்தியமுனிவர் பிரமிட்டமுனிவரால் இந்நோய்கொண்டுழலுமாறு சபித்தார். அதனால்நேர்ந்த இக்கொடுநோயானது எவ்விதபரிகாரஞ்செய்துந்தீராது அகத்தியமுனிவரையே சரணமடைந்து அவருத்தாரப்படி தேவரீரிடத்து இங்குவந்தேன் என்று விண்ணப்பஞ்செய்ய வேதவியாசரானவர் சிவசிவஎன்று இருசன்னங்களையும் பொத்திச் சிவனடியாரைநிந்தனைசெய்த பாவிகளைக்காணவும் பேசவும் விதியில்லையாயினும் அகத்திய மகாமுனிவரோ பிராயச்சித்தங்கூறி இவ்விடத்திற்கனுப்பிய காரணத்தால் இவ்வரசனைப்புறக்கணித்தலுங் கூடாதெனவெண்ணி, அரசே! எவ்வகைப்பாவங்கள்செய்யினும் அவைகளுக்கெல்லாம் பிராயச்சித்தமுள. குருத்துரோகம், சிவத்துரோகம், சங்கமத்துரோகம், என்னு மூன்று துரோகங்களும் சாற்றருங்கொடிய மகாபாதகங்களாதலின் அவைகள் எவ்வகைச்சாந்திகளாலுந்தீரா நீ அகத்தியமுனிவர் அனுஞைப்படி கருவூரையடைந்தமையால் அப்பாவம் நீங்கு

தற்கு உபாயங்கூறுதும்கேள் தினந்தோறும்பிரமதீர்த்தத்திலே மூழ்கிக் காலைமுதல்மாலை வரையில் பசுபதீச்சுரத்தையும்,வெண்ணெய்மலையினையும், பிரமகுண்டத்தினையும், பிரதக்கணஞ் செய்து, பசுபதிப்பெருமானையும் பூசிப்பாயாக, இவ்வாறு எட்டு நாட் செய்வாயாயின் உய்வாய்என்று திருவாய்மலர்ந் தருளினர்.

கோபிதாரத்துவசன் அவ்வண்ணமேயொழுகி எட்டாநாள் சிவார்ச்சனைசெய்து தோத்திரம்செய்கையில் சிவபெருமான் பிரசன்னராய் அரசன்வேண்டும்வரங்களைக்கொடுத்தருளி மறைந்தார். கோபிதாரத்துவசன் மறுவொழிந்த மணிபோல் விளங்கிச்சின்னாள் கருவூரிலேவதிந்து அப்பால் விசாலையென்னுந் தனதுநகரத்தையடைந்து, அங்குஒருபுத்திரனைப்பெற்று அவன் றேண்மேல் இராச்சியபாரத்தைச்சுமத்திப் பின்னர்க்கருவூரையடைந்து சிவபூசையே நியமமாகச்செய்திருந்து ஈற்றிலே முத்தியடைந்தான்.

---

## பதினைந்தாவது,

## விபண்டகச்சருக்கம்.

அஞ்சாக்கொடியகொலைசெய்விபண்டகனும்வேடனுதிரைநாள்
கஞ்சார்களத்தெம்பெருமான்றன்றிருமேனியிலார்நகைகவரும்
நெஞ்சான்னெருக்கமுண்டிறப்பநிகரில்கைலையடைவித்த
பஞ்சானனனேதிருக்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

யமனையொத்துமாக்களது உயிரையும் பொருளையும் ஒருங்குகவருங்கள்வனாய் வேடுவகுலத்திற்பிறந்த விபண்டகனென்பவனொருவனிருந்தான், இவ்வேடன்செய்யும் வன்கொடுஞ்செய்கைகளை நினைப்பினுங்கூசும். இவ்வாறொழுகுநாளில் மார்கழித் திருவாதிரை மகோச்சவம்வர அவ்வுச்சவத்திற்குச் செல்லும் அடியார்கூட்டத்துடன்சேர்ந்து அவர்களைப்போலச் சிவசின்னந்தாங்கிக் கள்ளவேடம்பூண்டு கருவூரையடைந்து ஸ்ரீநடேசப்

பெருமான்மீ தணிந்திருக்குந் திருவாபரணங்களைக்கவரச் சமயம்பார்த்துக் காத்திருந்தான். அப்பொழுது தாண்டவேசப் பெருமான் சகலவைபவங்களுடனே திருவிழாக்கொண்டருளினார். அக்காலத்திலே விபண்டகனாகிய வேடன் நெருக்குண்டு கீழேவிழ அடுத்து நின்றோர்சிலர் அவனை எடுத்துபசரித்தும் நெருக்கத்தில் துவைப்புண்ட காரணத்தால் இறந்தான். அவனைப்பற்றவந்த யமதூதர்களைத்துறத்திச் சிவகணங்கள் அவனை விமானத்திலேற்றிச சிவபுரத்தை அடைவித்தார்கள்.

## பதினாறாவது,
## நியமச்சருக்கம்.

எற்றுதிரைத்தீம்புனன்மூழ்கியெழுத்தைந்தோதிநீறுபுனைந்
துற்றவனநன்மலர்கைக்கொண்டுயருஞ்சிவபூசனையாற்றிக்
குற்றந்தீரத்திருக்கோயில்சூழுநியமங்கொண்டவர்க்குப்
பற்றுக்கோடாந்திருக்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

நியமமாவது விடியற்காலத்திலெழுந்து ஊர்ப்புறத்துச் சென்று மலசலமோசனஞ்செய்து சவசமுடித்துப்பற்கோலிட்டு வாய்பூசி ஆம்பிரநதிக்கட்சென்று விதிப்படிநீராடிவிபூதி யுருத்திராக்கமணிந்து திருவைந்தெழுத்தைத்தியானித்து நந்தனவனத்துட்சென்று பத்திரபுட்பாதிகளை விதிவிலக்கறிந்தெடுத்துத் திருப்பூங்கூடையிற்பெய்து இல்லத்தின்கட்சென்று சிவபூசைவழாதுசெய்து திருவாலயத்தையடைந்து விதிப்படி பிரதக்கணமாதியசெய்து சிவலிங்கப்பெருமானையும் அம்மை விநாயக சுப்பிரமணியராதிகளையும் விதிப்படி மெய்யன்போடு நமஸ்கரித்துப் புறம்போந்து வீட்டின்கண்ணே விருந்தினர் முதலாயினோரோடும் புசிக்கலாகாதனவிலக்கி யமுதருந்திநண் பகலிலே கண்துயில்கொள்ளாது சிவபுராணசிரவணஞ்செய்து மாலையிலும் சந்தியாவந்தனாதி சிவதரிசனமீறாகச்செய்து போதருவதேயாம். இதனைச் செய்தொழுகுவோர் நித்தியானந்த முத்தியைப்பெறுவது திண்ணம்.

## பதினேழாவது,
## தலமகிமைச்சருக்கம்.

கயிலாயம்மந்தரம்மதுரைகாசிகாஞ்சிபிரயாகை
நயிமிசக்காசேதுவுடனகராங்கருவூரொனுமொன்பான்
செயிர்தீர்நல்லதலங்களுள்ளேசிறந்ததலமாங்கருவூரிற்
பயிலாநிற்போர்க்கருள்பழுத்தபசுபதீசப்பெருமானே.

கயிலாயகிரி-மந்தரகிரி-மதுரை-காசி-காஞ்சி - பிரயாகை-நைமிசாரணியம்-சேது-கருவூர் - என்னும் ஒன்பது தலங்களும் உலகத்திலுள்ள மற்றெல்லாத்தலங்களினுஞ் சிறந்தன. அவற்றுள்ளுங் கருவூர்மிகச்சிறந்தது. கருவூரொழிந்த மற்றெட்டுந் தலங்களையுந் தெரிசிக்கும்பேற்றைக்கருவூர் ஒன்றே எளிதிற் கொடுக்கும், கருவூரிலே சிவபெருமான் திருவாநிலையென்னுந் திருக்கோயிலில் எழுந்தருளியிருத்தலானும், திருநெடுமால்பள்ளிகொண்டிருத்தலினானும் அதனைபாற்கரபுரம்என்ப. மலை, ஆரணியம், நதி, தீர்த்தங்கள், நகரம், திருக்கோயில், என்னும்ஆறு மங்களங்களையு முடைத்தாயிருத்தலின் அதற்கு ஷண்மங்கல க்ஷேத்திரமென்றும்பெயர். அத்தலத்தைச்சுற்றிலும் ஐங்குரோசம்வரையில் பவித்திரமாகையால் அதிலுள்ள சராசரங்களனைத்தும் பரிசுத்தமானவைகளேயாம். இத்தலத்திற்செய்யும் புண்ணியங்கள் மற்றதலங்களிற்செய்வதினும் ஒன்றனந்தமாய் விருத்தியாகும். பாவங்கள்தேய்ந்துபோம். குறுநிலமன்னவர் கொடுங்கோல்செலுத்தி உலகக்கலியின் மூழ்கவருங்காலத்திலே ஆதிப்பெருமானது திருவுருவத்திலே களையான்என்னுஞ்சிதல் படரும். என்று இத்தலமான்மியத்தைச் சூதபுராணிகர் நைமிசாரணியவாசிகளுக்கு உணர்த்தியருளினார். இப்புராணத்தைப் படித்தோர்கேட்டோர் படிப்பித்தோர் கேட்பித்தோர் எழுதினோர் எழுதுவித்தோர் முதலாயினோரும் பேரானந்தப்பெருவாழ்வடைவார்கள்.

## பதினெட்டாவது,

## கருவூர்ச்சிறப்புச்சருக்கம்.

கடிசேர்மதிலுநெடுமாடங்களினுந்தெருவுமாடமிசைக்
கொடியார்கிளையுந்திருக்கோயிற்குலமுமடவார்கொழுனருடன்
குடிசேர்கலனுந்தபோதனர்கள்குழுவும்பல்கிவளமையிலே
படிமீதுயர்ந்ததிருக்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

மிகுந்தசிறப்புற்றோங்கிய சோலைகளாலும் மருதநிலஞ்சூழ்ந்த வளப்பமிகுதியினாலும் இந்திரன்நகரத்துக்கு மேலான எழில்வாய்ந்த கருவூர்நகரமானது அநேக வேதப்பிராமணர்களும், தபோதனர்களும், முடிமன்னர்களும், வணிகர்களும், சூத்திரர்களும், மற்றொழிந்த மரபினரும் தத்தம்மனைவி மகாருடனே தத்தம்வருணாச்சிரமங்களுக்கு விதித்தவிதிப்படி ஒழுகலினாலும், நெல்முதலியனபயிரிடுவோர் செய்யுங்கிருஷிகத்தொழிலினாலும், அரசர்பயிலும் படைக்கலத்தொழிலினாலும், பிறவாற்றானும், ஓசைமலிந்து தனக்கிணையில்லாததாய் விளங்கும்.

## பத்தொன்பதாவது,

## எறிபத்தச்சருக்கம்.

அத்தர்க்காகுமலர்சிதைத்தயானைபாகரோடமையா [ழ்
தொத்திங்கெனையுமடுகவெனவுடைவாள்உளவன்கொடுப்பநெகி
சித்தராகியவ்வானைத்தமதுகளத்திற்செறித்தவெறி
பத்தர்க்கிரங்கியருள்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

உறையூரிலே அரசாக்ஷிசெய்துகொண்டிருந்த புகழ்ச்சோழரானவர் தமதாக்ஷிக்குள்ளாகிய கருவூரிலே மேனாட்டரசாகள் திறையளத்தலைக்காணும்பொருட்டு வந்திருந்தார், கருவூர்த்திருவானிலைநாயகனைத் தரிசித்து வாழ்ந்திருக்குநாளிலே சிவனடியார்களுக்கு இடர்நேர்ந்துழியிம்மெனப்போந்து, இடர் செய்வாரைக் கடியும்பொருட்டு மழுப்படையேந்திய கையையு

டையராகிய எறிபத்தரென்னும் பெரியவரொருவரிருந்தார். அக்காலத்திலே பிராமணகுலத்திற் றோன்றியவராயும், நித்தலும பொழுதுவிடியுமுன்னெழுந்து ஸ்நானஞ்செய்து விதிப்படி நந்தனவனம்புகுந்து திருப்பூங்கூடையிலே பலவிதபத்திரபுஷ்பங்களெடுத்து அதனை இண்டைதொடையல் முதலியமாலைகளாக்கிச் சிவபெருமானுக்குக்கொடுத்து வருநியமமுடையவராயும் இருந்த சிவகாமியாண்டாரென்பவர் தந்நியமப்படி பூக்கொய்தமைத்த பூங்கூடையைக் கோலிற்றூங்கவிட்டு அதனைத் தோளிற் சுமந்து தெருவீதியிலே செல்லாநின்றார். அன்றுமகாநவமி யாகையால் நகரமலங்கரிக்கப்பட்டிருந்ததுமன்றிப் புகழ்ச்சோழரது பட்டவர்த்தனமென்னும் பெயரியயானையானது அலங்கரிக்கப்பட்டுப் பாகர்களுடன் தெருவிற்பவனிவராநின்றது. அக்காலையில் அவ்வியானைக்குச் சிவகாமியாண்டார் எதிர்ப்பட யானை அவரதுதோளிற்கிடந்த திருப்பூங்கூடையைப்பறித்து அதனுள்ளிருக்குமலர்களைச் சிந்திச்சிதறிவிட்டுத் தெருவிற்போயது சிவகாமியாண்டார் அதனுடன்தொடர்ந்து பற்றலாற்றாது சிவதா? சிவதா? என்றுமுறையிட்டனர். அதுகேட்டுவந்த எறிபத்தர் அங்குநிகழ்ந்தனவற்றைச் சிவகாமியாண்டாருணர்த்தவுணர்ந்து மழுப்படையோடு யானையின்முன்னர்க்குதித்து அதனதுதுதிக்கையைத்துணித்து வீழ்த்தினர். பட்டவர்த்தனமென்னும் யானை அலறிக்கீழேவிழுந்து மாய்ந்தது. அதன்மேற்கொண்டிருந்த இரண்டுபாகரையும் அதனயலில்வந்த மற்றிருவரையும் தடிந்து வீழ்த்தினர். அதனைக்கண்ட சிலரோடி பட்டவர்த்தனம்பட்டதென்று அரசருக்கறிவிக்க அரசர் அதுமாற்றலரானிகழ்ந்ததாகவெண்ணிச் சிம்மாசனத்தினின்றுமிழிந்து ஒருபரிமீதேறி யானைபட்டகளத்தையடைந்தார், அங்குப் பகைவராவார் யாவரையுங்காணாது தமதுடல்பொருளாவி மூன்றினையுமடிமைபடைத்துடைய சிவனடியார் நிற்பக்கண்டார். உடனே பரியினின்றுமிழிந்து சிவனடியாரது பாதங்களிலேவீழ்ந்துவணங்கி சுவாமி! அடியேன் றீரவிசாரியாமையால் இவ்வழியடைந்தேன் தேவரீர் செய்கையென் றுணரப்பெற்றிலேங் குவருவேனல்

லேன். யானைசெய்த சிவாபராதமென்னையோ அதுவுமுணர்ந்தி லேன் என, எறிபத்தர் அரசரே சிவகாமியாண்டார் சிவபெரு மானுக்காகக் கொணர்ந்த செழுமலரை இவ்வியானைபறித்துச் சிதறியது. பாகாமுதலாயினோர் அதுகண்டும் விலக்காதொழிந் தார்கள். ஆதலின்யானையையும் பாகரையுந்தடிந்தேன் என்று கூறினர். புகழ்ச்சோழர்மீட்டும்வணங்கி அடிகளே! இப்பெருங் கொடுஞ் சிவாபராதத்திற்குக் காரணஸ்தன்யான். என்னையுங் கோறல்அமையும். தேவரீர் கையிலுள்ள மழுப்படை மிகப்பரி சுத்தமானதாகையால் அதுபாவியாகியவடியேனைச் சிதைத்தற் கொல்லாது. எனதுடைவாளைத் தருகின்றேன் அதுகொண்டு என்னைத்தடிந்து குற்றந்தீர்த்தல்வேண்டுமென்று மொழிந்து உடைவாளைக்கொடுப்ப எறிபத்தர் அரசரது திருவுள்ளக்கிடை யையுணர்ந்து வாளைவாங்காதொழியின் அரசிறந்து படுமென் றுணர்ந்து கருணையோடு வாளைவாங்கினர். அரசர் உய்ந்தேன் உய்ந்தேனென்று மகிழ்ந்து குவிந்து நின்றனர். வாளைவாங் கிய எறிபத்தர் வேறுஒன்றுஞ் செய்தற்குத் தோற்றாதவராய்த் தமதுகளத்தை யீருதலேதுணிபென்றுதுணிந்து களத்திடை வாட்பூட்டி அரியலுற்றார். அதனைக்கண்ணுற்ற புகழ்ச்சோழர் மிகவும்அஞ்சி எறிபத்தரது திருக்கரத்தைப்பற்றிக்கொள்ள எறி பத்தரும் விடாராய்க்களத்தைக்கொடுப்ப இவ்வன்பர்களதுஅன் புக்கிரங்கி ஆகாயவாணியானது அன்பர்காள் உங்களது மெய் யன்பினையுலகமறிந்துய்யுமாறு இந்நிகழ்ச்சி நிகழ்ந்தது; என்று எழுந்தது. அக்காலையில் எறிபத்தர் புகழ்ச்சோழரென்னு மிர ண்டுண்மை நாயன்மார்களும் ஒருவரையொருவர்வணங்கி யிரு வரும் ஆகாயவாக்கைவணங்கிச் சிறந்தார்கள். உடனேபட்டி றந்தயானையும் பாகரும் உயிர்பெற்றெழுந்தார்கள். சிவகாமியா ண்டாரது திருப்பூங்கூடையும் புஷ்பங்களால்நிரம்பிற்று. தேவ துந்துமியார்த்தன. தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்தார்கள். அடியார்கள் ஆரவாரித்தார்கள். இவ்வற்புதம் நிகழ்ந்தபின்னர்ச் சின்னாள் எறிபத்தர்சிவத்தொண்டுசெய்திருந்து முத்திபெற்றார்.

## இருபதாவது,

## புகழ்ச்சோழச்சருக்கம்.

காய்ந்தசுடர்வேற்புகழ்ச்சோழர்கண்ணூர் றுதலோனடியார்கள்
வேய்ந்தசடையாதிகளிடத்துமெய்யன்புடையார் பெரும்போரி
ன், மாய்ந்ததலையொன்றினிற்சிறுபுன்சடைகண்டயர்ந்துவளர்த்
தெரியிற், பாய்ந்துகதிபெற்றிடுங்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

வளவர்பிரானாகிய புகழ்ச்சோழரானவர் கருவூரிலே அழகிய அத்தாணிமண்டபத்திலே அமைச்சர் முதலாயினோர்சூழக் கொலுவீற்றிருக்கையில் மேற்குநாட்டரசர்கள் வரிசை வரிசையாகவந்து திறையளத்தலைக்கண்டு மகிழ்ந்து அமைச்சர்களை நோக்கி மேற்றிசையிலே இன்னும் நமக்கடங்காத வேந்தர்களுமுளரோவென்று வினவினார். அமைச்சர்கள்வணங்கி ஆண்டவனே! மலையரணமுடைய அதிகனென்பானொருவனிருக்கின்றான் என, அங்ஙனமாயின் அவனோடுயுத்தஞ்செய்து வெற்றிபெற்று வருவீர்களாகவென்று மந்திரிகளுக்கு விடைகொடுத்தார். விடைபெற்ற மந்திரிகள் இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளோடுஞ்சென்று அதிகனது நகரத்தைவளைந்துகொண்டார்கள். அதனைஅதிகனுணர்ந்து தனது சேனையோடெதிர்த்துப்போராடினான். கடைசியாக அதிகன்போருக்குடைந்து புறங்காட்டியோடியொளித்தான். வெற்றியடைந்த அமைச்சர்கள் அதிகனதுநகரத்துட்சென்று பற்பலவளங்களையுங்கவர்ந்து படுகளத்திறந்த பகைவர்சிரங்களைப்பொதிகளிலேற்றி அரசர் பெருமான்முன்னர்க்கொணர்ந்தார்கள். அவர்கள் கொணர்ந்தபகைவர் படையின் றலைக்குவியலை அரசன்நோக்குழி ஓர்தலையில் சிறியசடையொன்றிருத்தலைக்கண்டார் ஆகெட்டேன் சிவனடியார்களைக்கொன்று பழிபூண்டேனேஎன்று மிகவும் வருந்தினார். அடிக்கடி அத்தலையை நோக்கிநோக்கிக்கண்ணீர்சொரிந்தார். இப்பழியை யான் தீக்குழித்தொழித்தாலல்லது நீக்குதலரிதுஎன்று தீர்மானித்தார். அமைச்சர்கள் அண்ணலே இதனை மனுநூல் வழிப்பிராயச்சித்தஞ்செய்தொழித்த லமையாதோ

இதற்காகத் தேவரீர்பிராணத்தியாகம் செய்தல்வேண்டுமோ என்றுவணங்கிக்கூறப் புகழ்ச்சோழர் சிவனடியார்களைச் சிதைத்ததோடத்திற்குப் பரிகாரமுமுளவோவென்று மறுத்து புத்திரனுக்கு இராச்சியபட்டாபிஷேகம்செய்யக் கற்பித்துத் திருவாலயத்திலே அக்கினிக்குண்டம சமைப்பித்து வெட்டுண்டசடைத்தலையை நல்லபொற்றும்பாளத்திலேவைத்து பட்டினுலேயலங்கரித்து அதனைத்தமதுமுடிமேற்றாங்கித் திருவாலயத்துட்போய்த் திருவாணிலையுடையானை வலம்வந்து அக்கினியிலேமூழ்கினார், தேவதுந்திமிமுழங்கத் தேவர்கள் புஷ்பமாரிபெய்யப் புகழ்ச்சோழரானவர் சிவபெருமானது ஸ்ரீபாதாரவிந்த நீழலையடைந்தார.

---

## இருபத்தோன்றாவது,

# கருவூர்த்தேவர்கதிபெறுசருக்கம்.

வரமார்கருவூர்த்தேவரொனுமெளனசிவயோகியர்வேதச்
சிரமாரிசைப்பாபலமொழிந்துசிவத்தானங்கள்பலவணங்கிக்
கரமார்நெல்லியெனச்சித்திகாட்டிவதியவவர்க்குமுத்திப்
பரமானந்தந்தருங்கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

கருவூர்த்தேவரானவர் கருவூரிலே மறையவர்குலத்திலே பிறந்தவர். இவர் உலகாயுதமுதலியபலசமயங்களையும் நன்காராய்ந்துணர்ந்து சைவசமயமேசற்சமயமென்றுதேறி அதன்வழியேயொழுகுவாராயினார். வேதம் ஆகமமென்னும் முதனூல்வல்லோராய் வைதிகசைவந்தழைத்தோங்கத் திருவிசைப்பாபாடியருளினார். இவர் சிவயோகங்கைவந்த சித்தராகையால் எச்சமயங்களிற்சென்றாலும் எத்தொழில்புரிந்தாலும் மாதவஞ்செய்தாலும் மாதர்பாலிருந்தாலும் தாமரையிலையினீர்போல் பற்றற்றிருப்பர். இவர் திறத்தையுணராத புன்மதியினராகிய பிராமணர் சிலர்கூடி இவர் மதுவுணருந்தும் வாமமார்க்கத்தவரென்று இகழ்ந்தார்கள். அவர்களைத்தெருட்ட நினைத்து அவர்

கள்காண அகாலத்திலே மழை வருவிக்கச்செய்தும், நதிபெருகிவரப்பணியும், சிவபெருமானது திருக்கோயிற்றிருக்கதவந்தான் திறக்கச்செய்தும், பூதங்கள் குடைபிடித்துவரக்கற்பித்தும், இவ்வாறுபல அற்புதங்கள்செய்தனர், மலைகளிலும் வனங்களிலும் சஞ்சரித்தனர். பற்பலநாட்டகத்துஞ்சென்று சிவதெரிசனம் செய்யக்கருதி, கொங்குநாடு, குடநாடு, கன்னடம், துளுவம் மகதம் கோசிகம் கோசலம் உஞ்சை அவந்தி சாளக்கிராமம் மாளவம் ஆரியம் மராடம் குருக்கேத்திரம் இலாடம் அயோத்தி ஏமாங்கதம் கவுடம் பல்லவம் மத்தியம் முதலிய தேயங்களிலும் அவற்றை யடுத்தவனமுதலியவைகளிலும் சென்று காசி காஞ்சி காளத்தி அருணைசலம் முதலிய பலதலங்களையும் சிதம்பரமுதலியதலங்களையும் தரிசித்துப் பாண்டிநாட்டையடைந்து மதுரைமுதலிய தலங்களைவணங்கித் தாம்பிரவர்ணி நதிதீரத்திலே குருகூரென்னும் வைணவாலயத்தையடைந்தார். அப்படியவரடையுமுன்னரே திருமாலானவர் அடியார் கனவிற்றோன்றிக் கருவூர்ச்சிவயோகியார் இங்குவருகின்றார் அவர்க்கெதிசென்றுபசரியுங்கள் என்றருளப் பாகவதர்கள் பரிவாரங்களோடு எதிர்சென்றுவணங்கி ஆசீர்வதிக்கப்பெற்றார்கள். அங்குநின்றுந் திருச்செந்தூரைவணங்கி கன்னியாகுமரியையடைந்து குமரிதீர்த்தமாடிச் சுசீந்திரத்தைப்போற்றித்திருநெல்வேலியையடைந்தார். நெல்லையப்பரை யன்போடழைக்க அவர் அன்பர்பெருமையை யுலகிற்கறிவுறுத்துமாறு வராமற்றூழ்ந்தார் ஈசனிங்கில்லாமையால் நல்லோர்குறைந்து நகரம் எருக்கெழக்கடவதென்று சபித்தனர். சிவபெருமான் அடியார்களைக் கருவூர்த்தேவரிடத்துத்திரண்டுவரும்படி ஆஞ்ஞாபித்துத்தாமவருக்கெதிர்தோன்றி அநுக்கிரகித்தருளினர். கருவூர்த்தேவர் ஆநந்தக்கடலில் மூழ்கினவராய்த் திருவிசைப்பாபாடித்துதிசெயதார் அப்போது சிவனடியார்களும்வந்து வணங்கி அவர் முன்னரிட்டசாபம் நீக்கியருளப்பெற்றார்கள். அதன்மேற்கே ஒருகுரோசதூரத்தில் ஒருசிவலிங்கத்தைக்கண்டு யோகியார் தழுவ அவ்விலிங்கங்குழைந்தது. அங்குநின்றுந் திருப்புடைமருதூரை

யடைந்து சிவபெருமானை யழைத்தபொழுது கன்றின்குரல் கேட்ட பசுவைப்போல ஓலஓலவென்றருளி எதிர்வந்து காட்சி கொடுத்தருளினர். அங்கு திருவிசைப்பா பாடிப்பணிந்தார். அங்குநின்றுங் கசேந்திரமோட்சமென்னும் விஷ்ணுவாலயத் யடைந்து, அப்பால் முன்றீசரைவணங்கி அழைத்தார் அவர் எதிர்தோன்றி வேண்டுவதென்னையென, மதுவேண்டுமென்ன அவர் காளியைநோக்கிக் கருவூர்த்தேவருக்கு மதுக்கொணர்ந்து தருப்படிபணித்தருள, காளி மதுவைக்கொணர்ந்தாள். இதனை யுணர்ந்த காளி கோட்டவாசிகளாகிய கருமயோகிகள் கருவூர்த் தேவரையடுத்துவணங்கத் தேவர் அவர்களைநோக்கி மீன்கொணரும்படி கூறினர். அவர்கள்போய்த்தேடியும் அகப்படாமல் கருவூர்த்தேவர்பால் விண்ணப்பஞ்செய்ய அருகேயிருந்த ஒரு வன்னியரத்தைநோக்கி மீன்வருஷம் வருஷிக்கும்படி கட்டளையிட அவ்வாறே வருஷித்தது. கருவூர்த்தேவர் கருமயோகிகளை நோக்கி நீங்கள் இவ்வாறு செய்யலாற்றாது மயங்கி மதுபானுதிகள் செய்துழலுவதென்னையென்று அறிவுறுத்த அவர்கள் முத்திநெறி யடையும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று வேண்ட அவர்களைப் பொதியமலைக்கு வரும்படி யுத்தரவு செய்து அருகிலுள்ள ஒருவிஷ்ணுவாலயத்தையடைந்து அவரைவிளித்தும் அவர் வாராமையால் அவருக்குப் பூசையற்றுப் போகவெனச் சபித்தார். அங்ஙனமேயாயது. பின்னர்த் திருக் குற்றாலஞ், சென்று திருவிசைப்பாபாடியருளிப் பொதியமலையையடைந்து அகத்தியனாைத்தரிசித்து அங்கொருசார் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது தஞ்சையிலே சோழராஜனால் சமைக்கப்பட்டஒருபெரியஆலயத்திலே சிவப்பிரதிஷ்டைசெய்யப்பலவாறு முயன்றும் மருந்திளகிப் பந்தனமாகாது வருந்தினன். கருவூர்த்தேவர்வந்தாலல்லது காரியம்சித்தியாகாதென்று ஆகாசவாக்குப்புறப்பட்டது. அங்கிருந்த பெரியோர்களுள் உருவமறைத்தெழுந்தருளிய போகநாதரானவர் கருவூர்த்தேவருக் குக்காக்கையின்காலிற்கட்டி ஓலைவிடுத்துக் கருவூர்த்தேவரை வரவழைத்தார். கருவூர்த்தேவர் அங்குவந்திருந்த போகநாதர்

பல்லைப்பிதுங்கிப் பருந்தாட்டமாட்டிப் பகைவர்முன்னே
அல்லும்பகலு மடிப்பேன்கவி யிருப்டாணிகொண்டே.

என்று சொல்லினன். இலேசங்கொண்டு அவனை அப்புறப் படுத்தி, வேறொருவனை அழைப்பிக்க, தச்சன் வந்து நிற்க அவனை நீயாரென்ன,

கட்டளைக்கலித்துறை.

சொன்னசந்தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்னசந் தக்கவி யேதென்றபோதி லெதிர்த்தவரை
வன்னசந்தங்கெட வாயைக்கிழித்திந்த வாய்ச்சியினால்
கன்னசந் தங்கங் களிற்கவி யாப்பைக்கடாவுவனே.

என்றனன். வருத்தமுற்று, அவனை அடுத்து நின்றவனை யழைக்க, வண்ணான் வந்து தைரியமாக நின்றான். நீ யாரடா என்று செருக்காகக்கேட்க,

சேலேய்விழிமடவாரிற் செங்காலன்னஞ்சேர்பழனப்
பாலேய்மணவயிற்கூத்த நின்போலியர்பாப்புனைந்த
நூலேய்துகளறத்தூய் தாக்குரோன்மைநுவல்வதல்லால்
மேலேய்தமிழ்ப்புலவோ ரென்னையென்னைவிளம்புவதே.

தான் வண்ணானும், ஒட்டக்கூத்தர் கைக்கோளருமாதலால் பாப்புனைந்த துகளற எனச்செய்யப்பட்ட நூல்களிலுள்ள குற்றங்களற எனவும், பாவோட்டி நெய்த வஸ்திரத்திலுள்ள மாசு நீங்க எனவும் சிலேடைபடக்கூறினன். அதுகேட்டு இவன் யாவரிலுங் கெட்டவனென்று அப்புறப்படுத்தி அவனுக்கயலில் நின்றவனை அழைக்க, வேளாளன் ஒழுக்கமாகவந்து எதிரே நின்றான். அது கண்டு ஒட்டக்கூத்தர் பெருங்கவிஞர்கள் முன் சிறுகவிஞர்கள் வந்து நிற்பது தகுதியோவென்றனர். கேட்ட வேளாளன்.—

கோக்கண்டுமன்னர்குறை கடல்புக்கிலர்கோகனகப்
பூக்கண்டுகொட்டியும் பூவாதொழிந்திலபூதலமேழ்
காக்கின்றமன்னகவி யொட்டக்கூத்தநுங்கட்டுரையாம்
பாக்கண்டொளிப்பர்களோ தமிழ்பாடுறுபாவலரே.

என்றுகூறி, இவனை இம்மட்டிலே விடுதல் தகுதியன்றென்றுகருதி, நீர் சோழராசன்மேற்பாடிய அண்டத்துப்பரணி

யென்னும் நூலில், இவ்வண்டத்தையேநகரமாகவும், சக்கர வாளகிரியையே மதிலாகவும், அதற்குட்புறத்துள்ள கடல்களை யே அகழாகவும்; பூமி நடுவிலுள்ள மகமேருவையே கோட் டைக்கொடிக்கம்பமாகவும், உருவகப்படுத்தி வருணித்திருக் கிறீரோ அகழ் மதிலின்புறத்திலன்றோ இருக்கவேண்டும். அகத்திலிருப்பதாகக் கூறியது குற்றமன்றோ? பெரும்புறக் கடலையே அகழெனக்கூற மறந்தீர்போலும். கவிச் சக்கரவர் த்தியாகிய கம்பநாடர் அயோத்தியா நகரவருணனையில்,

கலிவிருத்தம்.

நேமிமால்வரைமதி லாகநீள்புறப்
பாமமாகடல் கிடங்காகப்பன்மணி
வாமமாளிகை மலையாகமன்னற்குப்
பூமியுமயோத்திமா நகரம்போலுமே.

என்றசெய்யுளைப் பார்த்ததும், கேட்டதும் இல்லையோ என்றான். அந்தமட்டிலே அக்கினிதேவனுக்கு அபிடேகஞ்செ ய்தாற்போல ஒட்டக்கூத்தர் முகங்கருகி வாளாவிருந்தனர்; அவரைப்பிடித்திருந்த அகங்காரத்துட்டப்பேயோ விட்டுத் தொலைந்தது. நமக்குச்சம்பவித்த இந்தமானக்கேடெல்லாம் புகழேந்தியால் சம்பவித்ததென்று உணர்ந்துகொண்டு, மற்ற கவிஞர்களையும் வரவழைத்து அவர்கட்குத்தக்க பரிசுஅரசனை க்கொண்டு கொடுப்பித்து, அவர்கள் யாவரையும் தங்கள் தங் கள் இருப்பிடஞ்சேரும்படி செலவு கொடுத்தனர்.

இச்செய்திகள் யாவும் பரிசாரகப்பெண்களால் சோழன் மனைவிகேள்வியுற்றுப் புகழேந்திப்புலவரை இன்னும் அரசன் சிறையினின்றும் விடுதல் செய்யவில்லை என மனவருத்தமுற் றுப் பள்ளியறைக்குத் தன்நாயகனாகிய சோழராசன் வரும் போது வீட்டுவாயிற் கதவைச்சார்த்தித் தாழ் பூட்டிக்கொண் டாள். தான் பற்பல இனிய மொழிகளைக்கூறியுந் திறவா மையால், அரசர்கள் தங்களுக்கும் தங்கள் மனைவிமாருக்கும் ஊடல்முதலியன நிகழ்ந்தபோது தங்கள்பா லுள்ள புலவரைக்

கொண்டு தீர்த்துக்கொள்ளுதல் வழக்கமாதலால் இவளுடைய துனியைத்தீர்க்கும்படி ஒட்டக்கூத்தரை அனுப்பினன். அவர்போய்,

நானே யினியுன்னை வேண்டுவதில்லை நளினமலர்த்
தேனேகவாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய விரவிகுலாதிபன் வாசல்வந்தால்
தானே திறக்கு நின்கைத்தலமாகிய தாமரையே.

என்ற கவியைக்கூறினர். அவர்பாடலைக்கேட்ட உடனே மிகுதியுஞ் சினங்கொண்டு ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாளென்று மற்றொரு தாழ்ப்பாளும் போட்டாள். ஒட்டக்கூத்தர் உடனேவந்து அரசனுக்கு அதைத்தெரிவித்தனர். நம்முடைய மனைவிக்குயாதொருவழுவுதலு மின்றி வேண்டியதை வேண்டியபடியே நடத்திவருகையில், இப்படிப்பட்ட துனியுண்டாவதற்கு என்னிமித்தமெனத் தனக்குள்ளே எண்ணிப் புகழேந்திப்புலவரைச் சிறையில் வைத்திருக்கின்றோமே இதுவே யாமெனத்துணிந்து,சிறை நீக்கித் தன்மனையாளுடைய துனியைத் தீர்க்கும்படி அனுப்பினன்; அவரும் அவ்வாறேசென்று:—

இழையொன் றிரண்டுவகிர்செய்தநுண்ணிடையேந்தியபொற்
குழையொன்றிரண்டுவிழியணங்கேகொண்டகோபமென்னோ
மழையொன்றிரண்டு கைம்மாறுபரணனின் வாசல்வந்தால்
பிழையொன்றிரண்டு பொறாரோகுடியிற் பிறந்தவரோ.

என்ற கவியைக்கூறினர். இக்கவியைக் கேட்டவளவில் மனமகிழ்ந்து சோழன்மனைவி துனிதீர்ந்தனள். அதுமுதல் சோழராசன் புகழேந்திப்புலவரை மேம்பாடாகவே தன்னுடைய சமத்தானத்தில் வைத்துக்கொண்டு பரிபாலித்து வந்தனன். ஆயினும் ஒட்டக்கூத்தர் முன்தம்மைச் சிறையில் அடைவித்ததையும் இப்போதுந் தம்மேல் பொறாமையா யிருப்பதையுந் தெரிந்துகொண்டு, அக்கருத்தை அரசனுக்குத் தெரிவிக்காமற்சென்று உறையூரைச்சார்ந்த மள்ளுவமென்னும் ஒருசிறிய நாட்டில் முரணூரிலிருந்த சந்திரன் சுவர்க்கியென்னும் அரச

னிடஞ்சேர்ந்து, அவனுடைய வேண்டுகோளால் நளவெண்பா வாகிய நூலைச்செய்து தக்க பரிசுபெற்று வாழ்ந்திருந்தனர்.

சிலநாள் கழிந்த பின்னர்க் குலோத்துங்கச்சோழன் புகழேந்திப்புலவர் நளவெண்பா நூலைச்செய்து மூராணநகரில் சந்திரன்சுவர்க்கி யென்பவனால் ஆதரிக்கப்பட்டிருக்குஞ் செய்தியைக் கேள்வியுற்று, அதிமரியாதையோடு அவரை வரவழைத்துத் தன்னுடைய சமூகத்தில் பிரசங்கிக்கும்படிக்கேட்டுக்கொண்டனன். அவரும் ஓமென ஒத்துக்கொண்டு, கம்பநாடர், ஔவையார், ஒட்டக்கூத்தர் முதலிய தமிழ்ப்புலவர்கள் முன்னிலையில் உபந்யாசஞ் செய்கையில்.—

மல்லிகையே வெண்சங்கா வண்டே வான்கருப்பு
வில்லிகணை தெரிந்து மெய்காப்ப - முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்லநடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

இப்பாடலைச்சொல்லும்போது, ஒட்டக்கூத்தப்புலவர் மல்லிகையரும்பைச்சங்காகவும், வண்டைச் சங்கூதுஞ்செய்பவனாகவுங் கற்பித்தது உசிதமே. சங்கூதுவோன் அதன் அடியை யன்றோ வாயில்வைத்து ஊதுவான் அப்படி வண்டு அம்மலரின் அடிப்புறத்தி லூதுகிற தில்லையே ஆதலால் இந்தவருணனை குற்றமென்றார்.

உடனே கம்பநாடர் புகழேந்திப்புலவரை நோக்கிக் கண்சைகை செய்தனர். அதையுணர்ந்துகொண்டு புகழேந்தியார் கட்குடியனுக்குச் சூத்தென்றும் வாயென்றுந் தெரியுமாவென்றார். அப்புறம் மேலுள்ள பாடல்களைச சொல்லிப்பொருள் சொல்லுகையில்.—

செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன்பொதிந்துநின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாய்த் றெரிந்து.

இச்செய்யுளில் ஒட்டக்கூத்தர் நீர் விண்மீன்கள் அடர்ந்த வானததைத் திங்கட்சுடர்பட்டுக் கொப்புளங்கொண்ட

குளிர்வானென்றது வியக்கத்தக்கதே; அக்கொப்புளத்திலிருந்து சீயாவது சிலைநீராவது வடியுமே அது யாதோவென க்குசேர்த்தியமாய்க் கேட்க, புகழேந்தியானவர் சீவடியவில்லை சிலைநீர் வடிவதுண்டு அது தான் பனியென்றார். இவ்வாறு அவர் செய்யும் துராட்சேபங்களுக்கெல்லாம் உத்தரஞ்சொல்லி அவர் நாவையடக்கினர். கம்பநாடரும் ஔவையாரும் புகழேந்திப்புலவர் சார்பாகவே சார்ந்து புகழ்ந்தனர்கள்; அரசனும் புகழேந்திப் புலவருக்குத தக்க பரிசுகொடுத்தனன்.

ஔவையார் சோழனுடைய சபையினிடத்தில் தாம் இரண்டுகால்களையும் நீட்டிககொண்டு உட்கார்ந்திருப்பார். அக்காலையில் கம்பநாடர் அங்கு வருவாராயின் அவர் வரவைக் கண்டமாத்திரத்தில் இரண்டு கால்களையும் முடக்குகிறதும், புகழேந்திப்புலவர் வருவதைக்கண்டால், வலக்காலையும், சோழனைக்கண்டால் இடக்காலையும் முடக்குகிறதும், ஒட்டகூத்தனைக் கண்டால் இரண்டு காலையும் நீட்டுகிறதும் வழக்கம். இதைப் பலமுறை ஒட்டக்கூத்தர் கண்டு, இந்த ஔவையானவள், சிறந்தவராகிய கம்பநாடருக்கும், உனக்கும் செய்யும் மரியாதையைப்பற்றி யான் ஒன்றும் சொல்லவில்லை. புகழேந்திக்கு வலக்கால் முடக்குகைக்கும், எனக்கு இருகாலேயும் நீட்டியபடியிருத்தலுக்கும் யாதுகாரணம்? இதை நீ ஔவையினிடத்தில் கேட்டறியென்று சோழராசனிடத்தில் ஒட்டக்கூத்தர் சொல்லிக்கொண்டனர். அவ்வாறு ஔவையார் செய்வதைச் சோழராசனுங்கண்டு எம்பெருமாட்டியே ஒட்டக்கூத்தரும், புகழேந்தியாரும் ஒத்த புலவர்களாயிருக்க ஒட்டக்கூத்தருக்கு இரண்டு காலையும் நீட்டியபடியிருத்தலும், புகழேந்தியாருககு வலக்காலை முடக்கலும் உமக்குத் தகுதியன்றேயென்றனன். நான் செய்வது தகுதிதானென்றுசொல்லி, இருவரையும் அழைத்துத் தமது கையால் சில குறிகளைக்காட்டி, இவற்றிற் கிணங்க ஒரு வெண்பாச்செய்யாரென்று ஒட்டக்கூத்தனைக் கேட்க, உடனே,—

இவ்வளவு கண்ணிணை யிவ்வளவு சிற்றிடையாள்
இவ்வளவே பேர்ந்த விளமுலையாள் - இவ்வளவு
னைந்தவுடலா ணலமேவு மன்மதன்கை
ஐந்துகணை யால் வாடுவாள்.

என்று பாடினர். அப்புறம் புகழேந்திப் புலவனைப்பார்க்க, அவர் உடனே,—

ஐயமிடு மினறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே யாயினுநீ ரிட்டுண்மின் — தெய்வம்
ஒருவனேயென் றுள்ளுணர வல்லீரேல்
அருவினைகளைந்து மறும்.

என்று கூறினர். சோழனை நோக்கி இவ்விருவருடைய கருத்தும் இன்னவென்று தெரிந்துகொண்டாயாவென்று கூறி, மீண்டும் அவ்விருவரையும் நோக்கி, அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தத்தினிறுதியடியில் திங்களின்பெயரிலொன்றுபொருள் வேற்றுமையாய மூன்றுமுறைவரப்பாடுகவென ஒட்டக்கூத்தர் —

வெள்ளத்தடங்காச் சினவாளை வேலிக்கமுகின் மீதேறித்
துள்ளிமுகிலைக் கிழித்துமழைத் துளியோடிறங்குஞ் சோணாடா
கள்ளக்குறும்பர் குலமறுத்தகண்டா வண்டர்கோபாலா -
பிள்ளைமதிகண் டெம்பேதை பெரியமதியு மிழந்தாளே.

என்றனர். கேட்டஔவையார் ஒட்டா ஒருமதிகெட்டா வென்றனர்.

உடனேபுகழேந்திப்புலவர்,

பங்கப்பழனத் துழுமுழவர் பலவின்கனியைப் பறித்ததென்று
சங்கிட்டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண்டெறியுந் தமிழ்நாடா
கொங்கைக்கமரா பதியளித்த கோவேராச குலதிலகா [டா
வெங்கட்பிறைக்குங் கரும்பிறைக்குமெலிந்தப் பிறைக்கும்வே
[ல்விழியே.

என்றனர். இக்கவிகளைக்கேட்டு இவ்விருவருக்குமுள்ள தாரதம்மியத்தை இன்னமும் நீ உணர்ந்திலையோ வென்று சோழராசனைக்கேட்டனர். அரசன் ஒன்றும்பேசாமலிருந்து விட்டனன். ஒட்டக்கூத்தர் [illegible]

நாணத்தைப் பொறாதா எண்ணாமல், புகழேந்திப் புலவருடைய கல்வித்திறத்தைத் தமக்குள்ளே வியந்துகொண்டு, ஒருநாள் இராத்திரி படுத்திருக்கையில் அவர்மனைவி போசனகாலமாகிறதென்றாள். ஆயினும் நான்புசியேனென்றார். சர்க்கரை சேர்ந்தபால்கொண்டு வருகிறேனென்றாள். அதுகேட்டு, சர்க்கரையோடு சேர்ந்தபாலன்று புகழேந்திசெய்த நளவெண்பாவில் நாலைந்துபாடலை எடுத்துப் பிழிந்து அந்த இரசத்தைக் கொண்டுவந்தாலும். உண்ணேன்போவென்றார். தம்மையும், தம்முடையபாடலையும் வியக்காமையால் ஒட்டக்கூத்தரைக் கொல்ல வெண்ணித்தற்செயலாய் அன்றுவந்து ஒளித்திருந்த புகழேந்திப்புலவர், பொருக்கென வெளிப்பட்டு நின்று, அவர்பாற்கொண்ட பகைமையைவிட்டுச் சிநேகத்தைப்பாராட்ட, அவரும் மனமொத்து நட்புப்பாராட்டினர். குலோத்துங்கச் சோழனும் இச்செய்திகேட்டு மனமகிழ்ந்து அவ்விருவரையு நோக்கி, நெய்த்தானமென்னும் தலத்தி லெழுந்தருளியிராநின்ற சிவமூர்த்திமேல், நெய்த்தானத்தானைச் சேவித்தே என்பது கடைசியாக எண்சீர்க்கழிநெடில் வண்ணவிருத்தம் பாடும்படிக்கேட்க, ஒட்டக்கூத்தர்.

விக்காவுக்கா வித்தாவிப்போய்
 விட்டானட்டார் சுட்டேர்புக்கார்
இக்காயத்தாசைப் பாடற்றே
 யிற்றேடிப்போய் வைப்பீர்கிற்பீர்
அக்காடப்பேய் தொக்காடச்சூ
 ழப்பார்ட்டத்தீ வெப்பாடப்பூண்
டெக்காடக்கா னத்தாடப்போ
 நெய்த்தானத்தா னைச்சேவித்தே.

என்று பாடினர்.—புகழேந்திப்புலவர்.

கற்கோலிப் பூசற்பாசத்தே
 தப்பாமற் சாகைக்கேகிற்பீர்
முற்கோலிக் கோலிப்பாவித்தே
 முட்டாமற் பூரித்தேகிற்பீர்
வற்றாநெட்டோடைப் பாரைச்சேல்
 மைப்பூகத்தேறித் தாவிப்போய்
நெற்றாளூற்றாலைப் பாகிற்சேர்
 நெய்த்தானத்தா னைச்சேவித்தே.

என்றுபாடினர், மற்றொருகாள திருக்குறுங்குடியென்னுந்தலத்தில் எழுந்தருளி யிராநின்ற எம்பெருமான் மேல்வல்லோசையுள்ள கட்டளைக்கலித்துறை பாடும்படி அரசன் கேட்டுக்கொள்ள, ஒட்டக்கூத்தர்,

இக்குளெட்டுக் கயந்துக்கமுற்றுத் திடுக்கிட்டலற
மைக்கடற்குட் சரங்தைக்கவிட்டோற் கிடமாமதுர
இக்குமுற்றிக் கணுச்சற்றுவிட்டுத் தெறித்திட்ட முத்தைநக்
கொக்குமொக்கிக கக்கிவிக்குமச் சோலைக்குறுங்குடியே.

என்றொருபாட்டும், புகழேந்திப்புலவர்,

எட்டெழுத்தைக் கருத்திற் குறித்திட்டு நித்தம்பரவும்
சிட்டர்கட்குத் திருப்பொற்பதத்தைச் சிறக்கத்தருமவ்
வட்டநெட்டைப் பணித்தற்பதித்தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத்துக் குலதைத்திமுத்தீனுங் குறுங்குடியே.

என்றொருபாட்டும் பாடினர்கள், குலோத்துங்கச்சோழன் உள்ளங்களித்து இருவருக்கும் சர்வோபசாரங்களையுஞ் சமமாகவே நடப்பித்துவந்தான். இவ்வாறு சோழநாட்டி லிருந்து காலங்கழித்தனர். இச்சரித்திரத்தைச் சென்னை இயற்றமிழாசிரியரும், எமக்குப் போதகாசிரியரும் ஆகிய, அ-வீராசாமிசெட்டியாரவர்கள் எழுதிய விநோதரசமஞ்சரியென்னும் நூலில் சுருக்கமொழியக்காண்க.

முற்றிற்று.

ஸ்ரீமத்பராங்குசாய

# முதற்பாவியற் சுருக்கம்.

## பா - நான்குவகைப்படும்.

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பாஎன.

பாவிற்குரிய உறுப்புகள் அறுவகைப்படும்.

எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடைஎன.

எழுத்து இன்னதென்பதும், அதன்வகையும் எழுத்திலக்கணத்துள் கண்டுகொள்க.

## முதற்பாவியற் சுருக்கம்.

அசை - எழுத்தால் ஆக்கப்படுவது.

அது இரண்டுவகைப்படும்; நேரசை, நிரையசை என.

நேரசை, ஒருகுறிலாவது ஒருநெடிலாவது தனித்தும், ஒற்றடுத்தும் வருவது.

உதாரணம், உ, ஊ, உண், ஊண்.

தனிக்குறில் மொழிமுதலில் விட்டிசைத்துநின்றால் நேரசையாகக் கொள்ளப்படும். உ-ம், வழங்கான் பொருள்காத்திருப்பானேல் அ ஆ.

நிரையசை, குறில் இணைந்தாவது குறில்இணைந்து ஒற்றடுத்தாவது, குறில்நெடில் இணைந்தாவது, குறில்நெடில் இணைந்து ஒற்றடுத்தாவதுவருவது.

உ-ம். நில, நிலம், நிலா, நிலாம்.

சீர் - அசைகளால் ஆக்கப்படுவது.

அது நான்குவகைப்படும்.

ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர், என.

உ-ம். ஓரசைச்சீர் நேர் - நாள். நிரை - மலர். அசைச்சீரெனவும் பெயர்பெறும்.

ஈரசைச்சீர் நேர்-நேர், தேமா, நிரை-நேர், புளிமா, நிரை-நிரை, கருவிளம். நேர்-நிரை, கூவிளம். இயற்சீரெனவும், ஆசிரியவுரிச்சீரெனவும் கூறப்படும்.

மூவசைச்சீர் இருவகைப்படும். நேர் இறுதிச்சீர், நிரை இறுதிச்சீர், என.

நேர் இறுதிச்சீர்.

| | | | | |
|---|---|---|---|---|
| நேர் | நேர் | நேர் | தேமாங்காய் | காய்ச்சீரெனவும், வெண்பா வுரிச்சீரெனவும்படும். |
| நிரை | நேர் | நேர் | புளிமாங்காய் | |
| நிரை | நிரை | நேர் | கருவிளங்காய் | |
| நேர் | நிரை | நேர் | கூவிளங்காய் | |

நிரையிறுதிச்சீர் - நேர் நேர் நிரை, தேமாங்கனி முதலிய நான்கு. இவை வஞ்சியுரிச்சீ ரெனப்படும். இவ்வஞ்சியுரிச்சீ

ரும், நேர் நேர் நேர் நேர் தேமாந்தண்பூமுதலிய பதினாறு நாலசைச்சீரும் வெண்பாவில்வரப்பெறா. ஆதலால் அவற்றை இங்கே காட்டினோமில்லை.

தளை, நின்ற சீரின் ஈற்றசையும், வருஞ்சீரின் முதலசையும் தளையப்பட்டு நிற்பது.

அது எழுவகைப்படும்.

நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர்வெண்டளை, வெண்சீர்வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என.

இயற்சீர்வெண்டளை, வெண்சீர்வெண்டளை இரண்டுமே வெண்பாவிற்குரியன.

இயற்சீர் வெண்டளை, மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது.

(உ-ம்.)

இனையலென் னெஞ்சே யெழுதியாற் பூதார்
நிரைநிரை நேர்நேர் நிரைநிரை நேர்நேர்
கருவிளம் தேமா கருவிளம் தேமா.

முனைவன் கழலை முயங்கு
நிரைநேர் நிரைநேர் நிரைநேர்
புளிமா புளிமா பிறப்பு.

வெண்சீர் வெண்டளை-காய்முன்நேர்வருவது.

(உ-ம்.)

நிதனி னூங்கில்லைப் பேதைநெஞ்சே தண்பூதார்
நேர்நிரைநேர் நேர்நேர்நேர் நேர்நிரைநேர் நேர்நேர்நேர்
கூவிளங்காய் தேமாங்காய் கூவிளங்காய் தேமாங்காய்

வீறுமுனி பூங்கழலை வேண்டு
நேர்நிரைநேர் நேர்நிரைநேர் நேர்நேர்
கூவிளங்காய் கூவிளங்காய் காசு.

அடி - தளை அடுத்து நிற்பது.

அது ஐந்துவகைப்படும்.

குறளடி, சிந்தடி, அளவடி, அல்லது நேரடி, நெடிலடி, கழி நெடிலடி என.

வெண்பாவிற்கு உரியன-சிந்தடியும், அளவடியுமே ஆம். மூச்சீருடைத்தாய் வருவது சிந்தடி. நாற்சீருடைத்தாய்வருவது அளவடி என்க. இவ்விரண்டடியும் மேலைச செய்யுள்களிற் காண்க.

தொடை தொடுக்கப்படுவது.

அத்தொடை இருவகைப்படும், எதுகைத் தொடையும் மோனைத்தொடையுமென.

எதுகைத்தொடை, அடிகள் தோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க, இரண்டாமெழுத்து ஒன்றி வருவதும், அதுவே அன்றி மூன்றாமெழுத்து முதலியன ஒன்றிவருவதும் ஆம்.

இரண்டாம் எழுத்தொன்றிவருவதற்கு, உ - ம். மாமறை நூல் வாழவரு சந்திரன் சுவர்க்கி, தாமரையாள் வைகும் தடந்தோளான். முதலெழுத்தளவொத்தலாவது, மாம என்பதற்கு ஏற்கத் தாம என வருதலன்றித் தம என வாராமை. ஐகார ஔகாரங்களாயின் அவ்வெழுத்துகளே அல்லாமல் குறிலும் வரலாம். உ - ம். பைங்கூர்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து, தங்கோவின்முன்வைத்தார் தாழ்ந்து. ஔகாரத்திற்கு வந்த விடத்திற்காண்க.

மூன்றாமெழுத்து முதலியன ஒன்றிவருவதற்கு.உம்.

கந்திற்பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர, மந்திரத்திறற் பிணிப்பர்மாநாகம். எனவும், போகவினேனென்றுரைத்தான் பூத்தலத்தும் தலத்தும், வாக்கினேரில்லாதமன். எனவும், தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடியகாள், தோளிரண்டு மன்றேருதுணை எனவும் வரும்.

காட்டாதவற்றிற்கு இந்நூலில் வந்தவிடத்தில் கண்டுணர்க.

நான்கடியும் ஓரெதுகையாய்வரின் அச்செய்யுளை ஒருவிகற்பத்தால் வந்ததெனவும், முதலிரண்டடியும் ஓரெதுகையாயும், ஈற்றிரண்டடியும் ஓரெதுகையாயும்வரின் இருவிகற்பத்தால் வந்ததெனவும் வழங்குவர். இவற்றிற்குச் செய்யுள் நான்மணிக் கடிகையில் முறையே இருபத்தாறாவதும், அதை அடுத்ததும் ஆம.

இஃது அல்லாமல் இனவெதுகையெனவும், ஆசெதுகை எனவும் இரண்டுவழங்குவர். இவற்றிற்கு முறையே, உ-ம். பொற்புள்ளதனைப் பிடிப்பானளன்புகுதக், கைக்குள்வருமா மபாற் கழன்றோடி. இது வல்லின எதுகை. இநகர்க்கீதெ ன்பொருட்டா வந்ததென வுரைத்தான், மன்னகற்றுங்கூ ரிலைவேனமன். இதுமெல்லினவெதுகை. இனி ஆசெது கையாவது ஒன்றிவரும் இரண்டாமெழுத்தின்முன் யரலழ இவ்வெழுத்துகளில் ஒன்று வந்திசைவது. உ-ம். மெய்த்திரு வந்துறுறாலும் வெந்துயர்வநதுற்றாலும், ஒத்திருக்குமுள்ளத் துரவோனே என யகரவொற்றும், சேர்நதருளி நின்றதனிச் செங்கோலாயிங்கொழியப், போந்தருளுகென்றான் புலர் ந்து, என ரகரவொற்றும் வந்தமைகாண்க. இடையின வெ துகைகருப, லகரழகரங்கள் ஆசாய்வருமெதுகைக்கும் இந் நூலுள வநத இடத்திற்காண்க.

மோனைத்தொடை.

ஓரடியின்கணுள்ள முதற்சீரின் முதலெழுத்தோடு அவ்வ டியின்மற்ற இரண்டு, மூன்று, நான்காஞ்சீர்களின் முதலெழு த்து ஒன்றிவருவது.

இரண்டாஞ்சீரின் முதலெழுத்து ஒன்றிவருவதற்கு, உ-ம். கொள்ளற்ககோள்ளார் கைம்மேலவா. இது இணைமோனைத் தொடை எனப்படும்.

மூன்றாஞ்சீரின் முதலெழுத்து ஒன்றிவருவதற்கு. உ - ம். மூக்கார்க்கடந்தான் முழுநிலமக்காலத்து, பொழிப்புமோனைத்தொடை.

நான்காஞ் சீரின் முதலெழுத்தொன்றி வருவதற்கு, உ-ம். கள்வமென்பார்க்குந் துயிலில்லை காதலிமாட். ஒரூஉ மோனைத்தொடை.

முதல் முச்சீர்களின் முதலெழுத்தொன்றி வருவதற்கு-உ - ம். வெந்திறற்கண் வேழத்தை வேரிக்கமலத்தின். கூழை மோனைத்தொடை.

முதலிரண்டாஞ்சீரின முதலெழுத்தொழிய மற்ற மூன்று சீரின் முதலெழுத்தொன்றி வருவதற்கு-உ - ம், இனறுமை வேண்டினிரவெழுக விங்கிலத்து. மேற்கதுவாய் மோனைத்தொடை.

ஈற்றிரண்டாஞ் சீரின் முதலெழுத்தொழிய மற்ற மூன்று சீரின் முதலெழுத்தோன்றி வருவதற்கு-(உ-ம்.) நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைசசா. கீழ்க்கதுவாய் மோனைத் தொடை.

நான்குசீரின் முதலெழுத்துகளும் ஒன்றி வருவதற்கு-உ-ம் எள்ளற்கவென்று மெளியவொன்றென்பெறினும். முற்[illegible] மோனைதொடை.

மோனை இரண்டாவது முதலிய சீர்களின் இடையே [illegible]டத்தும் பலவிடத்தும் வருதல் உண்டு. இது சிறுபான்மை உ-ம். அறையும்பறையரவங் கேட்டழிந்துறையும். பலவிடத்து வந்தன, ஓரிடத்து வருதலுககு இந்நூலுள் வந்த இடததிற காண்க.

மோனைககுரிய எழுத்துகள்.

| | |
|---|---|
| அ, ஆ, ஐ, ஔ. | இம்மூவகையில் ஒவ்வோரெழுத்தும்-தன் |
| இ, ஈ, எ, ஏ. | முன்றான் வருதலேயன்றி அவ்வவ்வகையி |
| உ, ஊ, ஒ, ஓ. | ல் ஒன்றுக்கு மற்றொன்று ஒன்றியும்வரும |

## [illegible]ற்பாவியற் சுருக்கம்.

ச, த }
ஞ, ந } இவையும் அவ்வாறும்.
ம, வ }

க, ப, ய — { இம்மூன்றுக்கும் மோனையில் இனமாகக்கூடு-
ம் மெய்யெழுத்தில்லாமையால், ஒவ்வொ-
ன்றும் தனமுன் தானேவரும். யகரமொன்று-
க்கும் உயிரில் இரண்டாவது வருக்கவெழு-
த்துகளில் ஒன்று ஒன்றிவரும்.

வெண்பா-மேற்கூறிய தளை தவறாமல் முதலடி அளவடியாயும், ஈற்றடி சிந்தடியாயும் வந்து காசு, பிறப்பு என்னுங் குற்றியலுகரமும், நாள், மலரென்னும் அசைச்சீரும் ஆகிய வாய்பாடு நான்கனுள் ஒன்றை ஈற்றடியின் இறுதிச்சீராகப்பெற்று முடிவது.

உ-ம். உடலுறையுங் காலமுமில் நாளெனனும் வாய்பாடு. புதுமலரொக்கு நிறம் - மலரென்னும் வாய்பாடு. மற்ற இரண்டு வாய்பாடும் பேறிதனி, இனையலென் என்னும் இரண்டு செய்யுளிலும் முறையே காண்க. சிறுபான்மை முற்றியலுகரவாய்பாட்டாலும் முடியும். உ-ம். போற்றார் முன்னர்ச்செலவு. இது பிறப்பினுளடங்கும்.

### வெண்பா அறுவகைப்படும்.

குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா, கலிவெண்பா என.

ஈளவெண்பாவில் வருவன நேரிசைவெண்பாவும், நான்மணிக்கடிகையில் நேரிசை வெண்பாவும், இன்னிசைவெண்பாவும், பஃறொடைவெண்பாவுமாதலால் அவை இவையாமெனக்காட்டுகின்றாம்.

### நேரிசைவெண்பா இருவகைப்படும்.

இருகுறணேரிசைவெண்பா, ஆசிடைநேரிசைவெண்பா என.

ஒருகுறளேனேரிசைவெண்பா, இரண்டுகுறள்வெண்பாவா யிடையில் முதற்குறள்வெண்பாவின் எதுகைகேற்ற தனிச்சொல்லால் இரண்டாமடி நிரம்பிச் செப்பலோசை வழுவாமல் வருவது.

(உ-ம்.)

புல்ப்புகையின் வீடிப் பொருமுகிற்கு நெஞ்சே
நலத்துணைமற் றியாதுளதோ காடே.பலப்பலநீ
கொள்ளற்க வண்பூதார்க கோதிலெதி ராசன்றன்
விள்ளற்க செந்தமிழால் வேய்.

ஆசிடைநேரிசைவெண்பா முதற்குறட்பாவும், தனிச்சொல்லும் இடையில் வேறுபட்டுவிட்டிசைத்தால், அககுறட்பாவினிறுதியில் ஓரசையையாவது, இரண்டசையையாவது கூட்டி உசசரிக்கப்படுவது.

ஓரசைகூட்டி உசசரிக்கப்பட்ட ஆசிடை நேரிசைவெண்பா-கல்லிறபிறக்குங கதிர்மணிகாதலி, சொல்லிற் பிறக்குமுயர் மதம் - மெல்லெனல். இது இரண்டாம் அடியினீற்றில் மதம் என்னும் ஓரசை கூட்டபபட்டது.

இரண்டசைகூட்டி உசசரிக்கப்பட்ட ஆசிடைநேரிசைவெண்பா - நளவெண்பாவில் முதற்காப்புச் செய்யுள். இதுமுதற்குறட்பாவினிறுதியில், துணையா என இரண்டசைகூட்டி உசசரிககப்பட்டது. இவ்வாசிடைநேரிசை வெண்பாவை நேரிசைவெண்பாவெனப் பொதுப பெயராற் கூறுதலே பெரு வழக்கு.

இன்னிசை வெண்பா ஒரு விகற்பத்தாலும், இரண்டு முதலிய பல விகற்பத்தாலும், முதல் மூன்றடியும் அளவடியாயும், ஈற்றடி சிந்தடியாயும் தனிச்சொலில்லாமல் வருவதும், முதலடி தனிசசொல் பெற்றும், இரண்டாமடி தனிச்சொல் பெற்றும், மூன்றாமடி தனிச்சொல்பெற்றும், நான்கடியும் ஒரு உத்தொடைபெற்றும், வருவதும், நேரிசை வெண்பாவில் இறுதி வேறுபட்டு வருவதும் ஆம்.

முதற்பாவியற் சுருக்கம்.

தனிச்சொலின்றி ஒரு விகற்பத்தால் வந்த செய்யுள்—நான்மணி- உ௬ -வது. தனிச்சொலின்றி இருவிகற்பத்தால்வந்த செய்யுள் ௪-ஆவது. மூன்று விகற்பத்தால் வந்தது. ௭. முதலடி தனிச்சொல் பெற்றது—௧௨. இரண்டாமடி தனிச்சொல் பெற்றது-௮. மூன்றாமடி தனிச்சொல் பெற்றது உ௪- இரண்டடி தனிச்சொல் பெற்றது—காப்பில் உ. மூன்றடி தனிச்சொல் பெற்றது—௧௫. நான்கடியும் ஒரூஉத்தொடை பெற்றது—௪௭.

பஃறொடைவெண்பா நான்கினமிக்க அடியால் வருவது, காப்பில் - முதலாவதும், நூலில் இருபத்தெட்டாவதுமாம்.

செப்பலோசை மூன்றுவகைப்படும்.

தூங்கிசைச்செப்பல், ஏந்திசைச்செப்பல், ஒழுகிசைச் செப்பல் என.

இயற்சீர் வெண்டளையால் வருவது தூங்கிசைச்செப்பல் (உ-ம்.) இனியலென என்னும்பாட்டு.

வெண்சீர் வெண்டளையால் வருவது ஏந்திசைச்செப்பல் (உ-ம்.) பேறிதனி என்னும்பாட்டு.

இவ்விரண்டு தளையும்விரவிவருவது ஒழுகிசைச்செப்பல் (உ-ம்.) புலப்பகையின் வீடி என்னும்பாட்டு.

சீருந்தளையுங் கெடவருமாறில் குற்றிய லிகரமும், குற்றிய லுகரமும், உயிரளபெடையும் அலகுபெறா. ஐகாரக்குறுக்கம் மொழிமுதலில் ஒன்றரைமாத்திரையாயும், இடையிலும், கடையிலும் ஒருமாத்திரையாயும், ஔகாரக்குறுக்கம் மொழிமுதலில் ஒன்றரை மாத்திரையாயும் வரும். இவ்வாறு கொள்ளாவிட்டால் சீருந்தளையுஞ் சிதையுமென்க.

வெண்பாவினுள் மூவசைச்சீரினிடையேயொரோவொற்றுத்தோன்றிக் கனியீற்றுச்சீரவதாயின் அவ்வொற்றை நீக்கி காயீற்றுச் சீராகக்கொள்க. உ-ம். [illegible]செய்த்தான் விளக்கத்தா

பாவ

ளின் மறுத்தான் கண்டு" இவ்வடியில் மூன்றாஞ் சீரினிடைய லும், "தாயின்முலை தானுகர்ந்து தண்பாற் கடலிடையே" இதில் முதற்சீரினிடையிலும், "அடியாற்கெளியன்" என்னும்பாட்டில் "படியின்மிசை" என்னும் தனிச்சொல்லி னிடையிலும் னகரவொற்றும், "ஈதலறந் தீவினைவிட்டீட்டல்பொருளொருஞான்றும்" "திருந்துநதளிர் காட்டித் தென்றல்வரத தேமா" இவற்றில் மூன்றாஞ்சீரி னிடையில் லகரவொற்றும தள்ளுண்டு முறையே கூவிளங்காய், கருவிளங்காய, கூவிளங்காய் என நிற்றல்காண்க. இப்பெற்றி அறியாது "புன்கலவி கொண்டு பெரியோரைப் பொருள்செயாமல், வன்கண்மை பேசுமனமாசசரமாககள்" ஆகிய ஏழைமதிகள் வெண்பாவில் தனிசசீர்வர்தலெனக் குழறித்தம் புல்லறிவை வெளிப்படுப்பர்.

முதற்பாவியற் சுருக்கம்.

முற்றிற்று.

---

வெண்பாப்பாடுவதில் புகழேந்திப்புலவா சிறந்தவ
ரென்பது அடியில் குறிக்கும் அறுசீர்ககழிநெ
டிலாசிரிய விருத்தத்தாலுணர்க.

வெண்பாவிற்புகழேந்தி பரணிக்கோர்செயங்கொண்டான
 விருத்தமென்னும்
ஒண்பாவிற்குயர்கம்பன் கோவையுலாவந்தாதிக
 கொட்டக்கூத்தன்
கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள்வசைபாடக்
 காளமேகம்
பண்பாயபகர்சந்தம்படிக்காச லாலொருவர்
 பாடொணாதே.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# நான்மணிக்கடிகையுரைபாடம்.

நான்கென்னும் வரையறைப்பண்புப்பெயரோடு, வினைத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகப் புணர்ந்து, ஒருசொல்லின் தன்மைப்பட்டுநின்ற மணிக்கடிகை என்னும் பெயர் பண்புத்தொகை நிலைத்தொடராகப் புணர, நிலைமொழியீற்றுயிர்மெய் கெட்டுப் பலசொற்கள் தொக்குநின்ற நான்மணிக்கடிகை என்பது அடியளந்தான், அரவணைச்செல்வன் என்பனபோல ஒருசொல்லின் தன்மைப்பட்டு, இரத்தினத்துண்டம் நான்கினாலமைந்தோ ரணி எனப் பொருள்படுகிறதலால் ஆறும்வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை காரணப்பெயர்; இவ்வணி தன்னை அறிந்து உயர்பொருளாகக் கொண்டணிந்தாருடலை அழகுபெறச் செய்தல்போலச் செய்வனவும் தவிர்வனவுமாகக் கூறப்படும் பொருள் நான்கினாலமைந்த செய்யுள் தன்னையறிந்து உறுதிப்பொருளாக மேற்கொண்டாருயிரை அழகுபெறச்செய்தலால் அச்செய்யுளுக்கு உவமையாகுபெயராய், அச்செய்யுளின்பெயர் அது பலதொக்க தொகையாகிய நூலுக்குச் சினையாகுபெயராய் நின்றது. அச்செய்யுள் பலவற்றால் அமைக்கப்பட்டது நூலாதலால் கருவியாகுபெயரெனினும் ஒக்கும்.

அடியளந்தான், அரவணைச்செல்வன் என்பன அடியளந்தானை, அரவணைச்செல்வனை என உருபேற்றலும், அடியளந்தான் பெரியோன், அரவணைச்செல்வன் உயர்ந்தோன் எனப்பயனிலை கொள்ளும்போல இந்நான்மணிக்கடிகை

என்பது அவ்வாறு உருபேற்றலும், பயனிலைகொள்ளலுமி ல்லாமையால் அப்பெயர்களை உவமையாகக் கொள்ளல் கு ற்றமன்றோ எனின்; தன்பெயர் நான்மணிக்கடிகைஎன இப பெயர் பயனிலையாக நின்றாற்போல இறைவன் அடியளந தான், தனிமுதல்வன் அரவணைச்செல்வன் என அப்பெயர் கள் பயனிலையாகநின்றால் உருபேற்றலும், பயனிலைகொள் ளலும் இல்லையாதலும், இப்பெயர் பயனிலையாகாமல் நின்ற போது, நான்மணிக்கடிகையை முடித்தேன், நான்மணிக்க டிகை முடிந்தது என உருபேற்றலும், பயனிலைகொள்ளலுங காண்க. நான்மணிக்கடிகை என்பதுபோல அவை பலசொ ற்கள் தொக்கு ஒருசொல்லின் தன்மைப்பட்டுநின்ற பெயா களாதலால் உவமையாகக்கொள்ளப்பட்டன என்பதுமறிக. இப்பெற்றியறியாதார் குற்றமெனல் குற்றமென்க. மணிக் குக்கடிகை சினையாவது எவ்வாறெனின், சினைப்பொருளெ ன்பது முதற்பொருளின் ஏகதேசமாதலால் கடிகைமணிககு ஏகதேசமா யமைதலின் சினையாமென்க. மரத்தில் கவடு, கோடு, கொம்பு முதலியனபோல மணியில்கடிகை அவ வாறு தோன்றாமையால் சினையென்றல் பொருந்தாதெனி ன், அற்றன்று; நையாயிகர் அகண்டகாலம், திகஞ், ஆத்து மா, ஆகாயம், மனம், பரமாணு, அபாவம்இவையே நிரவயவ ப்பொருளெனவும், வேதாந்திகள் ஆத்மா, அபாவமென்பன வே நிரவயப்பொருளெனவும் கொண்டிருக்க, அவற்றின்வே றாய் அவயவியாயுள்ள மணிக்குக்கடிகை அவயவமன்றெனல் பருப்பொருளாராய்ச்சியுடையாரது கூற்றென்க. மணிக்க டிகையென்பதை மணியாகிய கடிகையென உரைத்துப்ப ண்புத் தொகைநிலைத்தொடரென்ன லாகாதோ வெனின், மணியினின்றும் வேறுபடுத்திய கடிகைபோலக் குப்பையி னின்றும் வேறுபடுத்திய நெல்லைக் குப்பை நெல்லென்றால் இதனை உறுப்புத்தற்கிழமை யென்னாமல் பண்புத்தொகை நி லைத்தொட ரென்பதுபோலுங் குற்றமாம். இதன்றிறம் இன் னும்விரிக்கின் விரியுமாதலால் விடுத்தனம்.

## கடவுள்வாழ்த்து - வெண்பா.

மதிமன்னு மாயவன் வாண்முக மொக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கர மொக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும் பூவைப்
புதுமல ரொக்கு நிறம்.

(இதன்பதப்பொருள்) மதி - சந்திரனை, மன்னும்-அழியாத, மாயவன் - விசித்திர சக்தியையுடைய இறைவனது, வாள்முகம் ஒக்கும்-விளக்கமாகிய முகம் ஒத்திருக்கும், கதிர் சேர்ந்த ஞாயிறு - கிரணங்கள் நிரம்பிய சூரியனை, சக்கரம் ஒக்கும்- அவனது சுதரிசனமென்னும் சக்கரம் ஒத்திருக்கும், முதுநீர் - நிலையாயுள்ள நீரையுடைய, பழனத்து - வயலில் முளைத்த, தாளின் - தாளிலிருந்து, எதிர் - மேலெழுந்த, தாமரைமலர்- தாமரைப்பூவை, அவன்கண் ஒக்கும் - அவனது கண்களொத்திருக்கும்-பூவைப் புதுமலர், காயாவினது புதிய மலரை, நிறம் - ஒக்கும் - அவனது திருமேனி ஒத்திருக்கும் என்றவாறு.

எல்லாநூலுள்ளும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுதலால் மதி என்றும், நூற்பெயர்க்கொப்ப, இதனுள் வரும் செய்யுளொவ்வொன்றும் நந்நான்குபொருளையே கூறுகின்றமைதோன்ற எடுத்துக்கொண்டநூல் இனிது முடிதற்பொருட்டுச் செய்யும் இக்கடவுள் வாழ்த்திலும் இறைவனுடைய திருமுகமுதலிய நான்கும் மதிமுதலிய நான்கையும் ஒக்குமென்றுங்கூறினர். விரோதவுவமை யணியாகக்கொண்டு சந்திரன் இறைவனுடைய முகத்தை ஒக்கும், சூரியன் சக்கரத்தை ஒக்கும், தாமரைமலர் கண்களைஒக்கும், காயாம்பூ நிறத்தை ஒக்குமென உரைப்பினும் பொருந்தும். நீரினைய தற்கு முது என விசேடணந்தந்தமையால் அதற்கு நிலை நீரெனப் பொருள் சொல்லப்பட்டது. தாளின் என்னும் ஐந்தனுருபு நீங்கற்பொருளது. எதிர் என்னும் வினைத்தொகை மலரென்னும் செய்வதன்பெயரைக் கொண்டது. (க.)

நான்மணிக்கடிகை மூலபாடம்.

படையை மடியகத் திட்டா னடி
முக்காற் கடந்தான் முழுநில மக்காலத்
தாபனி தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்.

(இ-ள்.) படையை - (அவ்விறைவன் தனது சுதரிசன மென்னும்) ஆயுதத்தை, மடியகத்து - (பாரதப்போரில்) ஒளியின்சிறுமையில், இட்டான் - வைத்தான், அடியினால் - தனது சீர்பாதங்களினால், முழுநிலம் - எல்லாவுலகங்களையும், முக்கால் - மூன்றுமுறை, கடந்தான் - தாவியளந்தான், அக்காலத்து - இந்திரன் மழைபெய்வித்தகாலத்தில், ஆப்பணி - பசுக்களினது நடுக்கத்தை, தாங்கிய - ஏற்றுக்கொள்ள, குன்று எடுத்தான் - கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்தான், சோவின் அருமை - (பாணாசுரனுடைய) நெருப்புமதிலினது அருமையை, அழித்தமகான் - அழியச்செய்த பெரியான். எ - று.

சுதரிசனத்தை ஒளியின் சிறுமையில்வைத்தது அருச்சுனன் சயிந்தவனைக் கொல்லும்படிச் சூரியனைமறைக்க அப்படையின் ஒளியைநீக்கி ஏவினது. முழுநிலத்தை முக்காற்கடந்தது மாபலியினிடத்து மூன்றடிமண் இரந்து பூமியையும், சுவர்க்கத்தையும் தனதிரண்டு சீர்பாதங்களாலும் அளந்து மற்றோரடிக்கு அவனைப் பாதாளத்தி லழுத்தியது. குன்றெடுத்தது ஆயர்பாடியிலுள்ளார் மகரசங்கிராந்தியில் இந்திரனைக் குறித்து இட்டபொங்கலைத் தானேற்றுக்கொண்டமையால், அவன் கோபங்கொண்டு பெய்வித்தமழையைக் கோவர்த்தனத்தால்தடுத்தது. சோவினருமையழித்தது உஷாகன்னிகையினிடத்திருந்த அநிருத்தனை மீட்கும்படி சென்றபோது அவள் தந்தையாகிய பாணாசுரன் உருத்திரமூர்த்திமுதலிய பரிவாரங்களோடு எதிர்க்கையில் அவர்கள் யாவரையும் முறியடித்து அவனது அக்கினிக்கோட்டையைஅழித்தது. கோவினருமையழித்த மகனைப் பாடமாயின், பொருள் நப்பின்னைப் பிராட்டிக்காக ஏழு ரிஷபங்களின் அருமையையழி

த்தீ பெரியானென்பது. மகான் என்பது மகனெனக்குறுக்கலாயிற்று. ஆப்பனி ஆ பனி எனத்தொடைநோக்கிப் பகரந்தொகுத்தலாயிற்று. பனிமுதனிலைத் தொழிற்பெயர். படியை மடியகத்திட்டான், அணிதாங்கிய எனவும் பாடமுண்டு. முறையே பூமியைவயிற்றினுள் வைத்தானெனவும், பசுக்கூட்டத்தைத் தாங்கும்படி எனவும் உரைக்க. படியென்றூராயினும் ஒருமொழியொழிதன் இனங்கொளற் குரித்தே என்பதனால் மற்றவுலகங்களையுங்கொள்க. மடிதொழிலடியாகப் பிறந்தபெயர்; மடுபகுதி, இவினை முதற்பொருண்மைவிகுதி, உகரக்கேடுசந்தி; மடுத்தல்-உண்ணல்; அதாவது தன்னிலடக்கலென்பது. (உ.)

## நூல்.

எள்ளற்க வென்று மெளியாரென் றென்பெறினும்
கொள்ளற்க கொள்ளார்கைம் மேலவா-உள்சுடினும்
சிறற்க சிற்றிற் பிறந்தாரைக் கூறற்க
கூறல் லவற்றை விரைந்து.

(இ-ள்.) என்றும்-நட்பாகவருங் காலத்திலும், எளியார் என்று-(வலிமுதலியன) குறைந்தவரொன்று, எள்ளற்க-(பகைவன் ஒருவன்) இகழாதிருக்கக்கடவுன், என்பெறினும்-சிறந்தபொருளைப் பெறுவதாயிருந்தாலும், கொள்ளார்கை-கொள்ளத்தகாதவருடைய கைகள், மேல ஆ-(தன்கைகளுக்கு) மேற்பட்டன ஆகும்படி, கொள்ளற்க-(அப்பொருளை) இரவாதிருக்கக்கடவன், உள்சுடினும்-(வறிய குடியிற்பிறந்தார் செய்கை) மனத்தைவருத்தினும், சிறுஇல் பிறந்தாரை-அவ்வறிய குடியிற்பிறந்தவரை, சீறற்க-சீறாதிருக்கக்கடவன், கூறுஅல்லவற்றை-சொல்லத்தகாத சொற்களை, விரைந்துகூறற்க-(சொல்வதில்) விரைந்து சொல்லாதிருக்கக்கடவன். எ-று.

பகைவனை இகழ்தலாவது தீங்குசெய்யானெனத் தேறி மகிழ்தல். என்று வினாவடியாகப்பிறந்த காலப்பெயர்; எ பகுதி, று காலப்பொருண்மைவிகுதி, நகரம் சந்தி, அது னகர

மானது ,மெலித்தல்விகாரம். உம்மை முற்றுப்பொருள்தருதலால் எச்சவினு எஞ்சாமைப்பொருளது. என் என்பது எவனென்பதன்மரூஉ. அன்று; இஃதோர் விஞப்பெயர். இதனெடு பெறினென்பது இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகப் புணர்ந்தது. "என்னுனும்" "என்னுக்கு" என மூன்ருவதனுருபும், நான்காவதனுருபும் ஏற்றுவருதலுங் காணக. பெறினுமென்ற உம்மை உயர்வுசிறப்பு. சிற்றில் என்பதில் சிறுமை வறுமைக்காயிற்று. சொல்லத்தகாத சொற்கள்பொய், குறளை, வன்சொல், பயனிலாச்சொல். எள்ளற்க எதிர்மறை வியங்கோள்வினை; எள் பகுதி, ள் சந்தி, அல் எதிர்மறைவிகுதி, அனைத்துமொருபகுதி, க வியங்கோள்விகுதி, லகரம் றகரமானது சந்தி. (க.)

பறைபட வாழா வசுணமா வுள்ளம்
குறைபட வாழார் பெரியோர் - நிறைவனத்து
நெறபட்டக் கண்ணே வெதிர்சாந் தனக்கொவ்வாச்
சொற்பட வாழாதாஞ் சால்பு.

(இ - ள்.) அசுணமா - கேகயப்பறவைகள், பறைபட - பறையினெலி (செவியில்) பட்டால், வாழா - உயிர்வாழா, பெரியோர்-மிக்க மானமுடையோர், உள்ளம்குறைபட-(மானக்கேட்டால்) தமதுஉளக்கம் சுருங்கும்படி, வாழார் - உயிர் வாழார், நிறைவனத்து - (மரங்கள) அடர்ந்தவனத்தில், வெதிர் - மூங்கில்கள், நெற்பட்டக்கண்ணே - நெல்லுண்டான போதே, சாம் - அழியும், சால்பு - (பலநற்குணங்களாலும்) நிறைந்தவன், தனக்குஒவ்வாத-தன்னிறைவுக்குத்தகாத, சொல்படவாழாது - சொல்லுண்டாக உயிர்வாழான். எ-று.

அசுணமாவையும், வெதிரையும் பெரியாரோடும், சால்பு டையானெடும் வைத்து உடனெண்ணியபடியால் இது புகழொப்புமைக் கூட்டமென்னும் அணி. முதல்வாக்கியத்தினிறுதியினும், மூன்ரும் வாக்கியத்தி னிறுதியினும் அதுபோல ன்றுஞ் சொற்களை இசை யெச்சமாகக்கொண்டு பொருளுரைத்தின் அவ்விரண்டும் முக்கிய வாக்கியங்களாகாமல் உவ

மையோாக்கியங்களாகல் வேண்டும்; ஆகவேஇச்செய்யுள் நான்குபொருளைக்கூற வந்ததாகாமல் நூறபெயரோடு முரண இரண்டுபொருளைக்கூறியதாகுமாதலால் குற்றமென்க. உளைம் ஊக்கம். பட்டக்கண இறந்தகாலவினையெச்சம்; படு பகுதி, கண் இறந்தகாலவினையெச்சவிகுதி; அ சாரியை, பகுதி முற்றியலுகரமாதலால் டகரம் இரட்டியது விரித்தல் விகாரம், உகரக்கேடும், ககரத் தோற்றமுஞ் சந்தி. வாழாதென்னும் பொருளின் தொழில் சால்பென்னும் அப்பொருளின் பண்பின் மேலேற்றப்பட்டது. ஏ தேற்றம். ஒவ்வாத என்பது ஒவ்வா என ஈறு தொகுத்தலாய் நின்றது. ஒ பகுதி, (இடைசசொல்) ஆ எதிர்மறைவிகுதி, உடம்படு மெய்யாகிய வகரமும், தனிக்குறின் முன்னொற்றாகிய வகரம் இரட்டிய வகரமும்சந்தி, அனைத்துமொரு டகுதி, த்விரித்தல் விகாரம், அ பெயரெச்சவிகுதி. குறைபட வாழாருரவோரெனவும், சொற்பட்டாற்சாவதாஞ் சால்பெனவும் பாடமுண்டு. உரவோர்-அறிவுடையோர். (உ.)

மண்ணி யறிப மணிநலம் பண்ணமைத்
தேறிய பின்னறிப மாநல மாசறச்
சுட்டறிப பொன்னி னலங்காண்பார் கெட்டறிப
கேளிரா லாய பயன்.

(இ - ள்.) மணிநலம் காண்பார் - இரத்தினத்ினது குணத்தை அறியுமியல்பினர், மண்ணிஅறிப - கழுவிஅறிவார்கள், மாநலம் காண்பார் - குதிரையினது குணத்தை அறியுமியல்பினர், பண் அமைத்து-சேணத்தை (அதன்மேல்)பொருந்தவைத்து, ஏறியபின் - ஏறினபின், அறிப - அறிவார்கள், பொன்னின் நலம்காண்பார் - பொன்னினது குணத்தை அறியுமியல்பினர், மாசு அற - குற்ற நீங்கும்படி, சுட்டு அறிப - தீயிற்சுட்டு அறிவார்கள், கேளிரால் - உறவினரால், ஆய பயன்காண்பார் - உண்டாகும்பயனை அறியும் இயல்பினர், கெட்டு அறிப- (தமதுசெல்வம்) கெட அறிவார்கள். எ - று.

காண்பாரென்னும் வினையாலணையும் பெயரை முன்னும் பின்னுங்கூட்டுக. இது இடைநிலைப்பொருட்டுவகவணி.

இச்சொல்லில் பகரம் தன்மையையுணர்த்தியது. இவ்வாறன்றி நிகழ்காலம் இயல்பினால் எதிர்காலமாகவந்த காலவழுவமைதி யெனினும் ஒக்கும். அறிய பல்லோர் படர்க்கை எதிர்கால வினைமுற்று; இதில் பல்லோர்படர்க்கை எதிர்காலத்தை உணர்த்தியது விகுதியாகிய பகரமாம். ஆய என்பது செல்வங்கெட்டகாலத்துக்கேளிரால் ஆகும்பயன் தோன்றியே விடுமென்னுந் துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகவந்த காலவழுவமைதி. பண்ணமைத் தென்றதனால் மா குதிரைக்காயிற்று. பொன்னுக்குமாசாவது வெள்ளிமுதலிய உலோகத்தோடு கலந்தகுற்றம். கேளிர் பண்படியாகப்பிறந்த பல்லோர்படர்க்கைப்பெயர்; கேள் பகுதி, இர் பல்லோர்படர்க்கை விகுதி. கெட்டு கெட என்பதன் திரிபு. பயன்குறிவினை மகரவீற்றுமொழியாதலால் மகரத்துக்கு னகரம் போலியாக வந்தது. (௩.)

கள்ளி வயிற்றி னகில்பிறக்கு மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கு மறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி.

(இ - ள்.) அகில் - அகிற்கட்டை, கள்ளிவயிற்றின் பிறக்கும் - கள்ளிமரத்தினுள்ளே பிறக்கும், ஒள் அரிதாரம் - ஒண்மையாகிய அரிதாரம், மான் வயிற்றின் பிறக்கும் - மான் வயிற்றிற் பிறக்கும், பல் விலையமுத்தம் - மிக்க விலையுள்ளமுத்துகள், பெருங்கடலுள் பிறக்கும் - பெருமையாகிய கடலிற்பிறக்கும், நல் ஆள்-நற்குண நற்செய்கைகளை ஆளுதலுடையான், பிறக்கும் குடி - பிறக்குங் குடியை, அறிவார்யார்-முன் அறியவல்லவர் யாவர் ஒருவருமிலர். எ - று.

அகில்பிறக்கும், நல்லாள்பிறக்கும் என்பன எழுவாய்த்தொகா நிலைத்தொடர்களாதலால் நிலைமொழியீற்று மெய்கள் இயல்பாயின. அகில் வேறுமரமாயினும் முதிர்ந்த கள்ளியினுள்ளீடு அகிற்கட்டை போல மணமுடையதாதலால் அதனை அகிலென்றார். இதனை "பேய்பிளந்தொக்க

நின்றவர் பெருங்கள்ளியின், தாய்பிளர்ந்தக்க காரகில்க ளும்" னுங் கம்பநாடர் செய்யுளானுமுணர்க. கள்ளி என்றது சதுரக்கள்ளியை. அதனுள்ளிடத்தது வயிறென்றது இலக்கணை. பல்விலைய என்பதில் பல்என்பது குடத்துள்ள நீரை ச்சிறிதென்னுமல் சிலவென்பதுபோல மிக்கதென்னும் பொருள்பட வந்ததாதலால் வழக்கெனக. விலைய பொருளடியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; வில் பகுதி, ஐ தொழிற்பெயர்விகுதி; இது பொருளுக்குத் தொழிலாகுபெயராய் நின்றது; இதுவே பகுதி, ய் சந்தி, அ பெயரெச்சவிகுதி. ஆள் தொழிலாகுபெயர். நற்குண நற்செய்கையுடையானை நல்லாளென்றது ஓர்குறிப்பு. யார் யாவரொன்பதன் மரூஉ, "யாஅருவகத்தோர் சொல்லில்லார்" என்பதுபோல இது இலவொன்னும் பொருளில் வந்தது. (௪.)

கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயர்மதம் - மெல்லென்
றருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்.

(இ - ள்.) கதிர்மணி - கிரணங்களையுடைய இரத்தினம், கல்லில்பிறக்கும்- மலையில் பிறக்கும், உயர்மதம் - மிக்க காம மயக்கம், காதலி - விரும்பப்பட்ட நாயகியினது, சொல்லில் பிறக்கும், இன் சொல்லிலேபிறக்கும், அறநெறி - அறம் நடக்கும் வழி, மெல் என்ற - மென்மையான, அருளில் பிறக்கும் - கருணையில் பிறக்கும், எல்லாம் - (அறமுதலிய) எல்லாம், பொருளில் பிறந்துவிடும் - செல்வப்பொருளில் பிறந்துவிடும். எ-று.

அறமுதலிய ஆவன அறமும், இன்பமும், கருதியது முடித்தலும், மதிப்பும், புகழுமென்பன. கல் கருவியாகுபெயர். மெல்லென்ற இடைச்சொ லடியாகப்பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம்; மெல்லென் பகுதி, ற் இறந்தகால இடைநிலை, அபெயரெச்சவிகுதி. இது ஈறுதொகுத்தலாயிற்று. இது உயர்முதலிய சொற்களை அடுத்தேவரும்: பிறந்துவிடும் எ

திர்காலச் செய்யுமென்முற்று ; பிறபகுதி, த் சந்தி, து சாரியை, விடுதுணிவுப் பொருண்மைவிகுதி, அனைத்துமொரு பகுதி, உம் எதிர்கால முற்றுப்பொருண்மைவிகுதி, உகரக்கேடு சந்தி. (ரு.)

திருவொக்குந் தீதி லொழுக்கம் பெரிய
அறனொக்கு மாற்றி னொழுகல் - பிறனைக்
கொலையொக்குங் கொண்டுகண் மாறல்புலையொக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு.

(இ-ள்.) தீது இல் ஒழுக்கம்-(ஒருவர்தம்வருணத்துக்கு) குற்றம் உண்டாகாத ஒழுக்கம், திரு ஒக்கும்-செல்வத்தை ஒக்கும், ஆற்றின் - இல்லறவழியில், ஒழுகல் - (தவறாமல்) நடத்தல், பெரிய அறன் ஒக்கும் - சிறந்த துறவறத்தை ஒக்கும், பிறனைக்கொண்டு-(ஆராயாமல்) பிறனொருவனை நட்புக்கொண்டு, கண்மாறல் - புறங்கூறல், கொலைஒக்கும் - கொலையை ஒக்கும், போற்றாதார் முன்னர்செலவு-(ஒரு பயன்பெறவேண்டி) பகைவரிடத்துச் செல்லுதல், புலை ஒக்கும் - (கீழானோரது) இழிதன்மையை ஒக்கும். எ-று.

துறவறம் உடம்பினிடத்தும் செல்வத்தினிடத்தும் முள்ளபற்றை விடுவதாதலால் அதனருமைநோக்கி அதனைப் பெரிய அறனென்றார். கண்மாறல் நான்காம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர் ; விரிந்தால் கண்ணுக்கு மாறலென விரியும், பொருள் ஒருவனுக்கு எதிரில் இன்சொற்கூறிப்புறத்தில் அதற்கு மாறாகக் குற்றங்கூறல். புலை பண்புப்பெயர், புல்பகுதி, ஐ பகுதிப்பொருள் விகுதி. இவ்விகுதியை வெள்ளை, தொல்லை என்பவற்றிலுங்காண்க. முன்னர் பண்புப்பெயர் ; முன்பகுதி, நர் பகுதிப்பொருள் விகுதி, நகரம் னகரமானது சந்தி. ஐ விகுதி ஏற்றுமுன்னை எனவும், அம் விகுதி ஏற்று முன்னம் எனவும், பு விகுதி ஏற்று முன்பு எனவும் வரும். பின்னென்பதும் ஐ விகுதி ஒழிந்த மற்றவிகுதிகளை ஏற்றுவரும். இம்முன்னரென்பது பண்புப் பொருளொழிந்து ஏழாவதனிடப் பொருளாகவந்தது. போற்றாதார் பல்வேறு

படர்க்கை எதிர்மறை வினையாலணையும்பெயர்; போற்று ருதி, (பொருள்வணங்கல்) ஆ எதிர்மறை விகுதி, உகரக் -டு சந்தி, அனைத்துமொருபகுதி, த் எழுத்துப்பேறு, ஆர் ப லோர் படர்க்கைவிகுதி. தகர எழுத்துப்பேறு அச்சொல் ருபேலாதபோதும் வினையாலணையும் பெயரொன்பதற்குச் றந்தகுறி என்க. பிறனைக் கொலையொக்கும் கொன்றுண் ஆற்றல் எனவும் பாடமுண்டு. பிறனைக்கொன்று - அய லை வருத்தி, உண்ணும் ஆற்றல் - (அவனிடத்தில் பறித்த பொருளால்) சீவனம் பண்ணுகின்ற வல்லமை, கொலைஒக் கும் - (அவனை) கொல்லுதலை ஒக்கும். எ-று. உண்ணுமெ ன்னும் பெயரொச்சம் ஆற்றலென்னும் கருவிப்பெயர் கொ ண்டது. (சு.)

கள்வமென் பார்க்குந் துயிலில்லை காதலிமாட்
டுள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை யொண்பொருள்
செய்வமென் பார்க்குந் துயிலில்லை யப்பொருள்
காப்பார்க்கு மில்லை துயில்.

(இ-ள்.) கள்வம் என்பார்க்கும் - (பிறர்பொருளை) கள செய்வோமென்று சோர்வு பார்ப்பவருக்கும், துயில் இல் லை - நித்திரையில்லை, காதலிமாட்டு - விரும்பப்பட்ட நாயகி யினிடத்து, உள்ளம்வைப்பார்க்கும்-உள்ளத்தை (இடைவி ாது) வைப்பவருக்கும், துயில் இல்லை - நித்திரையில்லை, ஒ -பொருள் - ஒள்ளியபொருளை, செய்வம் என்பார்க்கும்- தேடுவோமென்று கருதுவார்க்கும், துயில் இல்லை-நித்திரை யில்லை, அப்பொருள் காப்பார்க்கும்-தேடியபொருளை (கள் -கொள்ளாமல்) காப்பவர்க்கும், துயில் இல்லை-நித்திரையி ல்லை. எ-று.

இந்நால்வருக்குந் துயிலில்லை எனவே அருத்தாபத்தியாக் கள்ளே மென்பார்க்குந் துயிலுளது காதலிமாட், டுள்ளம் வையார்க்குந் துயிலுள தொண்பொருள், செய்யேமென்பார் க்குந் துயிலுண்டுறுபொருள், காவார்க்குமுண்டு துயில். என் ன்க. கள்வம் தன்மைப்பன்மை எதிர்காலவினைமுற்

று. இதன் முதனிலையடியாகக்கெடுதல், கெட்ட, கட்டு, கட்டான் என வினைவிகற்பம்பிறக்கும். துயில் முதனிலைத்தொழிற்பெயர். விகுதிபெறின்துயிலல், துயில்கை, துயில்வு, துயிறல் எனவரும். ஒருவனைப் பலருள்ளும் ஒளியுடையவனுக்குதலால் ஒண்பொருளென்றார். இது பண்புத்தொகை நிலைத்தொடர்; விரிந்தால் ஒண்மையாகிய பொருளென விரியும். இல்லை ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவாயினும் இங்கு ஒன்றன்பாற் படர்க்கைக் குரியதாய்நின்றது. உம்மை நான்கனுள் முதலிலுள்ளது எதிரதுதழீஇய எச்சவும்மை, ஈற்றிலுள்ளது இறந்ததுதழீஇய எச்சவும்மை, இடையேநின்ற இரண்டில் ஒவ்வொன்றும் முன்னின்றதைநோக்க இறந்ததுதழீஇய எச்சவும்மையும், பின்னின்றதை நோக்க எதிரதுதழீஇய எச்சவும்மையுமாம். (எ.)

கற்றார்முற் றோன்றா கழிவிரக்கங்
காதலித்த தொன்றுற்றார்முற் றோன்றா வுறாமுதல் - தெற்றென
அல்ல புரிந்தார்க் கறந்தோன்றா வெல்லாம்
வெகுண்டார்முற் றோன்றா கெடும்.

(இ-ள்.) கற்றார்முன் - (நூல்களை) கற்றறிந்தவரிடத்து, கழிவு இரக்கம்-கழிந்தபொருளுக்கு இரங்குதல், தோன்றா-உண்டாகா, காதலித்த ஒன்று - விரும்பப்பட்ட ஒருபொருளை, உற்றார்முன் - தேடத்தொடங்கினரிடத்து, உறாமுதல்-(அப்பொருள்) கிடையாதகாரணங்கள், தோன்றா-உண்டாகமாட்டா, தெற்றென - தெளிய, அல்லபுரிந்தார்க்கு - தீவினைகளை விரும்பிச்செய்தவர்க்கு, அறம்தோன்றா - அறசெய்கைகள் தோன்றமாட்டா, வெகுண்டார்முன் - கோபித்தவரிடத்து, எல்லாம் - (பிறர்கூறும்) நன்மைகளெல்லாம், தோன்றாகெடும்-தோன்றாதனவாகிக் கெடும். எ-று.

காதலித்த என்னும் பெயரடியாகப்பிறந்த பெயரெச்சம் ஈறுதொகுத்தலாய் நின்றது. கழிவு தொழிலாகுபெயர். காரணம் காரியத்தின் முன்புள்ளதாதலால் அதனைப் பண்பாகுபெயரால் முதலென்றார். ஒன்று எண்ணலளவை யா

குபெயர். பின்னே அறமென்றமையால் அல்லவென்னும் பண்படியாகப் பிறந்தபெயர் தீவினைக்காயிற்று; இது குறிப் வினைப்பெயருமாம், பொருள் கழியுமுன் பலவகையா ம் உபகார முடைமைபற்றி அப்பலவகையுங் கருதி யிர குதலால் இரக்கத்தையும், காதலித்த ஒன்றை அடையா மைக்கு இடையூறுகளாகிய ஏதுக்கள் பலவுண்டாதலால் மு லையும் பலவின்பாலாற் கூறினர். முதல் தோன்றாமையா வது அடைய வேண்டுமென்னும் அவாவால் அவ்வேதுக்க ளை நினையாமை. அறமாவது மனுமுதலிய நூல்களில் விதித் தனசெய்தலும், விலக்கிய ஒழிதலுமேயாயினும் விலக்கிய வற்றை அல்ல என முற்கூறினமையின் பின்னே அற மென்றது விதித்தனவற்றை எனக்கொள்க. தெற்றெனஅல் லபுரிதல் அறிந்தும் அல்லவற்றைச்செய்தல். ஈற்றில்உள்ள தோன்றா வினைமுற்று வினையெச்சமானது. தோன்றாக்கெடு மெனப்பாடமாயின் தோன்றாதென்னும் வினையெச்சத்திறு தொகுத்தலெனக்கொள்க. உற்றார் முற்றோன்றாவுறுமது எ னவும், உராவுதல்எனவும் பாடமுண்டு. அவற்றிற்கு முறை யே துன்பங்களும், கோபித்து உரத்துப்பேசுதலும் எனப் பொருளுரைக்க. அவை தோன்றாமையாவது விரும்பின பொரு ளொன்றைத்தேடத் தொடங்கினவர் துன்பங்களை இன்பங்களாகக் கொள்வாரென்பதும், பிறர்செய்யும் அவ மதிப்புக்குக் கோபங்கொள்ளா ரென்பதும் கருத்தாகக் கொள்க. (அ.)

நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்
குளத்துக் கணியென்ப தாமரை பெண்மை
நலத்துக் கணியென்ப நாணந் தனக்கணிதான்
செல்லு முலகத்த றாம்.

(இ-ள்.) நிலத்துக்கு- மருதநிலத்துக்கு, நெல்லும் கரும் பும்- நெற்பயிரையும் கரும்பின்பயிரையும், அணி என்ப-அழ கென்றுசொல்லுவர், குளத்துக்குத்தாமரை - குளத்தினுக்குத் தாமரைமலரை, அணிஎன்ப-அழகென்று சொல்லுவர், பெ

ன்மை நலத்துக்கு-பெண்தன்மைக்குரிய கற்பாகிய நன்மைக்கு, நாணம்-நாணமுடைமை, அணிஎன்ப-அழகென்றுசொல்லுவர், தனக்கு அணி- (அக்கற்புடையாளோடுகூடிய) ஒருவனுக்கு அழகாவது, செல்லும் உலகத்தது என்ப - இனிச் செல்லும் உலகத்துக்குத் துணையாகிய அறமென்று சொல்லுவார். எ - று.

நெல்லுங்கரும்பும் அணிஎன்றமையால் நிலம் மருதநிலத்துக்காயிற்று. நெல்கரும்பு இரண்டும் காரணவாகுபெயர். தாமரை சாதியொருமை; அது முதலாகுபெயர். பெண்மை கட்புலனாகியதோர் அமைதித்தன்மை என்பர் நச்சினார்க்கினியார். பெண்மையை முற்கூறியபடியால் தனக்கென்பது ஆண்மகனுக்காயிற்று. உலகத்தது இடமடியாகப்பிறந்த குறிப்பு வினைப்பெயர்; உலகம் பகுதி, அத்து, அ சாரியை, து ஒன்றன்படர்க்கை விகுதி, பகுதியீற்று மகரக்கேடும், சாரியை முதலீறுகளிலுள்ள அகர உகரக்கேடும் சந்தி. இது செல்லுமென்ற குறிப்பால் அறத்துக்காயிற்று. அழகைத்தருவனவற்றை அழகென்றது காரணத்தைக் காரியமாகக் கூறுவதோருபசாரவழக்கு. தாமரைப்பன்மை எனவும், நலத்துக கணியென்ப நாணந்தனக்கணி, தான்செல்லுலகத்தறம் எனவும் பாடமுண்டு. (கூ.)

கந்திற் பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர
மந்திரத் தாற்பிணிப்பர் மாநாகம் - கொந்தி
இரும்பிற் பிணிப்பர் கயத்தைச்சான் றோரை
நயத்திற் பிணித்து விடல்.

(இ - ள்.) களிற்றை-யானையை, கந்தின் பிணிப்பர்-(பாகர்கள்) கட்டுத்தறியினாலே தம் வசப்படுத்துவார், மாநாகம்-சிறந்த சர்ப்பத்தை, கதம்தவிர - அதன்கோபம் நீங்கும்படி, மந்திரத்தால் பிணிப்பர் - (மாந்திரியர்) மந்திரத்தினால் தம் வசப்படுத்துவார், கயத்தை-கீழ்மக்களை, கொந்தி- (அரசர் ஆயுதங்களால் அவருடலை) கொத்தி, இரும்பின் பிணிப்பர் - இருப்புவிலங்கால் தம் வசப்படுத்துவார், சான்றோரை - (கல்வி

யறிவு ஒழுக்கங்களால்) நிறைந்தவரை, நயத்தின் பிணித்துவிடல் - (அறிவுடையோர்) இன்சொற்களால் தம் வசப்படுத்திவிடக்கடவர். எ-று.

பிணித்தல் கட்டுதல். இரும்பு காரணவாகு பெயர். கொந்தி இறந்தகால வினையெச்சம்; இச்சொல்லைப் பெயர்ச்சொலாகக்கொண்டு கொந்தி யிரும்பென்பதனைக் கொந்தியாகிய இருப்பாயுதமெனப் பொருள்பட இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைப் புணர்ச்சியெனச் சொள்ளலுமாம். கொந்து பகுதி, இ கருவிப்பொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி. கயம் பண்பாகுபெயர்; கயம் பெருமை, இது கீழ்மக்களுக்கானது வழக்கெனல் நச்சினார்க்கினியார் மதம். நன்னூலார் மங்கல வழக்கென்பர். ஐந்தனுருபு மூன்றும், மூன்றனுருபொன்றும் கருவிப் பொருளில்வந்தன. இரும்பிற்பிணிப்பர் கயவர்ச் சான்றோரை எனவும் பாடமுண்டு. (க௦.)

கன்றாமை வேண்டுங் கடிய பிறர்செய்த
நன்றியைச் சொல்லாக் கொளல்வேண்டு மென்றும்
விடல்வேண்டுந் தங்கண் வெகுளி யடல்வேண்டும்
ஆக்கஞ் சிதைக்கும் வினை.

(இ-ள்.) பிறர்செய்தகடிய - (ஒருவர் தமக்கு) மற்றவர்செய்த அஞ்சத்தக்க தீச்செயல்களில், கன்றாமை வேண்டும் - வயிரங்கொள்ளாதிருத்தலே தகுதி, பிறர்செய்த நன்றியை - (தமக்கு) பிறர்செய்த உபகாரத்தை, சொல்லாது - நினைக்காமல், கொளல்வேண்டும் - மறவாதிருத்தலே தகுதி, என்றும் - (பிறர்) பொறுக்கக்கூடாத தீங்கு செய்த காலத்தும், தங்கண் வெகுளி - தம்மிடத்துண்டாகும் கோபத்தை, விடல்வேண்டும் - ஒழிதலே தகுதி, ஆக்கம் - (தமது) செல்வத்தை, சிதைக்கும் வினை - கெடுக்குந் தொழிலை, அடல்வேண்டும் - கெடுத்தலே தகுதி. எ-று.

கடிய உரிச்சொலடியாகப்பிறந்தபெயர்; கடி பகுதி, ய் சந்தி, அ பலவின்படர்க்கை விகுதி. பண்படியாகப்பிறந்த

பெயரொனின், அ என்னும் பலவின்படர்க்கை விகுதிப்புண ர்ச்சியில் கடுமை என்னும் பகுதி, மை விகுதிகெட்டு, இடை உகரம் இகரமாகி, யகரமாகிய உடம்படு மெய்ச்சந்திபெற்ற தென்க. கொல்லாதென்னும் எதிர்மறைவினையெச்சம் ஈறு தொகுத்தலாய் நின்றது. உம்மை உயர்வுசிறப்போடு முற்று ப்பொருளது. வெகுளி தொழிற்பெயர்; வெகுள் பகுதி, இ புடைபெயர்ச்சிவிகுதி. ஆகுதற்குக் காரணமாகிய செல்வத் தை ஆக்கமென்றது காரியவாகுபெயர். தொழிலாகு பெயரு மாம். இயல்பாகிய ஆ என்னும்பகுதி குச்சாரியை பெற்று நின்றமையால் அம் விகுதிப்புணர்ச்சியில் ஆக்கமென விகா ரப்பட்டது. வினை முதனிலைபெருதொழிற்பெயர். வேண் டும் தேற்றப்பொருள் பட்டேவரும் தொழிற்பெயர். நன்றி யை நன்றுக்கொளல் வேண்டுமெனப் பாடமாயின், ஒருவர் செய்த உபகாரத்தை உறுதியாக மனத்தில்கொள்ளுதல்வே ண்டுமென உரைக்க. (கக.)

*பல்லினு னோய்செய்யும் பாம்பெலாங் கொல்லேறு
கோட்டானோய் செய்யுங் குறித்தாரை யூடி
முகத்தானோய் செய்வர் மகளிர் முனிவர்
தவத்தாற் றருகுவர் நோய்.

(இ-ள்.) பாம்பு எல்லாம் - எல்லாச்சாதிப்பாம்புகளும், பல்லினால் நோய்செய்யும்-(தீங்குசெய்த பிறரை) விஷப்பல் லால் துன்பஞ்செய்யும், கொல்ஏறு-கொல்லு மியல்புடைய எருதுகள், குறித்தாரை - (நோய்செய்ய) குறிக்கப்பட்டவ ரை, கோட்டால் நோய்செய்யும்-தம் கொம்புகளால் துன் பஞ்செய்யும், மகளிர் - பெண்கள், ஊடி - பிணங்கி, முகத் தால் நோய்செய்வர்-(தம் கணவரை) முகக்குறியால் துன்ப ஞ்செய்வர், முனிவர் - முனிவர்கள், தவத்தால் - தவத்தின் வல்லமையால், நோய்தருகுவர்-(தம்மை அவமதித்தவருக்கு) துன்பத்தைக்கொடுப்பார். எ-று.

பாம்பு, எருது, மகளிர்செய்யும் நோய்க்கும், முனிவர் செய்யும் நோய்க்கும் வேற்றுமையுள தென்பதும், எல்லா

வுயிர்களையும் தம்மோடொக்க நோக்குபவரென்பதுந் தோன்றத் தவத்திறற்செய்குவர் நோயென்றது தவத்தாற்றருகுவர் நோயென்றார். அந்நோய்களோடு இந்நோயிடை வேறுபாடுமையாவது பாம்புசெய்நோய் மந்திரமருந்துகளாலும், எருதுசெய்நோய் மருந்தினாலும், மகளிர்செய்நோய் இன்சொற்கூறியிரத்தல், வணங்கல்களினாலும், பரிகாரமுண்மையும், முனிவர்செய்நோய்க்கு அவர்களருளன்றி அவ்வாறு வேறுபரிகாரமின்மையுமாம். மகளிர் பொருளடியாகப்பிறந்தபெயர்; மகபகுதி, ள் விகுதி, இரண்டுறுப்பால் முடிந்துநின்ற பெண்பாற்படர்க்கைப்பெயர் பகுதி, இர்பல்லோர்படர்க்கைவிகுதி; ளகரவிகுதி எனக்கொள்ளாமல் அள்விகுதி எனக்கொள்ளின் விகுதிமுதல் அகரக்கேடு பெற்றதென்றுவது, பகுதியீற்று அகரக்கேடு பெற்றதென்றுவதுகூறலுமாம்; அக்கேட்டைமுறையே முதற்குறை, கடைக்குறையென்க. நோய்செய்யுமென்பதை ஒருசொல்போலக் கொள்ளாது நோனைச்செய்யுமென இரண்டாவதை விரிகின் குறித்தாரை என்றும் இரண்டாவதைக் குறித்தாருக்கு என நான்காவதாகவாவது குறித்தாரிடத்து என ஏழாவதாகவாவது திரித்துக்கொள்க. தருகுவரென்பது இடவழுவமைதி. நன்- பொ- சூ - "தரல்வரல்கொடை செலல்சாரும்படர்க்கை, யெழுவாயிரண்டும் எஞ்சியஏற்கும்" கொல்களிறு கோட்டானுய்ச்செய்யும் எனவும் பாடமுண்டு. (கஉ.)

பறைநன்று பண்ணமையா யாழி னிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரின் - பண்ணமிழ்ந்
தார்தலி னன்று பசித்தல் பசைந்தாரின்
றீர்தலிற் றீப்புகுத னன்று.

(இ-ள்.) பண் அமையா-நரம்பினால்கட்டுதலமையாத, யாழின் - யாழிசையினும், பறைநன்று - பறையோசைநன்மையுடையது, பீடு இல்லாதமாந்தரின்-பெருங்குணமில்லாத ஆடவர் தன்மையினும், நிறை நின்ற - மனத்தைக்கற்புவழியில் நிறுத்தலமைந்த, பெண்நன்று-பெண்தன்மை நன்மை

யுடையது, பண்அழிந்த-பதனழிந்த உணவுகளை, ஆர்தலின்-உண்ணுதலினும், பசித்தல்-பசியால்வருந்துதல், நன்று-நன்றுடையது, பசைந்தாரின் - உள்ளன்பு உடையாரினின்றும், தீர்தலின்-நீங்கி உயிர்வாழ்வதினும், இப்புகுதல்-நன்றுதீயில் நுழைதல் நன்மையுடையது. எ-று.

பறை, யாழ்கருவியாகுபெயர். பெண், நித்தியபகுவசனாகியமார்ந்தர் பொருளாகுபெயர்கள். சுற்றிலுள்ள பண் என்னும் ஆதனிலேத்தொழிற்பெயர் சமைத்தலால் ஆகும் பதந்தக்கு ஆதலால் காரணவாகுபெயர். தொழிலாகு பெயருமாம். ஐந்தனுருபுநான்கும் எல்லைப்பொருளன. பசைந்தாரினென்னும் ஐந்தனுருபு நீங்கற்பொருளது. பெருங்குணம் செய்தற்கரியவற்றைச் செய்தல், கருவமில்லாமை, பிறர் குற்றங்கூறாமை முதலியாதற்குணம். நன்று நான்கும்பண்பாடியாகப் பிறந்தகுறிப்புவினைமுற்று, மை யீறுகெட்டுநின்ற நல்பகுதி, று ஒன்றன்பட்ர்கைவிகுதி, பகுதியீற்று லகரம் னகரமாகத் திரிந்தது சந்தி, அது னகரமானது மெலித்தல்விகாரம். இங்கு நன்மை இன்பமெனக்கொள்க. நிறைதொழிற்பெயர்; நிறுபகுதி, ஐ புடைபெயர்ச்சிவிகுதி, உகரக்கேடு சந்தி. நில் என்னும் தன்வினைப்பகுதியை பிறவினைப்பகுதியாக்கியது றுவ் விகுதிஎன்க. நிறைநின்ற எழுவாய்த்தொகாநிலைத் தொடராகக் கொள்ளுதலேஅன்றி, நிறையில்நின்ற எனப்பொருள்கொண்டு ஏழாம் வேற்றுமைத்தொகை நிலைத் தொடராகக் கொள்ளினும் பொருந்தும். (கஅ.)

> வளப்பாத்தி யுள்வளரும் வண்மை கிளைக்குழாம்
> இன்சொற் குழியு ளினிதெழூஉம் வன்சொலாம்
> காடெழூஉங் கண்ணில் குழியு ளிரவெழூஉம்
> இன்மைக் குழியுள் விரைந்து.

(இ-ள்.) வண்மை - ஈகையாகியபயிர், வளபபாத்தியுள் வளரும் - (நல்லோருடைய) செல்வமாகிய பாத்தியில் வளரும், கிளைக்குழாம்-சுற்றத்தின் கூட்டமாகியபயிர், இன்சொற்குழியுள்-இன்சொல்லாகிய பாத்தியில், இனிது எழும் - இ

டையூறில்லாமல்வளரும், வன்சொல் ஆம்கா - கடுஞ்சொல்லாகியசோலை, கள்இல் குழியுள் - கண்ணோட்டமின்மையாகிய விளைநிலத்தில், எழும்-வளரும், இரவு-இரத்தலாகியபயிர், இன்மைக்குழியுள் - வறுமையாகியபாத்தியில், விரைந்து எழும்-விரைவாகவளரும். எ-று.

மூன்றாவது வாக்கியந்தவிர மற்றமூன்றுவாக்கியமும் ஏகதேச வுருவகவணி. உணவுமுதலியனபெற்றே உயிர்வாழ வேண்டுதலால் இரவு விரைந்தெழுமென்றார். பொருளுடையநல்லோரிடத்து ஈகையும், இன்சொல் கூறுவானிடத்துப் பலருமுறவாதலும், தாட்சிணியமில்லாதவனிடத்துக் கடுஞ்சொற்பிறத்தலும், வறியானிடத்து இரத்தற்றொழிலும் உள்ளனவாமென்பது கருத்தாகக்கொள்க. கிளை உவமையாகுபெயர். கிளைக்குழாம் ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். கண்ணனது தொழிலாகிய ஓடுதலுக்கானது காரணவாகுபெயர்; அதுதான் சென்றபோது அவனோடுபழகினவர் சொல்லியவற்றை மறுக்கமாட்டாத தன்மைக்கானதும் அவ்வாகுபெயரே ஆம். கண் இல் எழுவாய்த்தொகாநிலைத் தொடராயினும் ஒருசொல்போலநிற்க, இதனோடு குழியென்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடராகப்புணர்ந்தது. உருவகமாதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடரென்றாம். வன்சொற், கரவெழுங்கண்ணில் குழியினெனவும்பாடமுண்டு. பொருள்.—வல்சொல்-கடுஞ்சொல்லால், கரவு - (உடையானாயிருந்தும்) இல்லையெனமறுக்கும பயிர், கண் இல்-தாட்சிணியமின்மையாகிய, குழியின் - பாத்தியில், எழும்-வளரும் என உரைக்க. (௪௪.)

இன்னாமை வேண்டி னிரவெழுக விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.

(இ-ள்.) இன்னாமைவேண்டின் - (ஒருவன்) இழிவை விரும்புவானானால், இரவு எழுக - (மானங்கெடவரும்) இரத்

